# பக்தியே முக்திக்கு எளிய வழி





தமிழ் வடிவம், விளக்க உரை

## இராமநாதன் பழனியப்பன்

உ

# பக்தியே - முக்திக்கு எளிய வழி

ஆதி சங்கர பகவத் பாதர்

அருளிய சிவானந்தலஹரியில் இருந்து

பகவான் ரமண மகரிஷி

திரட்டி அருளிய பத்துப் பாடல்கள்




தமிழ் வடிவமும், விளக்க உரையும் வழங்கியவர்

இராமநாதன் பழனியப்பன்

# பக்தியே - முக்திக்கு எளிய வழி


- உரிமை : ஆசிரியருக்கு
- பொருள் : ஆன்மிக விளக்கம்
- ஆசிரியர் : இராமநாதன் பழனியப்பன்
- ஓவியர் : திரு. மணியம் செல்வன்
- பதிப்பாளர் : இராமநாதன் பழனியப்பன்
  "ஸ்ரீ புவனேஸ்வரி"
  3362 AX, 11வது மெயின் ரோடு,
  அண்ணாநகர் மேற்கு, சென்னை - 600 040.
- முதற்பதிப்பு : ஏப்ரல், 2017 - 1000 பிரதிகள்
- அச்சிட்டோர் : ஏசியன் பிரிண்டர்ஸ், சென்னை - 600 014.
- பக்கங்கள் : xxviii + 132 = 160
- விலை : ₹ 80/-
- வடிவமைப்பு : திரு. PL. செந்தில்குமார்,
  SS Graphics, Chennai - 600 053.
- நூல் கிடைக்குமிடம் : ஸ்ரீ ரமணாச்ரமம்,
  ஸ்ரீ ரமணாச்ரமம் போஸ்ட்,
  திருவண்ணாமலை, 606 603
  தொலைபேசி : 91-4175-237200
  மின்னஞ்சல் : ashram@sriramanamaharishi.org



அருள்மிகு செல்வமூர்த்தி விநாயகர்
பொன்.புதுப்பட்டி



உண்ணாமுலை அம்மை உடனாய அண்ணாமலையார்

உ

# சமர்ப்பணம்

ஏதுமிலா எளியேனையும் ஒரு ஆளாக்கிய
என் மாதா, பிதா, குரு, தெய்வமே!
நான் கற்று உணர்ந்ததை
மற்றவரிடம் பகிர்ந்து கொள்ள
ஆக்கிய இந்த நூலினை
என் தலை தாழ்த்தி உங்கள்
திருத்தாள் மலர்களில் சமர்ப்பிக்கிறேன்.
ஏற்று, அருள் பாலித்திடுக!

*- இராமநாதன் பழனியப்பன்*

# பொருளடக்கம்

பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்,
இரத்தினகிரி - கீழ்மின்னல் - 632 517
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு



கோவில் : 04172-266350
அலுவலகம் : 04172-266330
பள்ளி : 04172-269420
மருத்துவமனை : 04172-266320
email : arulasi@gmail.com

உ

# அருளுரை

12.8.2016

அன்புடையீர்,

அருளாசி!

சிறந்த மனிதனுடைய அறிவுக்குத் தகுந்த பயன் என்னவெனில் மீண்டும் இந்த உலகில் வந்து பிறந்து உழலாமல் முக்தி நிலை பெற வேண்டும் என்பதே.

அனைத்து உயிர்களையும் நோக்கும் போது ஆறறிவு படைத்த மனிதனே சிறந்தவன் என்பது அறிஞர் முடிவு.

''மக்கள் தாமே ஆறறிவுயிரே'' என்பது தொல்காப்பியம். எடுத்த பிறப்புக்குப் பயன், அடுத்த பிறவி எடுக்காமல் முக்தி நிலையைப் பெற, பக்தி நெறியே சிறந்த வழி.

*''முக்தி நெறி அறியாத மூர்க்கரொடு*
*முயல்வேனைப்*
*பக்தி நெறி அறிவித்துப்*
*பழவினைகள் பாறும்வண்ணம்*
*சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி*
*எனையாண்ட*
*அத்தன் எனக்கு அருளியவாறு*
*ஆர்பெறுவார் அச்சோவே''*

*— மா.வா.— தி.வா. 51.1*

என்பது திருவாசகம்.

வீடு பேற்றினை அதாவது முக்தி நிலையை அறியாதவரோடு - அறியாத மூர்க்கரோடு சேர்ந்து

அவர்களின் வழியில்லா வழியில் - நெறியில்லா நெறியில் நின்ற மணிவாசகருக்கு பக்தி நெறியைக் காட்டி, பழைய வினைகள் தொலையும்படி அன்பு நெறியைத் தெளியவைத்து, மூல மலத்தினையும் போக்கி ஆண்டு கொண்டவன் அன்னையப்பனான சிவன்.

இதிலிருந்து **பக்தி நெறியே முக்திக்கு எளியவழி** என்பது தெளிவாகிறது!

இக்கருத்தின் அடிப்படையில் அன்பர் **திரு இராமநாதன் பழனியப்பன்** அவர்கள் இந்த நூலை ஆன்மிக மணம் கமழும் வகையில் அருமையாக எழுதியுள்ளார்.

இவர் செய்வன திருந்தச் செய்யும் செம்மையுடையவர் என்பதனை இந்நூலின் வழி மெய்ப்பித்திருக்கிறார் என்பதை நூலைப் படிக்கும் - கற்கும் அனைவரும் அறிவர்.

நூல் "முக்திக்கான நெறிமுறைகள்" என்ற கட்டுரையில் தொடங்கி "பகவான் ரமண மகரிஷி திரட்டிய 10 பாடல்களின் விளக்கவுரை" என்ற கட்டுரை வரை 7 கட்டுரைகளாக எடுத்துக் கொண்ட தலைப்புகளின் வழி விளக்கப்பட்டுள்ளன. அனைத்திலும் பற்பல நூல்களிலிருந்து சான்றுகள் கொடுத்திருப்பது இவரின் பல நூல் பயிற்சியைத் தெளிவு படுத்துகின்றன.

**மானுடக் குறிக்கோளே முக்தி** - இக்குறிக்கோளைப் பெற **கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம்** ஆகியவையே அடிப்படை. இவற்றை விளக்கக் **கீதை** தொடங்கி **கவிஞர் கண்ணதாசன்** வரையில் சான்றுகள் வழங்கியுள்ளது அருமை.

பக்தி நெறியைப் பின்பற்றுபவர்கள் கற்றார் - கல்லார் அனைவரும் என்பதால் அவர்களுக்கேற்ப விரித்துச் சொல்ல வேண்டியவற்றை விரித்தும் ஏனையவற்றைச் சுருக்கியும் எளிமையும் - தெளிவும் மிளிரும் வகையில் விளக்கப்பட்டுள்ளன.

நம் முன்னோர்கள் அருமையான பக்தி நூல்கள் அனேகம் எழுதியுள்ளனர். அவற்றை எல்லாம் படித்து முடிக்கக் காலம் - நேரம் போதாது. எனவே ஆன்றோர்கள் பல நூல்களைப் படித்து அவற்றில் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்துத் திரட்டித் தந்துள்ளனர். அவை **திரட்டுகள்** என்று வழங்கப்படுகின்றன.

அவற்றுள் **கீதாசாரம், அகத்தியர் தேவாரத் திரட்டு** என்பவை குறிப்பிடத்தக்கவை என்று அன்பர் நூலில் தெளிவாக விளக்கியுள்ளார்.

**ஆதி சங்கர பகவத் பாதர்** வழங்கியுள்ள **"சிவானந்தலஹரி"** என்ற நூலின் விளக்கத்தை, **பகவான் ரமண மகரிஷி,** சிவானந்தலஹரித் திரட்டு என்ற 10 பாடல்களைத் திரட்டித் தந்துள்ளார். அதன் மூல வடிவமும் - அவற்றிற்குரிய தமிழ் வடிவமும் நூலில் இடம் பெற்றுள்ளன.

பக்தி நெறியைக் கடைப்பிடிக்க ஒருவன் எடுத்த பிறவி ஒரு தடை இல்லை என்பன போன்ற சிந்தனைகள் உள்ள பாடல்களில் சொல்லியுள்ள கருத்துக்களும், தத்துவங்களும் அருமையாக விளக்கப்பட்டுள்ளன. அவற்றைப் படிப்பவர்கள் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்துப் பிறவிப் பெருங்கடலைக் கடந்து முக்தி நிலை பெற முயல்வர் என்பதில் ஐயம் இல்லை.

துறவிகள் கூடத் தாயன்பைத் துறக்காதவர்கள் என்பது வரலாறு. **பட்டினத்தார் தன் தாய் வீடுபேறடைந்ததை** அறிந்து விரைந்து வந்து ஈமச்சடங்கில் கலந்து கொண்டு "எப்படி என் தாயின் சிதைக்குக் கொள்ளிவைப்பேன்?" என்று வருந்திப் பாடினார் என்று கூறுகிறது அவர் வரலாறு. எல்லாம் துறந்த **ஆதி சங்கரரும் தன் தாயின் ஈமச் சடங்கில்** கலந்து கொண்டிருக்கிறார். அவர் தன் தாயிடம் "உன் மன நிம்மதிக்காக வேணும் அந்த நேரத்தில் (வீடு பேறடையும் நேரத்தில்) உன் பக்கத்திலேயே இருப்பேன். உனக்கான இறுதிச் சடங்குகளை நானே செய்வேன், அந்த நேரத்தில் நீ என்னை நினைத்தால் போதும். உடனே நான் வந்து விடுவேன்" என்று முன் வாக்குக் கொடுத்த வண்ணமே செய்தார் என்ற செய்தியை நூலில் தக்க இடத்தில் தக்கமுறையில் கூறியுள்ளார்.

மூலப்பாடல்களை நூலாசிரியப் பெருந்தகை தமிழ்ப் படுத்திக் கூறியுள்ளதும் படிப்பவர் மனதில் படியும் வண்ணம் உள்ளது. மூலத்திலிருந்து மாறுபடாமல் பொருளுடன் தமிழாக்கம் செய்திருப்பதாக அவரே கூறியுள்ளார். ஒரு பாடலின் தமிழ் வடிவம் இது!

*அம்மை உமையின் அன்புக் கணவரே!*
*உம்மைத் தூமலர் தூவித் தொழுதிட*
*ஆழக் குளங்களிலும், அடர்ந்த காடுகளிலும்*
*விரிந்து உயர்ந்த மலைகளிலும்*

*மலர்களைத் தேடி அலைகின்றனரே,*
*இந்த அறிவிலி மாந்தர்!*
*தம் மனமெனும் குளத்திலேயே உள்ள*
*உள்ளமெனும் ஒரு உன்னதத் தாமரைமலரை*
*மட்டும் உனக்குச் சமர்ப்பித்து விட்டு*
*அங்குமிங்கும் அலைந்து திரியாமல் அமைதியாக*
*வீட்டிலேயே இருக்க அவர்களுக்குத் தெரியவில்லையே!*

*பாடல் 8 – சி. ல. 9*

மொழிபெயர்ப்பும் பொருள் விளக்கமும் தெளிவாக இருக்கின்றனவன்றோ!

**"பகவான் ரமண மகரிஷி"** என்ற கட்டுரை ரமணரின் வாழ்க்கை விளக்கமாகவும், அவரின் தத்துவத் தெளிவாகவும் அமைந்து அனைவரையும் ஈர்க்கும் தன்மையில் உள்ளது. **திருச்சுழி**யில் பிறந்த **வெங்கட்ராமனைத்** தந்தையின் மறைவும், **சேக்கிழாரின் பெரிய புராணமும்** மடை மாற்றியுள்ளன; அவரின் துறவுக்கு வழிகோலி யுள்ளன. அவரைத் **திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர்** ஈர்க்க அங்கு **"ரமணர்"** ஆனார். ரமணாச்ரமம் கண்டு பலருக்கும் ஆன்மிக விளக்கம் தந்து திகழ்ந்தார்.

உலகம் எதை எதை **"நான்"** என்று நினைக்கிறதோ அவை எதுவும் "நான்" அல்ல! நான் என்பது **ஆத்ம சொரூபமே.** "ஈசன், உலகம் ஆக எல்லாம் சிவரூபம். அதுதான் "நான்!", என்பது **ரமணரின் "நான்"** என்பதன் விளக்கம்!

பத்தாம் வகுப்பு மட்டுமே படித்திருந்த ரமணர் பன்மொழிப் புலவராகவும் விளங்கினார். தமிழில் சிறந்த கவிஞராகவும் திகழ்ந்தார். ரமணரது சீடர் ஒருவர் "நீங்கள் **'நான்'** அல்ல என்று அனுபவத்தால் உணர்ந்தது என்கிறீர்களே! அதை எப்படிக் கூறுகிறீர்கள்?" என்று கேட்க, அதற்குப் பதிலாக **அருணகிரியாரின்** கீழ்க்கண்ட பாடலின் திரண்ட கருத்தினையே ரமணர் கூறினார் என்பர்!

*தேன் என்று பாகுஎன்று உவமிக்*
*கொணாமொழித் தெய்வவள்ளி*
*கோன் அன்று எனக்கு உப தேசித்தது*
*ஒன்று உண்டு, கூறுவற்றோ?*

*வான்அன்று, கால்அன்று, தீஅன்று*
*நீர்அன்று, மண்ணும் அன்று*
*தான்அன்று, நான்அன்று, அசரீரிஅன்று*
*சரீரி அன்றே!*

*— அ.நா. — க.அல. பாடல் 9*

இது போன்று ரமணர் பற்றி அறியத்தக்க அரிய பல தகவல்களைக் கொண்டுள்ளது இக்கட்டுரை.

எளிமையான ஒரு பக்திப் பாதையைச் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் **"சிவானந்தலஹரி"** என்ற நூலில் உள்ள 100 பாடல்களில் 10 பாடல்களின் திரட்டு ஒன்றை ரமணர் திரட்டியுள்ளார். அந்தப் பத்துப் பாடல்களும் தமிழ் வடிவத்துடன் நூலில் இடம் பெற்றுள்ளன. இப்பத்துப் பாடல்களின் விளக்கம் நூலில் பாதிப் பகுதியாக அமைந்துள்ளது. அவ்வளவு விரிவாக அவை விளக்கப்பட்டுள்ளன!

மொத்தத்தில் காலத்துக்கேற்ற கருத்துக் கருவூலமாக நூல் அமைந்துள்ளது. **பக்தி வழி முக்தி பெற** வழிகோலுகிறது. படித்துப் பயன் பெற வாழ்த்தி மகிழும்,

***- பால முருகனடிமை***



Sri Ramakrishna Math

31 Ramakrishna Math Road
Mylapore, Chennai-600 004
✆ : 24621110 (4 Lines); Fax: 24934589
email: mail@chennaimath.org
website: www.chennaimath.org

# ஆசியுரை

"இந்த முறை **அவதாரம் தெற்கில் நிகழ்ந்தது.** ஆம், மகத்தான **சங்கரர்** தோன்றினார். பதினாறு வயதிற்குள் அந்தப் பிராமண இளைஞர் தமது நூல்கள் அனைத்தையும் எழுதி முடித்ததாகக் கூறப்படுகிறது. அந்தப் பதினாறு வயது இளைஞரின் எழுத்துக்கள் இன்றைய நவீன உலகின் விந்தைகளாக உள்ளன. அந்த இளைஞரும் அதுபோலவே ஆச்சரியமானவர். இந்தியாவின் அப்பழுக்கற்ற தூய்மையை அவர் மீண்டும் கொண்டு வர விரும்பினார்" என்று **ஆதிசங்கரரைப்** போற்றுகிறார் **சுவாமி விவேகானந்தர்.**

அத்வைத ஆனந்தத்தில் திளைத்த ஆதிசங்கரர் சிவானந்த வெள்ளத்தில் ஆழ்ந்தது எவ்வாறு?

**மல்லிகார்ஜுன க்ஷேத்திரத்தில்**, கிருஷ்ணா நதிக்கரையில் மலைப்பகுதியின் இயற்கைச் சூழலில் சீடர்களுடன் வந்து கொண்டிருந்தார் ஆதிசங்கரர். அங்கே ஓர் அர்ஜுன மருதமரம்.

அதைச் சுற்றி வாசத்தை வீசியபடி படர்ந்துள்ள மல்லிகைக் கொடி. மரத்தின் அடியில் சிவலிங்கம். அந்தச் சூழலில் தம்மை, தம் தத்துவத்தைக் கடந்து நின்றார். சிவானந்தப் பெருவெளியில் ஒன்றினார். சிவனடிச் செல்வனானார். அவரது அதரங்களி லிருந்து ஆனந்த வெள்ளம் - சிவானந்த வெள்ளம் வார்த்தை வடிவில் பொங்கிப் பெருகி வந்தது.

அதுவே **சிவானந்தலஹரி!** மல்லிகார்ஜுனப் பெருமானைப் போற்றும் நூறு பாடல்கள்.

அருமையான அந்த நூறு பாடல்களையும் பொருளுணர்ந்து பாடிப் பரவ முடியவில்லையே என ஆதங்கப்பட்ட ஆசிரம அன்பர்களுக்கு அவற்றிலிருந்து **பத்து முத்தான பாடல்களைத் திரட்டி அளித்தார் பகவான் ஸ்ரீரமணர்.** எண் வரிசைப்படி இல்லாமல், எண்ணம் பக்தியில் உறையும் வண்ணம் வரிசைப்படுத்தி அளித்தார்.

**'பக்தியே-முக்திக்கு எளிய வழி'** எனும் இந்த நூலில் அந்தச் சிறப்பான பத்துப் பாடல்களின் பொருளை நன்குணர்ந்து, அவற்றிற்கான தமிழ் வடிவங்களையும், கேள்வி - பதில் முறையில் விரிவான விளக்கங் களையும் ஆசிரியர் எழுதி வழங்கியுள்ளார்.

இந்த நூலைப் படிக்கும் அன்பர்கள் அதற்கேற்ப மன லயிப்பையும் பக்தி லயத்தையும் ஒருங்கே பெற்றுத் தயார் நிலையை அடைய ஆதிசங்கரர் மற்றும் ஸ்ரீரமணரின் சுருக்கமான வரலாறுகளும் அழகுற இணைக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீரமணரின் திரட்டினை அனுபவித்துப் படிக்கப் பல்வேறு சிவபக்தர்களின் பாடல்களின் மேற்கோள்களையும் கொடுத்து நமக்கு உதவுகிறார் ஆசிரியர்.

அன்பர்கள் நூல் காட்டும் பக்திப் பாதையில் பயணித்து முக்தி ஆனந்தத்தைப் பெற பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பிரார்த்திக்கிறோம்.

இறைவன் தொண்டில்

***சுவாமி விமூர்த்தானந்தர்***
**மேலாளர்**

Sri Ramanasramam
Sri Ramanasramam PO, Tiruvannamalai, Tamil Nadu - 606 603



6.3.2017

ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

# அணிந்துரை

**ஆதிசங்கரர்** ஒரு முழுமையான அத்வைத ஞானியாகத் திகழ்ந்த போதிலும் சாமானிய மக்களும் எளிதில் பரம லக்ஷ்யமான அத்வைத ஸ்திதியை அடைய **பக்தி மார்க்கத்தைச் சிலாகித்துப்** பல பக்திப் பாக்களை இயற்றியுள்ளார். அவற்றுள் **சௌந்தர்ய லஹரியும் சிவானந்த லஹரியும்** தனித்த தன்மை வாய்ந்தனவாகத் திகழ்கின்றன.

பகவான் ஸ்ரீ ரமண மகரிஷிகளும் தனது உபதேசங்களை சம்பாஷணையாக பக்தர்களுக்கு விளக்கியருளும்போது பக்தி மார்க்கத்தைச் சிறப்பித்துக் கூறுவதுண்டு. பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க, **பகவான் ரமணர்,** சிவானந்த லஹரியிலிருந்து **பக்தி மார்க்கத்தை பிராமாணமாகக் கொண்ட பத்துப் பாடல்**களைத் தேர்ந்தெடுத்து அவற்றை வரிசைப்படுத்தி அருளியுள்ளார்.

ஆசிரியர் திரு. **இராமநாதன் பழனியப்பன்** பகவான் தேர்ந்தெடுத்த பாடல்களைப் பிராதானமாகக் கொண்டு ஆதிசங்கரரின் சமஸ்கிருதப் பாடல்களை எளிய தமிழில் **''பக்தியே - முக்திக்கு எளிய வழி''** என்ற தலைப்பில் ஒரு புத்தகமாக

கொணர்ந்துள்ளார். இந்நூலைப் படிப்பவர்க்கு ஏதுவாக, சைவ வைணவ பக்தி நெறிமுறைகள், தமிழ் சமஸ்கிருதத்தில் அமைந்துள்ள பக்தி இலக்கியங்கள் ஆகியவற்றைத் தகுந்த இடங்களில் மேற்கோள்காட்டியும் ஆதிசங்கரர் மற்றும் பகவான் ரமண மகரிஷிகளின் வாழ்க்கைக் குறிப்புகளையும் தொகுத்து வழங்கியுள்ளார்.

ஆன்மிகக் கதைகளையும், நிகழ்வுகளையும் ஆங்காங்கே சுவைபட இணைத்து ஒரு வரையறைக்குள் அடக்கியுள்ளதால் **இந்நூல் சுவை திகட்டாத ஒரு பக்தி இனிப்பாக** வாசகர்களுக்கு இருக்குமென்று நம்புகிறோம். இந்நூலில் ஆய்வு செய்யப்பட்டிருக்கும் விஷயங்களை ஆதாரமாகக் கொண்டு மேலும் விஸ்தாரமான ஆராய்ச்சி நூல்கள் வருங்காலங்களில் வெளிவருவதற்கும் இந்நூல் ஏதுவாக அமையும்.

ஆசிரியரின் இந்த முயற்சி வெற்றி பெற ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்து அமைகிறோம்.

ஸ்ரீ பகவான் பணியில்,

V.S.R.

வே.சு. ரமணன்

தலைவர்

Telephone: (91) 4175 - 237200 / (91) 9244937292
Email: ashram@sriramanamaharshi.org
Website: www.sriramanamaharshi.org

**பேராசிரியர் வி.கிருஷ்ணமூர்த்தி**

சி003 பூர்வா ஃபேர் மவுண்ட்
24 மெயின் 25 குறுக்கு
எச்.எஸ்.ஆர்.லேஅவுட் செக்டார் 2
பெங்களூர் - 560102
செல்: 99868 06853

6.8.2016

# அணிந்துரை

பல நூற்றாண்டுகளுக்குமுன் **ஆதிசங்கரர்** இயற்றிய **சிவானந்தலஹரி**யின் நூறு சுலோகங்கள் ஒவ்வொன்றும் பக்தியின் மேன்மையை உயர்த்திக்காட்டியவை. சென்ற நூற்றாண்டில் **ரமண மகரிஷி** ஒரு அடியாருக்காக அவைகளில் பத்தே சுலோகங்களைப் பொறுக்கி அவை இருந்த வாசையை மாற்றியமைத்து இவையே முக்திக்குப் போதுமானவை என்று கூறியதாகச் சொல்லப் படுகிறது. இந்தப் பத்து சுலோகங்களுக்கு ரமணரின் சிவானந்தலஹரித் திரட்டு என்று பெயர் சூட்டி, அதையே மூலக்கருத்தாகக் கொண்டு **'பக்தியே - முக்திக்கு எளிய வழி'** என்ற இந்நூலை இயற்றி இருக்கிறார் **திரு. இராமநாதன் பழனியப்பன்.** 'நுண்மாண் நுழைபுலம்' சாலப்பொருந்திய இவ்வாசிரியர், ஏற்கனவே மூன்று மாபெரும் நூல்களை இயற்றி தனக்கென வகுத்துக்கொண்ட பாணியில், தமிழ் மக்களுக்கும் அவர்கள் மூலம் ஏனைய உலகனைத்திற்கும் தற்சமயம் வழங்கி யிருக்கும் இந்நூலால் அரியபெரிய கருத்தாழம் கொண்ட ஓர் ஆன்மிகப் புதையலையே உருவாக்கி யுள்ளார்.

ஏறக்குறைய ஆறு நூற்றாண்டுகளுக்குமுன் **மதுசூதனசரஸ்வதி** என்ற ஓர் அத்வைதமேதை வடமொழியில் அவர் இயற்றிய **'பகவத்பக்தி ரஸாயனம்'** என்ற நூலில் **பக்தி இல்லாத**

**முக்தி இல்லை** என ஏராளமான சான்றுகளுடனும் காரணங்களுடனும் உறுதிப்படுத்தி இருக்கிறார். திரு இராம பழனியப்பன் இன்றளித்திருக்கும் அதே வகையிலுள்ள இந்நூல் சிறியதாயினும் பெரும்பயன் தரக்கூடியது. **பகுத்தறிவை மீறிய எதுவுமே இல்லை என்று மெய்ப்பொருளறியாது பேசும் இன்றைய நாத்திகனையும் தோத்திரம் படிக்க வைக்கும் வல்லமையுள்ளது.** எத்தனை மேற்கோள்கள்! எத்தனையெத்தனை இணைக் கருத்துக்கள்!! அத்தனையும் தமிழ்க்கடலினுள்ள ஆன்மிக ஊற்றில் கடைந்தெடுத்த நன்முத்துக்கள். **தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருக்குறள், பெரியபுராணம், புறநானூறு, அபிராமி அந்தாதி** ஆக இன்னும் பல.

தமது திரட்டின் மூன்றாவது பாடலாக **ரமணர் தேர்வு செய்த சிவானந்தலஹரியின் 83வது பாடல், பக்தியை யாரிடம் செலுத்துவது** என்பது இதற்கு இவ்வாசிரியர் சூட்டிய தலைப்பு. பிறப்பு, இறப்புச் சங்கிலிக்குட்பட்ட தெய்வங்களை வழிபடுவதால் பயனில்லை; பரமனையே வழிபட வேண்டும் என்பது கருத்து. பரமனைக் குறிப்பிட ஆதி சங்கரர் மூலத்தில் ***ஸாம்பமீசம்*** எனும் ஒரு சாதாரண வழக்கிலுள்ள சொற்றொடரைத்தான் பயன்படுத்தியிருக்கிறார். ***ஸாம்பம், ஈசம்*** என்ற இவ்விரு சொற்கள் 'அம்மையுடன் கூடிய அப்பனை' அதாவது, அம்மையப்பனைக் குறிப்பன. உடனே நம் பழனியப்பன் வானத்திற்குப் பறந்து விடுகிறார். ஈசன் முழுமுதல் தெய்வமானாலும் அடியார்க்கு அருள்பாலிக்கும் **சக்தியை** தனது இடப்பாகத்திலிருக்கும் **உமையிடம்** வழங்கியுள்ளார் என்று தொடங்கி அதே மூச்சில் மெய்கண்டசாத்திரங்களிலுள்ள **சிவஞானசித்தியார்** என்ன, **சேர்த்தித் திருக்கோலத்**தைப் பற்றிய **சம்பந்தர் தேவாரமென்ன, மணிவாசகரின் திருவெம்பாவை**யென்ன, "தனித்திருக்கும் சிவனால் எதுவுமே செய்ய முடியாது!" என்று ஆதிசங்கரரே பறைசாற்றும் **ஸௌந்தரியலஹரியென்ன**, இப்படி ஒவ்வொன்றையும் நம் மனக்கண் முன்னே கொண்டுவந்து நிறுத்தும் ஆசிரியரின் கலை நயம் அருமையிலும் அருமை.

இப்படி பற்பல. விரிந்துரைக்கின் இவ்வணிந்துரை நீண்டுவிடும். ரமணர் தேர்ந்தெடுத்திருக்கும் ஒவ்வொரு பாடலுக்கும், ஏன் இந்தப் பாடலைப் பொறுக்கினார், ஏன் இதற்கு இவ்வரிசைக்கிரமத்தில் இத்தனையாவது பாடலாகக் கொண்டார் என்பதற்கெல்லாம் நமது ஆசிரியர் கூறும் வாதங்கள் பாராட்டுக்குரியவை.

இவ்வாசிரியர் முறைப்படி தமிழ்மறைகளனைத்தையும் பயின்றிருக்க வேண்டும். பகவான் ரமணர் எடுத்துக்கொடுத்த சங்கரரின் சுலோகம் ஒவ்வொன்றிலும் இவர் காட்டும் **ஒப்புமைகள்** அனைத்தும் மிகச் சிறப்பாகப் பரிமளிக்கின்றன. அவை எங்கிருந்து எடுக்கப்பட்டனவோ அவ்வருளாளர்களனைவரும் - **சைவக்குரவர் நால்வர், அருணகிரி நாதர், திருமூலர், தேவரிஷியான நாரதர், வைணவ ஆழ்வார்கள், திருவள்ளுவர், தாயுமானவர்,** ஆக இன்னும் பலர் - இவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து **'பக்தியே - முக்திக்கு எளிய வழி' என்று முரசு கொட்டி ஒலிப்பதை** நாம் உணரலாம்.

அலைமகளும் கலைமகளும் சேர்ந்து புறத்திலும் அகத்திலும் நம் ஆசிரியரிடம் குடிபுகுந்திருப்பது நாம் எல்லோரும் அறிந்ததே. கூடவே தெய்வத்திருவருளும் பூரணமாக அவரது மனத்தில் எப்பொழுதும் ஒளிர்ந்து கொண்டிருப்பதை, இந்நூலை மேலெழுந்தவாரியாக அணுகுபவர்கள் கூடப் புரிந்து கொள்வார்கள். **இந்நூலைப் படிப்பவர் யாவர் மனத்திலும் அத்திருவருள் நிறைவு கொள்ளும் என்பது என் முழு நம்பிக்கை.**

இந்நூலுக்கு அணிந்துரை எழுதும்படி என்னைப் பணித்ததற்கும் இதன் மூலம் ஆன்மிக ஏணியில் நானும் ஒரு படி உயர எனக்கு ஓர் வாய்ப்பளித்ததற்கும் திரு. பழனியப்பன அவர்களுக்கு என் நன்றியும் என் நல்லாசியும் உரித்தாகுக.

***- வி.கிருஷ்ணமூர்த்தி***

பேராசிரியர் கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஒரு **கணித மேதை.** அத்துடன் ஆன்மிகத்திலும் ஆழங்கால்பட்ட முதியவர். இந்து தர்மம் சார்ந்த பல ஆங்கில ஆன்மிக நூல்களைப் படைத்து அருளியவர். **சிருங்கேரித் திருமடத்தில்** இருந்து வெளிவரும் "தத்வலோகா" என்ற பத்திரிகைக்கு ஒவ்வொரு மாதமும் பல தொடர்க் கட்டுரைகள் எழுதி வழங்கி வருபவர். இணைய தளத்தில் இவரது பக்கங்கள் (Blogs) உலகின் பல நாடுகளில் படிக்கப் பெறுகின்றன. தவிர Youtube-ல் **கீதையை ஆங்கிலத்தில் விளக்கம் கூறிப்** பரப்பி வருகிறார். இப்பெரியவரது முயற்சிகள் அனைத்தும் மிகுந்த வெற்றி பெற இறைவனின் திருத்தாள் மலர்களில் என் சென்னி பதித்து வேண்டுகிறேன்.

**- ஆசிரியர்**

நெரூல் **ரா.ராமகிருஷ்ணன்**

4 சுந்தர் சுவரூப்,
செக்டார் 4, நெரூல்,
நவி மும்பை-400 706

உ

# அணிந்துரை

***'சம்போ : மூர்த்தி : சரதி புவனே சங்கராசார்ய ரூபா'*** - பரமசிவனே ஆதிசங்கரராக அவதரித்தார். 'அரிது அரிது மானுடராய்ப் பிறப்பது அரிது' - மனம் என்கிற ஆறாவது அறிவு படைத்தவனே மனிதன். அவன் மிருகத்தனமாகச் சாப்பிடுவது, தூங்குவது, இனம் பெருக்குவது என்றில்லாமல், **சிவன் - சிவனிடமே இணைந்திட** வழி கோரினான். ஆழ்ந்த, உயர்ந்த மனதுள்ளவர்க்கு **ஞான மார்க்கம் - அத்வைதம்** எனவும், அத்தனை பக்குவம் பெறாத மனதுள்ளவர்களுக்கு **பக்தி மார்க்கம் - ஷண்மதம்** எனவும் வழி வகுத்தார். எவ்வுருவம் சார்ந்ததானாலும் **ஆழ்ந்த வழிபாடே - முக்தி - அத்வைத நிலையைப் பெற்றுத் தரும்** எனப் பல நூல்கள், துதிகள் எழுதினார்.

**பகவத் கீதை, நாரத பக்தி சூத்ரம், சாண்டில்ய பக்தி சூத்ரம்,** முதலியவை பக்தியின் தன்மை, மஹிமை கூறும். ஆதி சங்கரரின் **ஸௌந்தர்ய லஹரி** தேவியின் வர்ணனை கூறும். **சிவானந்த லஹரி** 100 துதிகளால் சிவபக்தி - மஹிமையைக் கூறும்.

ஆதி சங்கரர் ஞான பக்தர் என்றால், **ரமண மஹரிஷி கந்த அவதாரம்** என **சேஷாத்ரி ஸ்வாமி**கள், மற்றும் **கணபதி முனிவரால்** புகழப் பெற்றவர். **வள்ளிமலை சச்சிதானந்த ஸ்வாமி**கள் அவரைப் **பழனியாண்டவராகவே** தரிசித்தவர். **தக்ஷிணாமூர்த்தி** போன்ற மௌன குரு. ஆக, அவர்

ஒரு ஆதி குருகுஹர். அவர் உபதேசம் மௌனமே! பேசுவது என்பது துர்லபம்.

சிவானந்தலஹரியிலிருந்து Fast Food Concept போல் 10 இரத்தினங்களைப், பக்தி சிந்தாமணியாக ரமணர் திரட்டினார். அந்தத் திரட்டுப்பாலில், தேன், பாதாம், திராட்சை, கஸ்தூரி, பிஸ்தா, ஏலக்காய், லவங்கம், கல்கண்டு, பச்சைக் கற்பூரம் போன்ற மண, சுவைப் பொருட்களைச் சேர்த்து, அதற்கு விரிவுரையாக உயர்திரு இராமநாதன் **பழனியப்பன் 'பக்தியே - முக்திக்கு வழி'** என்ற இந்நூலை அருளியுள்ளார்.

**சிவானந்தலஹரியை** நான் மிகவும் ரசிக்கிறேன். ஏனெனில் **'அமரபாரதி'** மாத இதழில் 4 வருடங்களுக்கு மேலாக அதற்கு விரிவுரை எழுதி வருகிறேன்.

ஆசிரியரது ஆதி சங்கரரின் **ஸுப்ரமண்ய புஜங்க விரிவுரையை** வாசித்தவர்கள், அவரது ஆழ்ந்த, பரந்த, ஈடுபாட்டை, பாடல்களை விளக்குவதில் உள்ள ஆர்வத்தை, ஞான மணத்தை உணரலாம். இந்நூலும் அதைப் போன்றதே!

**பழனியாண்டவ அவதார கோமணாண்டி ரமணர்,** பழனியப்பன் இதயம் புகுந்து, சிவபக்திச் சுவையை, மஹிமையை யாவரும் ருசிக்க விழைகிறார். 'பக்தி' என்ற வடமொழிச் சொல்லுக்கு உகந்த தமிழ்ச் சொல் உண்டோ? ஆழ்ந்த - அன்பு, காதல், நினைத்தல் எனலாம். அதனை விவரிக்க முடியுமோ? சர்க்கரையின் தித்திப்பை வார்த்தைகளால் விவரிக்க முடியுமா? உணரத்தான் முடியும்!

கண்ணனின் இதயம், ஆத்மா - ராதையே என்பர். கண்ணன், ராதை தன் மீது வைத்திருக்கும் ப்ரேமையை, அன்பை உணர்ந்திட நினைத்தான். ராதையின் ஏங்கும் மனதுடனும், பொன் நிறத்துடனும் சைதன்ய **மஹாப்ரபுவாக** அவதாரம் செய்தான். கண்ணன் பெயர் கேட்டாலே அவர் மயிர் சிலிர்த்து, தன் மயமாகுவார். அதுவே உன்னத பக்தி நிலை. **ராமகிருஷ்ண பரமஹம்ஸரும்** அந்நிலையில் இருந்தவரே! பக்த - பக்தி லக்ஷணம் அதுவே!

ஆசிரியரின் **'பருந்துப் பார்வை'** மூலம் சிவானந்தலஹரியின் 100 துதிகள் யாது கூறுகின்றன எனப் பரவலாக உணரலாம். இந்த 10 திரட்டு விளக்கவுரை படித்தவர்களுக்கு, அந்த 100 துதிகளையும் படித்து ரசிக்க வேண்டும் என்கிற ஆர்வம் அவசியம் தோன்றும்.

**ஆதி சங்கர, ரமண மஹரிஷி சரித்திர சுருக்கங்களால்** அவர்கள் எந்த உயர்நிலையில் இருந்தனர் என உணரலாம். அவர்களது விரிவான வரலாறுகளைப் படிக்கவும் தூண்டும்.

அடுத்து, ரமணர் தேர்வு செய்த 10 பாடல்களுக்கும் அழகிய, எளிய தமிழில் வடிவாக்கம் தந்து, அவற்றிற்கு விரிவான உரைகளோடு, **சைவ, வைணவ, சமஸ்கிருத** அருளாளர்கள் பலரது பனுவல்களிலிருந்து தெரிவு செய்த ஒப்புமைகளுடன் ஆசிரியர் விளக்கி உள்ளமை நம்மை வியக்க வைக்கிறது. அவற்றிலிருந்து இரண்டு உதாரணங்களை மட்டும் இங்கே பார்ப்போம்!

2 ஆவது பாடலில் (76) **பக்தியினால் கிட்டும் பயன்** விரிவாக்கப் பட்டுள்ளது. "பலஸ்ருதி - இதைச் செய்தால் என்ன பயன், என அறிந்தால் தான் இக்காலத்தவருக்கு "செய்து பார்க்கலாமே!" என்கிற ஒரு உந்துதல் ஏற்படும். **கண்ணன் பகவத் கீதை**யில் சொன்ன ***"கர்மண்யேவா அதிகாரஸ்தே மா பலேஷு கதாசன"*** - "செய்வதே உன் கடமை, பலனை எதிர் பார்க்காதே!" - என்பது இக்கலிகாலத்தில் எடுபடாது என்று **ஆதிசங்கரர்** உணர்ந்தார். அவர் இப்பாடலில் காட்டி உள்ள பயனை, ஆசிரியர் **திருக்குறள், மாணிக்கவாசகரின் திருவண்ணாமலைத் திருவெம்பாவை** மூலம் விவரித்துள்ளார்

**'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்'** என்பர். திருவாசகமோ, தேவாரமோ, திருப்புகழோ எவர் பாடினாலும் ஞான ரமண மஹரிஷி ஆழ்ந்த பக்தனைப் போல் மெய்சிலிர்த்து ஆனந்தக் கண்ணீர் பெருக்குவார்.

10 ஆவது பாட்டில் (91) **பக்தி, ஞானம் ஈந்து முக்தியைத் தரும்** என்பதற்கு மாணிக்கவாசகர் வாக்குகள், திருக்குறள், ப்ரஹ்தாரண்ய உபநிடதம், திருமந்திரம், தாயுமானவர், பட்டினத்தார் பாடல்கள், அபிராமி அந்தாதி, ரமணரின் அக்ஷரமணமாலை என்று விதவிதமாகப் **பரிபூரண சரணாகதி தத்துவத்தை** ஆழ்ந்து விளக்குகிறார்.

அருணகிரியார் **இரத்தினகிரி திருப்புகழில்**

*பக்தியால் யானுனைப் பலகாலும்*
*பற்றியே மா திருப்புகழ் பாடி*
*முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்*
*முத்தியே சேர்வதற்கு அருள்வாயே!*

- எனப் பாடுவார்

மற்றும் **திருத்தணி திருப்புகழில்**

*'பத்தியை யெனக்கருளி முத்தியை யளித்து வளர்*
*பச்சை மயிலுற்று வரவேணும்*

- எனவும் பாடுவார்

ஆச்சாபுரத்தில் **திருநல்லூர்ப்பெருமணம் - திருஞானசம்பந்தர் திருமணம்,** நம்பியாண்டாரின் பெண்ணுடன் நடந்தது. பதிகம் பாடி திருமணத்திற்கு வந்தவர் யாவரையும் அழைத்துக் கொண்டு கோவில் செல்ல, அங்குள்ள ஜோதியில் 'கூண்டோடு கைலாயம்' என்பார்களே அவ்வாறு யாவரும் சிவனுள் கலந்தனர். அதுவே சிவபக்தியின் உன்னத நிலை!

இந்த விரிவுரையைப் படிப்பவர்கள் யாவரும் சிவ பக்தியால், **சிவமயமாகி முக்தி அடையலாம்** என்று மன உறுதி பெறுவர். எஞ்சிய 90 ஆதிசங்கரரது துதிகளையும் படித்து உணர வேண்டும் என்ற ஆவலையும் பெறுவர்.

திரு இராமநாதன் பழனியப்பன் அவர்கள் இது போன்று ஆன்மீக உணர்வை எழுப்பும் காரியங்களில் மேலும் ஈடுபட்டு, பக்தர்கள், பாமரர்கள் பரவசம் எய்திட ஏதுவாக இருக்க ஆண்டவனை வணங்கி இதய பூர்வமாக வாழ்த்துகிறேன்! அவருக்கு ஆண்டவன் அருள் மழையை என்றும் பொழியட்டும்!

***- ரா. ராமகிருஷ்ணனன்***

திரு ராமகிருஷ்ணன் அவர்கள் **ஒரு பொறி இயல் - கட்டடக்கலை வல்லுனர்.** இத்துறையில் பல்லாண்டுகள் பல உயர்நிலைகளில் பணி புரிந்த பின்னர் இப்பொழுது ஆன்மிகத் தேடலில், பகிர்தலில் முழு நேரப் பணி புரிந்து வருகிறார். பஜனை சம்பிரதாயத்தில் ஆர்வம் மிகக் கொண்டு கடந்த பல ஆண்டுகள் பல திருக்கல்யாணங்களை அந்த சம்பிரதாயத்திலேயே பலரையும் ஈர்க்கும் வகையில் நடத்தி வருபவர். ஆதி சங்கரர், அருணகிரியார் இருவரிடமும் அபரிமிதமான ஈர்ப்பு உண்டு. இருவரது பல நூல்களுக்கும் விரிவான விளக்க உரைகள் எழுதி வழங்கியவர். அவரது இந்தத் திருப்பணி மேலும் சிறக்க இறைவன் திருவடியில் என் சென்னி பதித்து வேண்டுகிறேன்.

**- ஆசிரியர்**

கவிஞர் வெற்றியூர் **சுப.திருஞானம்** பிளாட் 117, கோல்டன் கேட்,
துடியலூர் ரோடு, சரவணம்பட்டி,
கோவை 641035

உ

# வாசகர் பார்வை

ஆதிப்பரம் பொருளாய், வேத விழுப் பொருளாய் நாதப்பிரம்மாய், பேரானந்தப் பெருவெளியாய், பிறப்பறுக்கும் பிஞ்ஞகனாய், முக்திக்கு வித்தாய் விளங்கும் சிவபிரானைப் பாடிப் பரவிய அருளாளர்கள் பலர். அவர்களுள் தலையாயவராகத் திகழும் **அத்வைதம்** கண்ட **ஆதிசங்கர பகவத் பாதரும்** ஒருவர்.

அவர் அருளிய **'சிவானந்தலஹரியின்'** 100 ஸ்லோகங்களில் 10 ஸ்லோகங்களைத் தேர்வு செய்து, உலகை உய்விக்க அவதரித்த **பகவான் ரமண மகரிஷி** வழங்கிய **சிவானந்தலஹரித் திரட்டின்** மூலத்துக்குரிய தமிழாக்கத்தையும் விளக்கவுரையையும் பாமரரும் படித்துப் பயன் பெறும் வண்ணம் எளிய நடையில், இனிய தமிழில் **'பக்தியே-முக்திக்கு எளிய வழி'** என்னும் நூலாக ஆக்கித் தந்திருக்கிறார், ஆன்மிகச் சிந்தனையில் ஆழங்கால் பட்ட **திரு இராமநாதன் பழனியப்பன்** அவர்கள்.

இந்நூலைப் படிக்கும் பேறு எனக்குக் கிட்டியது இறை அருளே.

ஏழு தலைப்புகளாகப் பிரித்து எழுதப் பெற்ற இந்நூலில் ஒவ்வொரு தலைப்பிற்குமான விளக் கத்தை ஐயந்திரிபரக் கூறியிருக்கும் நூலாசிரியர், இறுதியில் 10 பாடல்களின் மொத்த உட்பொருளை யும் சாறு பிழிந்து தெவிட்டாத அமுதமாகத் தந்திருக்கிறார்.

முதலில் **முக்திக்கான நெறிகள் எவை** என்பதை அறுதியிட்டுக் கூறும்போது, **சைவம்** வளர்த்துள்ள அறநெறிகளான **சரியை, கிரியை, யோகம், ஞானம்** ஆகிய நான்கு வழிகளில் ஒன்றைத் தேர்வு செய்து சிவனை வழிபாடு செய்தால், அவ்வாறு வழிபடுவோர் உள்ளத்தில் சிவன் கோயில் கொண்டு அருள் புரிவார் என்கிறார்.

அதேபோல் **வைணவ** வழிபாட்டு நெறிகள் நான்காக **கர்மயோகம், ஞான யோகம், பக்தி யோகம், ப்ரபத்தி** என்னும் **சரணாகதித் தத்துவம்** ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார்.

மேற்கூறிய நெறிகள் எளிதில் புரியும் வகையில் முன்னோர்கள் தீர்க்கமாகச் சொல்லி வைத்த பக்திப் பனுவல்களிலும், பாசுரங்களிலும் இருந்து தக்க மேற்கோள்களைக் காட்டி, படிப்போரை வசப்படுத்துகிறார்.

அடுத்து, **திரட்டுக்கள் ஏன்?** என்னும் தலைப்பில் கடினமான மூல நூல்களைச் செவ்வனே கற்று, உட்பொருளை நன்கு உள்வாங்கி, அவற்றைச் சுருக்கி, அவற்றின் முழுப்பயனையும் தரும் சாரத்தை, மூலத்தில் இருந்து விலகாமல் சிறு சிறு நூல்களாக, கற்றுணர்ந்த பெரியோர்கள் ஆக்கித் தருவதைத் **திரட்டு** எனக் குறிப்பிடுகிறார் நூலாசிரியர். இத்தகைய திரட்டுக்களுக்கும், அவை தோன்றுவதற்குப் பரம்பொருளே காரணமாக இருந்திருக்கிறது என்பதற்கும் தக்க உதாரணங்களுடன் விளக்கி இருக்கிறார்.

அடுத்து **ஆதி சங்கர பகவத் பாதரின் தோற்றம்** தொடங்கி, இளமைக் காலம், தொடக்க கால அருளிச் செயல்கள், தவ வலிமை, சந்நியாசம், அத்வைதம், அறு சமய நெறி ஆகியவற்றை எடுத்துக் கூறுகிறார். உலகம் உய்ய ஆன்மிகம் தழைக்க நூல் பல ஆக்கி அளித்ததையும் ஆசிரியர் அழகான வரலாறாகச் சொல்கிறார்.

தொடர்ந்து **சிவானந்தலஹரி - ஒரு பருந்துப் பார்வை** என்ற பகுதியில், **உபநிடதங்கள், பகவத்கீதை, பிரம்ம சூத்திரம்** ஆகியவற்றுக்கு **பாஷ்யங்கள்** என்னும் விளக்கவுரை எழுதிய **ஆதி சங்கரர்,** அவற்றை ஆன்மிக வளர்ச்சியின் ஏணிப்படிகளின் உச்சியில் உள்ள மேலோர்களே படித்துப் புரிந்து கொள்ள முடியும் என்பதைத் தம் புனிதயாத்திரையின் போது சந்தித்த பல தரப்பட்ட மனிதர்களின் உணர்வுகளை வைத்துப் புரிந்து கொண்டிருக்கலாம் என்று நம்புகிறார் நூலாசிரியர்.

அதனால் தான் ஆன்மிக அறிவின் ஆரம்ப நிலையில் இருக்கும் மானுடரும் **பக்தி வழி முக்தி பெற**, தம் அணுகுமுறையில் மாற்றம் ஏற்படுத்திக் கொண்டு, கடினச் சொற்கள் கொண்ட செய்யுள் நடையில் இருந்து விலகி எளிதில் அவற்றைப் பாராயணம் செய்யும் வகையில், எளிமையான செய்யுள் நடையில் **ஸ்தோத்திர** நூல்களை ஆக்கி அளித்திருக்கலாம் எனக் கருதுகிறார்.

**ஆதி சங்கரரது ஸ்ரீ சைல யாத்திரையில்** அவர் கண்டவை - மலையில் நின்ற **மருத (அர்ஜுன) மரம்,** அதைச் சுற்றிப் பற்றிக் கொண்டு மணம் பரப்பும் **மல்லிகைக் கொடி,** அந்த மரத்தின் அடியில் **சிவலிங்கம்.** இந்தச் சூழல் சங்கரரது உள்ளத்தில் ஒரு **அருட்சோதி**யைத் தோற்றுவித்தது. உடனே அவரது திருவாய் அருவியாய்க் கொட்டியதுதான் 100 பாடல்களைக் கொண்ட **சிவானந்தலஹரி** என்கிறார் ஆசிரியர். இந்த **ஸ்தோத்திரத்தின் ஸ்லோகம்** 50-51 இல் **அம்பிகை-சிவன்** இருவரைப்பற்றியும் அழகாகத் திருநாம அர்ச்சனை செய்துள்ளார் ஆதி சங்கரர். அதனை மிக அழகாகத் தமிழாக்கம் செய்து நம்மைப் படிக்கத் தூண்டுகிறார் ஆசிரியர்.

*''மாலையில் நடன மாடி மகிழும் மகேசன்*
*வேதங்களின் உச்சியான உபநிடதத்தில் உள்ளவன்''*
..............

என 50 ஆம் பாடலில் தொடங்கி

*''பிருங்கி முனிவரின் இச்சைக்கு ஏற்ப*
*அருமையாக நடனமாட ஆசை உள்ளவன்*
........
*அன்னை பிரம்மராம்பிகையின் அன்புப் பதியான*
*அந்த சிவன் அடிக்கடி வந்து என்*
*இதயம் என்னும் தாமரையில் விளையாடட்டும்''*

என 51 ஆம் பாடலில் முடிக்கிறார்.

வடமொழி அறியாத என்போன்றோர் மூலப் பாடலின் அழகையும், வர்ணனையையும், கருத்தையும் எளிதில் புரிந்து கொள்ள உதவும் மொழி நடை ஆசிரியரின் பாடல்களில் மிளிர்கிறது.

மனமாகிய மலரை உள்ளத் தூய்மையுடன், இறைவன் திருவடிகளில் காணிக்கையாக்கி, "நீயே எனக்குப் புகல்!" என **சரணாகதி** அடைந்து விட்டால் **முக்தி உறுதி** என்பதைப் பல பாடல்களில் சொல்லிய ஆதி சங்கரர் நிறைவுப் பாடலில் தாம் வடித்த கவிதையைப் **பெண்ணாக** உருவகித்துப் பாடியிருக்கிறார். அதன் சிறப்பான தமிழாக்கம் :

*'அன்னை உமையின் அன்புக் கணவரே!*
*உமக்கு நானொரு கவிதை எனும்*
*பேரழகுப் பெட்டகமான பெண்ணொருத்தியைப்*
*படைத்துள்ளேன்!*
..............
*அற்புத அழகு கொண்ட என்*
*நற்கவிதை மகள் இவள்*
*உம் மங்கல மங்கை நல்லாளுக்கு*
*ஈடு தரக் கூடியவள் இவள் என்பதால்*
*இவளையும் நீர் ஏற்றிடுவீர் எந்தை பெருமானே!'*

என சிவானந்தலஹரி **ஸ்தோத்திரத்தை** "சிவன் அணையும் அம்பிகை" யாகக் காண்பித்து ஆசிரியர் தம் **பருந்துப் பார்வையில்** நம்மைப் பரவசப்படுத்துகிறார்.

**பகவான் ரமண மகரிஷி** பற்றிய பகுதியில் இளம் வயதிலேயே **அருணாசலேஸ்வரர்** பேரருளால் ஞானம் பெற்று, **'நான் யார்'** என்ற கேள்விக்கு விடை கண்ட தவயோகி அவர் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

பத்தாம் வகுப்பு வரையே படித்த பகவான் ரமணர், தமிழ், கேரளம், சமஸ்கிருதம், தெலுங்கு, ஆங்கிலம் போன்ற பன் மொழிகளில் புலமை பெற்று, படிப்பாளியாகவும், படைப்பாளியாகவும் விளங்கி, தாம் கற்ற நூல்களில் பண்பட்டு, அதன் உட் பொருளை உணர்ந்து, அவற்றுள் பொதிந்துள்ள ஆழமான கருத்துக்களையும் விளக்கங்களையும் உடனுக்குடன் பிறருக்கு எடுத்துக் கூறும் அதிசய அருள் பெற்றிருந்தார். வடமொழி ஞானம் பெற்று, ஆன்மிக நெறி காட்ட இறைவனால் பணிக்கப் பெற்ற பகவான் ரமணருக்கு **அத்வைதம்** கண்ட **ஆதிசங்கரர்பால்** மிகுந்த ஈர்ப்பு ஏற்பட்டது. அதனால் ஆதிசங்கரரின் நூல்கள் அனைத்தும் அவருக்கு வசப்பட்டன.

நிறைவாக, **பக்தி ஞானம் தந்து முக்தியையும் தரும்** என்பதையும் பகவான் ரமண மகரிஷி அருளிய சிவானந்தலஹரித் திரட்டில் உள்ள பத்து பாடல்களின் முழு விளக்கத்தையும், **ஸ்லோகங்களின்** தமிழாக்கப் பாடல்களையும் அதற்கான ஒப்புநோக்குகளையும் மிக தீர்க்கமாக ஆய்ந்து தோய்ந்து வழங்கியிருக்கிறார் ஆசிரியர்.

நல்ல தமிழில், பொருத்தமான சொல் சேகரிப்பில், அழகு நிறைந்த கவிதைகளாக ஸ்லோகங்களை மொழியாக்கம் செய்து, ஒவ்வொரு பாடலுக்கும் ஏற்ற தலைப்பினைக் கொடுத்து விளக்கங்கள் தந்திருப்பது ஆசிரியரின் நுண்மான் நுழைபுலத்தைக் காட்டுகிறது.

ஆதிசங்கர பகவத் பாதரின் கருத்தை ஒட்டி, **திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருமந்திரம், பெரியபுராணம், திருப்புகழ், பட்டினத் தார் பாடல், தாயுமான சுவாமிகள் பாடல்** போன்ற பழந்தமிழ் இலக்கியங்களில் உள்ள முக்திக்கான வழிகளையும் மேற்கோள் காட்டி, படிப்போரின் உள்ளத்தை ஈர்க்கும் வகையில் அமைந்துள்ள இந்நூல், ஆசிரியரின் புலமைக்கும் தமிழின் பெருமைக்கும் சான்றாகும் என்பது, இந்நூலினை முதலில் படிக்கும் வாய்ப்பினைப் பெற்ற **வாசகன்** என்ற முறையில், என்னுடைய **கருத்தாகும்.**

**- *சுப.திருஞானம்***

கவிஞர் திருஞானம் அவர்கள் ஆயிரக்கணக்கான தரமான நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டுக் கொண்டிருக்கும் பழனியப்பா பிரதர்ஸ் - ஏசியன் பிரிண்டர்ஸ் என்ற பதிப்பகக் குழுவில் பல்லாண்டு காலம் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். நீர் தளும்பாத நிறை குடத்தவர்! **தமிழிலும், தமிழ் நூல்களிலும் பலகாலப் பயிற்சி நிறைந்தவர்.** எனவே அவர் கருத்தினை விரும்பி, வேண்டிப் பெற்றேன்.

**- ஆசிரியர்**

# என்னுரை

ஒரு **சிறு ஊற்றுக்கண்.** அது கொப்புளித்து உமிழும் நீர் வடிந்து, வழியில் இருபுறங்களி லிருந்தும் வரும் பல ஓடைகளின், ஆறுகளின் சேர்க்கையோடு **நதியாக உருவாகும் பாக்கியத்தைப் பெறுகிறது.** ஒரு நூலின் பிறப்பும் இதைப் போலத்தான்!

இந்த நூலிற்கு ஊற்றுக்கண்ணாக இறையருளால் அமைந்தது முதுபெரும் பேராசிரியர் திருமிகு **வி.கிருஷ்ணமூர்த்தி** அவர்கள், சிருங்கேரித் திருமடத்திலிருந்து வெளிவரும் **Tattvaoka** என்ற ஆங்கில இதழில், எழுதி வரும் **'Gems of Shankara'** என்ற தொடரில் வெளிவந்த ஒரு கட்டுரை! - **ஆதிசங்கரரின் சிவானந்தலஹரி ஸ்தோத்திரத்தி**லிருந்து ஒரு **ஸ்லோகத்திற்கான** ஆங்கில விளக்கம். இந்த **ஸ்லோகம்** என்னை ஈர்த்து **சிவானந்தலஹரியை** முழுமையாகப் படிக்கச் செய்தது. இந்த முயற்சியில், **பகவான் ரமண மகரிஷி,** ஒரு அடியாரின் வேண்டுகோளினை ஏற்று, சுலபமாகப் பாராயணம் செய்வதற்காக **சிவானந்தலஹரி**யிலிருந்து இங்கொன்றும் அங்கொன்றுமாகப் **பத்துப் பாடல்களைத்** தெரிவு செய்து கொடுத்ததாக அறிந்தேன். அந்தப் பத்துப் பாடல்களையும் தனித்துப் படித்துப் பொருள் புரிந்து கொண்டு, சற்று ஆழமாகச் சிந்தித்தேன். அவை பத்தும் ஒரு சரட்டில் கோத்தது போல் ஒன்றுக்

கொன்று தொடர்புடையதாகத் தோன்றியது. உடனே அவற்றிற்குத் தமிழ் வடிவம் தந்து விளக்க உரையும் எழுதலாமே என்று எண்ணினேன். அந்த எண்ணத்தின் விளைவுதான், **"பக்தியே - முக்திக்கு எளிய வழி"** என்ற இந்த நூல்.

இந் நூல் நிறைவு பெற்று வெளிவரும் இத்தருணத்தில் அதற்கு உதவிக் கரம் நீட்டிய **பெருமக்களுக்கு** என்னுடைய உளமார்ந்த நன்றியினை இங்கே பதிவு செய்தல் என் தலையாய கடமை. இதோ அந்த மாட்சிமிகு பெரியவர்களின் வரிசை:

- இறைமை ஒளிரும் **அருளுரை** வழங்கிய
    - தவத்திரு **இரத்தினகிரி பாலமுருகனடிமை சுவாமிகள்**
- நல்வாழ்த்துக்களுடன் **ஆசியுரை** வழங்கிய **ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின்** மேலாளர்
    - **சுவாமி விமூர்த்தானந்தர்** அவர்கள்
- கருத்தாளமிக்க **அணிந்துரை** வழங்கி இந்நூலிற்கு ஒரு சிறப்பு அங்கீகாரம் அளித்த **திருவண்ணாமலை ஸ்ரீரமணாச்ரமத்தின்**
    - தலைவர் திரு **வே.சு. ரமணன்** அவர்கள்
    - திரு **எஸ். கிருஷ்ணன்** அவர்கள்
- நூலின் கனம் கருதாது முழுமையாகப் படித்து, வாசகர்கள் தொடர்ந்து படிக்க உந்துதல் தரும் **அறிவார்ந்த அணிந்துரைகள்** வழங்கிய
    - பேராசிரியர் **வி. கிருஷ்ணமூர்த்தி** அவர்கள்
    - திரு நெரூல் **ரா. ராமகிருஷ்ணன்** அவர்கள்
- நூலின் முன் படியினைப் படித்து **வாசகர் கருத்தினை** வழங்கிய
    - வெற்றியூர் **கவிஞர் சுப.திருஞானம்** அவர்கள்
- நுண்மையும், வண்ணமும் நிறைந்த படங்களை வரைந்து தந்து நூலிற்குப் பொலிவு சேர்த்த ஓவியப் பெருங்கலைஞர்
    - **திரு மணியம் செல்வன்** அவர்கள்
- இந்நூல் உருவாக முன்னோடிகளாகத் திகழ்ந்த, மற்றும் உற்ற துணையாக இருந்த பெருவாரியான நூல்களின் / ஆவணங்களின் ஆசிரியப் பெருந்தகையாளர்கள் / பதிப்பாளர்கள் / இணைய தளங்கள்

- குடும்பப் பொறுப்பினைத் தாமே ஏற்று, எழுத்துப் பணிக்கு என்னை ஊக்குவித்த என் அன்பு மனைவி

  - **திருமதி விசாலாட்சி பழனியப்பன்** அவர்கள்

- எங்கள் தொழில் நிறுவனங்களைத் தாமே கண்காணித்துக் கொண்டு என்னுடைய எழுத்துப் பணிக்கு உற்சாகம் அளித்து வரும் என் பாசமிகு பிள்ளைகள் :

  - **ராமனாதன் - வள்ளிக்கண்ணு**
  - **நடராஜன் - சாந்தி**
  - **லக்ஷ்மி - நாச்சியப்பன்**

- நூலின் பல கையெழுத்துப் பிரதிகளையும் திருத்தங்களையும் கணினிக்கு மாற்றிய என் உதவியாளர்

  - **திரு மகேஷ்**

- நூலினை வடிவமைத்த SS Graphics நிறுவன அதிபர்

  - **திரு செந்தில்குமார்** அவர்கள்

- நூலினை அழகாக அச்சிட்டு தந்த **ஏசியன் பிரிண்டர்ஸ்,**

  - **திரு. இராம. சுப்பையா** அவர்கள்

- நிறைவாக, இந்நூலினை **இலக்கியச் சிந்தனை** 47ஆவது ஆண்டு நிறைவு விழாவில் வெளியிட்டுப் பேருதவி நல்கிய தலைவர்

  - திரு ப. **லெட்சுமணன்** அவர்கள்
  - மற்றும் **ஆட்சிக்குழு உறுப்பினர்கள்**

இவர்கள் அத்தனை பேருக்கும், மற்றும் இந்நூலோடு தொடர்புடைய அனைவருக்கும், இந்நூலினை வாங்கி வாசிக்கத் தொடங்கும் உங்களுக்கும் என் நன்றி, நன்றி, நன்றி கோடி.

***- இராமநாதன் பழனியப்பன்***

09.03.2017

"ஸ்ரீ புவனேஸ்வரி"
3362 AX, 11 ஆவது மெயின் ரோடு,
அண்ணாநகர் மேற்கு,
சென்னை - 600 040.
தகவல் தொடர்பு : +91 44-26211194
+91 9841011220
rpal@sellvindsgroup.com



உ

# 01. முக்திக்கான நெறிகள்

## மானுடக் குறிக்கோள் - முக்தி

**இறை, உயிர், தளை** என்ற மூன்றும் தோற்றமும் மறைவும் இன்றி என்றும் நிலையாக உள்ள உண்மைப் பொருட்கள். இந்த முதன்மைப் பொருட்களை - **பதி, பசு, பாசம்** என்றும் கூறுவர்.

இவற்றுள் **உயிர்**தான் ஏனைய இரண்டாலும் பயன் பெறுகிறது. **தளை** என்பது உயிர் இறையை அடையத் தடையாக நிற்கும் பகைப் பொருள்; **இறை** உதவும் பொருள்.

உயிர்கள் பொதுவாக, தாவரம், நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்குகள், மக்கள், தேவர் என்று **ஏழுவகைப் பிறப்புக்களை** ஏற்கின்றன. அந்தப் பிறப்புக்களில் மானுட உடலைத் தாங்கி வந்த உயிர்களுக்குத்தான் தளை நீங்கி இறையோடு ஒன்றும் வாய்ப்பு உண்டு.

இறையின் திருவருளால் பெறுவதற்கரிய மானுடப் பிறவி பெற்ற நாம்,

**நல்லவற்றை இயன்ற அளவு கற்றும், கேட்டும்,**
**இறையுணர்வுடன் அறவழி நின்று**
**பொருளீட்டியும், இன்பம் துய்த்தும்,**
**தக்கார்க்குத் தக்க அளவில் கொடுத்தும்,**
**கூடி வாழ்ந்தும், படிப்படியாக**
**அனைத்து ஆசைகளையும் அகற்றி,**
**இறையின் பால் பக்தியினை வளர்த்து,**

இறையருளால் ஆணவம், கன்மம், மாயை என்ற
மும்மலங்களிலிருந்து விடுதலை பெற்று,
நம் நல்வினை, தீவினைக் கணக்கை நேர் செய்து,
இறையருள் நம் மேல் பதிந்ததும்,
அமைதியோடு இறைவன் திருவடி அடைந்து,
பிரிவின்றி ஒன்றி இருந்து
**மீண்டும் பிறவாமை எனும் முக்தி பெறுதலே**

நமது பொதுவான குறிக்கோள் ஆகும்.

**இக்குறிக்கோளை அடைவதற்கான வழிகள்**

நம் இருபெரும் சமயங்களான **சைவமும், வைணவமும்** ஏனைய சமயங்களைப் போல இதற்கான வழிகளைக் காட்டியுள்ளன.

## சைவ இறை வழிபாட்டு நெறிகள்

உயிர், இடையேயுள்ள தளைகளில் இருந்து விடுபட்டு இறையினை திருவடியினை அடைய நான்கு பாதங்களை அல்லது நெறிகளை சைவம் வகுத்துள்ளது.

உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| சரியை | தாச மார்க்கம் | தொண்டுநெறி | அப்பர் |
| கிரியை | சற்புத்திர மார்க்கம் | மகன்மைநெறி | சம்பந்தர் |
| யோகம் | சக மார்க்கம் | தோழமைநெறி | சுந்தரர் |
| ஞானம் | சன் மார்க்கம் | ஞான அல்லது மெய்யறிவு நெறி | மாணிக்கவாசகர் |

இந்த நான்கு நெறிகளில் **அவரவர் இயல்பிற்கு, சூழ்நிலைக்கு ஏற்ற ஒரு நெறி**யினைத் தெரிவு செய்து அதற்கேற்ப வழிபாடு செய்தால் படிப்படியாக சிவன் அந்த அடியார்தம் உள்ளத்தினையே கோயிலாகக் கொண்டு அருள்பாலித்திடுவான்.

**சரியை**

நாடும் நகரமும் தேடித் திரிந்து **திருத்தலங்களை** அடைந்து, அங்குள்ள **தீர்த்தத்தில்** உடல் தூய்மை செய்து கொண்டு, திருக்கோவில் சென்று அங்கு திருமேனி கொண்டு எழுந்தருளியிருக்கும் **மூர்த்தி**யினைப் பாடிப் பணிந்து வணங்கி ஆலயத்திற்கும் அடியார்களுக்கும் திருத்தொண்டு செய்திடல் வேண்டும்.

இந்நெறியில் தொடர்ந்து நின்று இறைவன் பால் கொண்ட அன்பு முதிர்ந்ததும் கிட்டுவது **சாலோக முக்தி**யாகும். அதாவது, இறைவன் இருக்கும் உலகத்தில் தானும் இருப்பது.

*நாடும் நகரமும் நல்திருக் கோயிலும்*
*தேடித் திரிந்து சிவபெரு மான்என்று*
*பாடுமின்! பாடிப் பணிமின்! பணிந்தபின்*
*கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே!*

*– தி. மூ. – தி. ம. 1445*

**சரியை** என்பது உடலையும் உறுப்புகளையும் இறைபணியில் நிறுத்தி இறைவனைப் **புறத்தே** வைத்து வழிபாடு செய்வதாகும்.

**கிரியை**

இறைவன் எத்திசையிலும் எங்கும் உளன் என்பதை உணர்ந்து அவனைத் **திருக்கோவில்களிலும்** மந்திர, தந்திர பாவனைகளுடன் **உள்ளத்தினுள்ளும்** வழிபாடு செய்தல்.

இறைபணியில் நிற்கும் புற **உடலுறுப்புகளின் இணக்கத்தோடு உள்ளுறுப்புகளாகிய இந்திரியங்களையும் நெறிப்படுத்தி**க் கொண்டு உள்ளத்தை இறைவழிபாட்டில் நிறுத்துதலாகும்.

இவ்வழியால் கிட்டுவது **சாமீப முக்தியாகும்.** அதாவது, இறைவனுக்கு அருகாமையில் இருப்பது.

*பூசித்தல், வாசித்தல், போற்றல், செபித்திடல்*
*ஆசற்ற நற்றவம், வாய்மை, அழுக்கின்மை*
*நேசித்திட்டு அன்னமும் நீர்சுத்தி செய்தல்மற்று*
*ஆசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே*

*– தி. மூ. – தி. ம. 1496*

இந்நெறி இறைவனை **அகத்தேயும் புறத்தேயும்** வைத்து வழிபாடு செய்வது.

**யோகம்**

தக்க குருவின் வழிகாட்டுதலுடன் **ஆசனப்** பயிற்சியால் உடலை ஒழுங்கு செய்து, **மூச்சுப்** பயிற்சியால் மனத்தை ஒழுங்குபடுத்தி,

**தியானத்தால்** சிந்தனையை ஒழுங்கு செய்து, உள் ஒளியைக் காணும்வரை இடைவிடாது இந்நெறியில் நிற்றல்.

இறைபணி வசப்பட்ட உடல், உள்ளம் ஆகியவற்றின் அனுசரணையுடன் அந்தக்கரணங்களையும் நெறிப்படுத்தி, உயிரையும் பாசப்பற்றிலிருந்து நீக்கி, இறையிடம் ஒன்றச் செய்வதாகும்.

இந்நெறியால் கிட்டுவது **சாரூப முக்தி**யாகும். அதாவது, இறைவனின் உருவத்தைப் போன்ற உருவம் பெறுதல்.

*நெறிவழி யேசென்று நேர்மையுள் ஒன்றித்*
*தறியிருந் தாற்போல் தம்மை இருத்திச்*
*சொறியினும் தாக்கினும் துண்ணென்று உணராக்*
*குறியறி வாளர்க்குக் கூடலு மாமே*

*– தி. மூ. – தி.ம. 1457*

இவ்வழி இறைவனை **அகத்தே** கண்டு வழிபாடு செய்வது.

**ஞானம்**

உருவம், அருவுருவம், அருவம் ஆகிய மூன்றினையும் கடந்து **சச்சிதானந்தப்** பிழம்பாய் எங்கும் நிறைந்திருக்கும் இறைவனை **அறிவால்** வழிபடுதல். **கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல்** என்ற நான்கு அங்கங்கள் இந்நெறிக்கு உண்டு. பக்குவம் பெற்ற அடியாருக்கு இறைவனே குரு வடிவில் தோன்றி தீட்சை கொடுத்து, உபதேசம் செய்து **ஞானத்தை** அளித்து **முத்தியை**யும் வழங்குவார்.

இவ்வாறு இறைவனிடம் **அனுபூதி நிலையில் ஒன்றிய உயிர்** மெய்யுணர்வு பெற்று உய்யும்.

இந்நெறியில் கிட்டுவது நிறைவான **சாயுச்சிய முத்தி**யாகும். அதாவது இறைவன் திருவடிகளிடம் முழுமையாக ஒன்றி **பரமுத்தி** அடைதல்.

*உடம்பெனும் மனை அகத்துள் உள்ளமே தகளி யாக*
*மடம்படு உணர்நெய் அட்டி உயிரெனும் திரிம யக்கி*
*இடம்படு ஞானத்தீயால் எரிகென இருந்து நோக்கில்*
*கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே*

*–தி. நா. தே. 4.75.4*

இவ்வழி, **எங்கும் இறைவனது காட்சியைக்** கண்டு களித்தல்.

இந்த நான்கு நெறிகளின் படிநிலை வளர்ச்சியைத் **தாயுமானவர்** மிகப் பொருத்தமானதொரு உவமையோடு விளக்கம் செய்துள்ள திருவரிகள் இரண்டினை இங்கு நினைவு கூர்தல் வேண்டும்.

*விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்*
*அரும்பு, மலர், காய், கனிபோல் அன்றோ பராபரமே*

*— தா. — ப. க. 157*

## வைணவ இறை வழிபாட்டு நெறிகள்

வைணவத்தில் **சாதன த்ரயம்** என அழைக்கப்பெறும், **கர்ம யோகம், ஞான யோகம், பக்தி யோகம்** என்ற மூன்று நெறிகளுடன் **ப்ரபத்தி** என்ற **சரணாகதி தத்துவத்தை**யும் சேர்த்து நான்கு நெறிகள் உண்டு.

**கர்ம யோகம்**

*புலன்களின் ஆளுமையிலிருந்து விடுபட்டு,*
*செயலைப் பற்றிய கவலைகளைத் துறந்து,*
*அச்செயலின் பலனிலும் பற்றுதலின்றி, மாறாக,*
*அப்பலன்கள் அனைத்தையும் இறைவனுக்கே அர்ப்பணித்து,*
*இன்பம் — துன்பம் போன்ற அனைத்து*
*இருமைகளினாலும் பாதிக்கப் படாதவனாய்,*
*எப்பொழுதும் திருப்தி அடைந்தவனாய்,*
*நீரில் தாமரை இலை இருப்பது போல் வாழ்பவனாய்,*
*வேறு எவரையும், எப்பொருளையும் சாராதவனாய்*
*செயல் புரிபவனின்*
*அகங்காரம் தானே அழிந்துவிடுகிறது.*
*அவன் அனைத்து பந்தங்களிலிருந்தும் விடுபடுவான்.*
*இந்த மார்க்கம் கர்ம யோகம் எனப்படும்.*

*— ஆதாரம் கீதை அத். 4—5*

**ஞான யோகம்**

*கர்ம யோகத்தின் மூலம் தூய்மை பெற்று,*
*இறையின் பால் சார்ந்த மனம்*
*கட்டுப்பாடும் பெற்றுவிட்டால்,*

அதுவே ஆன்மிக உணர்வு மலர்வதற்கு
ஏற்ற இடமாக அமைகிறது;
தானே தனக்குப் பகைவனும் நண்பனும் என்று தன்னை அறிந்து,
அலைபாயும் மனத்தினைக் கட்டுப்படுத்தி,
உண்மையற்ற, நிலையற்ற பொருள்களிலிருந்த
பற்றினை நீக்கிக் கொண்டு,
நிலையான, எங்கும் நிறைந்த மெய்ப்பொருளான ப்ரம்மத்தினிடத்து
சிந்தனையை ஒருமுகப்படுத்தி,
தியானத்தின் மூலம் அந்த ப்ரம்மத்தையே இறுகப் பற்றிக்
கொண்டு,
மண்ணையும், கல்லையும், பொன்னையும்
பேதமின்றிப் பார்க்கின்ற சமநிலை பெற்று,
நூல்களிலிருந்து பெற்ற அறிவினை
இறை அனுபவத்தினால் ஆன்மிக உணர்வாக மாற்றிக் கொண்டு
பேரமைதிப் பெருவெளியில் சிறகடித்துப் பறக்கின்ற
மன நிலையினை அடைதலே ஞான யோகமாகும்.

– ஆதாரம்: கீதை அத். 6

**பக்தி யோகம்**

பகவானிடத்தில் என்றும் நிலையான, முழுமையான
நம்பிக்கை கொண்டு, அவனை வணங்கி,
புலன்களைக் கட்டுக்குள் வைத்து, சமநிலை பெற்று,
மனத்தை பகவானிடமே செலுத்தி,
அனைத்து உயிர்களின் நன்மையிலும் நாட்டம் கொண்டு,
எல்லாச் செயல்களையும் அவற்றின் பலன்களையும்
அவனுக்கே அர்ப்பணித்து,
அவனையே மேலான கதியாகக் கொண்டு,
அவனைப் புகலடைந்து,
அவனையே உபாசிப்பவர்களை, அவன் எளிதில்
சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றுவான்.

இதயத்தையும் புத்தியையும் ப்ரம்மானுபவத்தில் நிலைக்கச் செய்து,
இப்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள இயலாதவர்கள்
பகவானுக்கும் அவனது அடியார்களுக்கும்
முழு மனதோடு பல தொண்டுகள் செய்து
படிநிலை வளர்ச்சி பெற்று முழுமை பெறலாம்.

*எல்லா உயிர்களிடமும் வெறுப்பற்று,*
*நண்பனாய், கருணை உடையவனாய்,*
*'நான்', 'எனது' என்னும் மமகாரம் அற்றவனாய்,*
*சுக துக்கங்களை சமநோக்குடன் ஏற்றுக் கொள்பவனாய்,*
*தன்னடக்கம், திடசிந்தனை, பொறுமை*
*முதலியவற்றுடன் மனம், புத்தியையும்*
*பகவானிடம் சமர்ப்பித்தவனாய் இருப்பவன்*
*பகவானுக்கு பக்தன்.*

*எவனைக் கண்டு உலகம் அஞ்சாதிருக்கிறதோ*
*எவன் உலகைக் கண்டு அஞ்சாதிருக்கிறானோ*
*எவன் களிப்பு, கோபம், அச்சம், மனக்கலக்கம் –*
*இவற்றினின்று விடுபட்டவனோ,*
*அவன் பகவானுக்குப் பிரியமானவன்.*

*ஆசைகளற்றுத் தூயவனாய், திறமையுடையவனாய்,*
*எதிர்வரும் இன்னல்களைப் பொருட்படுத்தாதவனாய்,*
*நட்பு—பகை, மானம்—அவமானம், வெப்பம்—குளிர்,*
*இன்பம்—துன்பம், புகழ்—இகழ், நன்மை—தீமை*
*ஆகிய இருமைகள் அனைத்தையும் பேதமின்றி ஏற்று,*
*இருக்கக்கூட இடம் தேடாது,*
*கிடைத்ததில் திருப்தியுடன்,*
*பகவானையே குறிக்கோளாகக் கொண்டு, சிரத்தையோடு*
*சாவா மருந்தான அமிர்தம் போன்ற*
*இந்த தர்மத்தினடியாக*
*பகவானிடம் பக்தி செலுத்துவதே பக்தி யோகமாகும்.*

*– ஆதாரம்: கீதை அத். 12*

**ப்ரபத்தி நெறி**

மேற்கண்ட கர்ம, ஞான, பக்தி யோகங்களை மேலே சொல்லியுள்ளபடி நம்மைப் போன்ற சாமான்யர்கள் குறைவறப் பயின்று நிறைவுடன் செய்வது மிகக் கடினம். இதுவும் அந்தக் கருணைமிகு பகவானுக்குத் தெரியும்தானே? எனவே நமக்கும் "பரம இரகசியமான" ஒரு எளிய வழியை பகவான் கிருஷ்ணன் காட்டித் தந்துள்ளார்!

**ஸ்ரீகிருஷ்ணன் சொல்கிறார்:**

*"எல்லா தர்மங்களையும் விட்டுவிட்டு,*
*என் ஒருவனையே சரணடைவாயாக!*
*நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும்*
*விடுவிக்கிறேன்! வருந்தாதே!"*

*– கீதை அத். 18.66*

இது வைணவத்தின் **இரகஸ்ய த்ரய சாரத்தில்** மூன்றாவதான **சரம ஸ்லோகம்.** இதோ இதற்கு கவிதை வடிவிலான விளக்க உரைகள் இரண்டு:

*எல்லார்க்கும் எளிதான ஏற்றத் தாலும்*
*இனிஉரைக்க மிகையான இரக்கத் தாலும்*
*சொல்லார்க்கும் அளவாலும் அமைத லாலும்*
*துணிவரிதாய்த் துணைதுறக்கும் சுகரத் தாலும்*
*கல்லார்க்கும் கற்றார் சொல் கவர்த லாலும்*
*கண்ணன் உரை முடிசூடி முடித்தலாலும்*
*நல்லார்க்கும் தீயார்க்கும் இதுவே நன்றாம்*
*நாரணர்க்கே அடைக்கலமாய் நண்ணுமாறே*

*– தேசிகர் பிரபந்தம் 200*

[சுகரம் - எளிதில் செய்யத் தக்கது]

*முன்னோர் சொன்னது முனிவோர் சொன்னது*
*நல்லோர் சொன்னது நாயகர் சொன்னது*
*ஆச்சா ரியர்கள் ஆரியர் சொன்னது*
*வேதம் கற்றவர் வித்தகர் சொன்னது*
*தஞ்சம் என்பது தாமரைத் திருவடி*
*அஞ்சேல் என்னும் அண்ணல் திருவடி*
*வேங்கட முடையான் வீரக் கழலடி*
*வெற்றிக் கொருபடி வியப்புத் திருவடி*
*திருவடி சரணம் திருவடி சரணம்*
*திருவடி சரணம் அடைந்ததென் கரணம்*

*– கண்ணதாசன் – ஸ்ரீ.வெ.சு.பா. பாடல் 15*

இந்தப் ப்ரபத்தி நெறி என்ற பூரண **சரணாகதி நெறிக்கு** எந்த விதமான நியமங்களும் இல்லை.

*பிரபத்தி நெறிக்குத் தேச நியமமும், கால நியமமும்*
*பிரகார நியமமும், அதிகாரி நியமமும், பல நியமமும் இல்லை*
*– ஸ்ரீ வ. பூ. 24*

| | |
|---|---|
| தேச நியமம் | தூய இடம், புண்ணிய ஸ்தலம் முதலியன. |
| கால நியமம் | வேனிற் காலம். |
| பிரகார நியமம் | கால், கை கழுவுதல், நீராடல். |
| அதிகாரி நியமம் | செய்வதற்கு உரிய குறிப்பிட்ட வருணத்தார் மட்டும். |

## முக்திக்கு வழிகாட்டும் சாத்திரப் பெருநூல்கள்

நாம் மேலே பார்த்த நெறிகளின் விளக்கங்களையும், செய்முறைகளையும், முன்தேவைகளையும், கிட்டும் பயன்களையும், தவறினால் விளையும் தீங்குகளையும் மிக விரிவாக வேத, உபநிடத, இதிகாச, புராணங்களும், கீதையும், திருக்குறளும், பல சூத்திரங்களும், **சைவத்தில்** பன்னிரு திருமுறைகளும், மெய்கண்ட, சைவ சித்தாந்த சாத்திர நூல்களும், **வைணவத்தில்** நாலாயிர திவ்யப் பிரபந்தங்களும், பாஷ்யங்கள், வியாக்யானங்கள் என்று இவை ஒவ்வொன்றிற்குமான, விரிவான விளக்கவுரைகளும் பட்டியலிட்டுக் காட்டுகின்றன

## பாமர மக்களுக்கான எளிய வழி

மானுடராய்ப் பிறந்து முக்தியை நாடி இறை வழிபாடு செய்பவர்கள் பல திறத்தவர். அவர்களை வகைப்படுத்திப் பார்த்தால், கீழ்க்கண்ட வகைகளுக்குள் அடங்குவர் :

1. ஆச்சாரியர்கள் அல்லது குருமார்கள்.
2. குரு ஒருவரிடம் உபதேசம் பெற்று அவர் காட்டும் வழி நடப்பவர்கள்.
3. தக்கதொரு குரு அமையாத நிலையில் தாமே சாத்திர நூல்களைக் கற்று, தமக்கு உகந்த வழியினைத் தேர்வு செய்து அதன் வழி நடப்பவர்கள்.
4. தம் முன்னோர்கள் கொண்டிருந்த நம்பிக்கையைத் தொடர்ந்து, தாமும் கிராமப்புறத் தெய்வங்களுக்கும், காவல் தெய்வங்களுக்கும்.

பலி கொடுத்தும், தம் உடலை வருத்திக் கொள்ளும் வேண்டுதல்கள் பலவற்றை நிறைவேற்றியும், பூசாரிகள் மூலம் வழிபாடு செய்தும் வருபவர்கள்.

5. இறை வழிபாட்டிற்கான ஆர்வமும் அறிவும் இருந்தும் சாத்திர நூல்கள் சொல்லும் மந்திர, யந்திர, தந்திர, ஜப, ஹோம சடங்குகளின் பல மாற்று வடிவங்களில், தம் இயல்பிற்கு ஏற்றவையாயும், தாம் புரிந்து கொண்டு அவற்றைக் கடைப்பிடிக்க எளிதானவையாயும் உள்ளன எவை என்று தெரியாத நிலையில் திகைத்து நிற்பவர்கள்.
6. இறை வழிபாட்டில் ஈர்ப்பு இருந்தும், கல்வியறிவுக் குறைவாலும், வழிபாட்டு முறைகளிலுள்ள கடினத்தாலும், சில சடங்குகளுடன் உடன்பாடு இல்லாமையாலும் மூன்றாமவர் உதவி இல்லாது தாமே நேரடியாகச் செய்யக் கூடிய எளியதொரு வழிபாட்டு முறையை நாடி நிற்கும் சாமானிய மக்கள்.

இதில் முதல் மூன்று தொகுதியினரின் மொத்த எண்ணிக்கை மிக மிகக் குறைவு. ஐந்து, ஆறாம் தொகுதியினரின் எண்ணிக்கைதான் மிக அதிகம். நான்காமவர் கடைப்பிடிப்பது தினசரி வழிபாட்டிற்குத் தக்கது எனப் பலரால் ஏற்றுக் கொள்ள இயலாதது.

**இந்தச் சூழ்நிலையில், எண்ணிக்கையில் மிக அதிகமான ஐந்தாமவர்க்கும் ஆறாமவர்க்கும் ஏற்புடைத்தான, தாமே நேரடியாகச் செய்யக்கூடிய, எளிதான, சுருக்கமான வழி ஒன்று தேவை என்பது நன்கு புலனாகிறது.**

நமக்கு இத்தனை வெளிப்படையாகத் தெரிந்த ஒன்று அந்த இறையவர்க்கும் அருளாளர்களுக்கும் நன்றாகத் தெரியும்தானே? எனவே அவர்கள் புதியதொரு வழிபாட்டு முறையைத் தேடும் பணியினை நமக்கு வைக்காது, இருக்கின்றவற்றையே சடங்குகளை நீக்கி எளிமைப் படுத்தியும் சுருக்கியும் அருளியுள்ளார்கள். அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

## 1. மஹாபாரதத்தில் வரும் காட்சி

யுத்தத்தில் காயமுற்ற **பீஷ்மர்** அம்புப் படுக்கையில் படுத்துக் கொண்டு உத்தராயண புண்ணிய காலத்திற்காகக் காத்திருக்கிறார். **ஸ்ரீ கிருஷ்ணர், வியாசர்** ஆகியவரின் உந்துதலால் **யுதிஷ்டிரர் (தருமர்)** பீஷ்மரிடம்

வந்து தருமோபதேசத்தையும், பாவம் நீக்கும் முறைகளையும் விளக்கமாகக் கேட்டுக் கொண்டார். என்றாலும் **சிறு முயற்சியால் பெறும் பயன்** தரக்கூடியதாயுள்ள உபாயம் பீஷ்மரால் சொல்லப்படவில்லை எனக் கருதிய யுதிஷ்டிரர் பீஷ்மரிடம் நிறைவாக ஆறு கேள்விகளைக் கேட்டார். அவற்றிற்குப் பதில் கூறும் முகத்தான் **ஸ்ரீவிஷ்ணுவின்** ஆயிரம் திருநாமங்கள் அடங்கிய 108 ஸ்லோகங்களைச் சொல்லி பீஷ்மர் உபதேசத்தை நிறைவு செய்தார்!

யுதிஷ்டிரர் கேட்ட ஆறு கேள்விகளில் ஒன்றும், அதற்கு பீஷ்மர் கொடுத்த பதிலும் இதோ!

*பிறவியடைந்த ஜந்து எதை ஜபித்துப் பிறந்து உழலும்*
*தளையினின்று விடுபடும்?*

*— ஸ்ரீ வி. ஸ. — ஸ் 8*

*உலக நாயகனும், தேவ தேவனும், அளவு கடந்தவனும்*
*ஆகிய புருஷோத்தமனை*
*இடைவிடா முயற்சியுடன் ஆயிரம் நாமங்களால் துதிப்பதனால்!*

*— ஸ்ரீ வி. ஸ. — ஸ் 9*

பீஷ்மர் சொல்ல இதைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் ஸ்ரீ கிருஷ்ணரும் தருமரும் மட்டுமல்ல, **அர்ஜுனன்** இருந்தான். **வியாசர்** இருந்தார். **பரமேஸ்வரன்** இருந்தார். **பார்வதி** இருந்தார். **ப்ரம்மா** இருந்தார். **ஸஞ்ஜயனும்** கேட்டுக் கொண்டிருந்தார். நிறைவில் எல்லோரும் பீஷ்மரை நமஸ்காரம் செய்தார்கள்.

அது சமயம் **அன்னை பார்வதிக்கு** ஒரு ஆதங்கம்! அடியார்களின் எளிய தன்மை அம்மையாருக்கு நன்கு தெரியுமல்லவா? ஆயிரம் திருநாமங்கள் கொண்ட 108 ஸ்லோகங்களையும், அதற்கு முன்னரும் பின்னரும் சொல்லியிருக்கும் ஏனைய சடங்குகளையும் **சாமான்ய அடியார்களால்** எளிதாக தினமும் நிறைவு செய்ய இயலாது என்பதை உணர்ந்த இரக்கமிகு **அன்னை பார்வதி பரமேஸ்வரனைப்** பார்த்துக் கேட்டார்.

*பார்வத் யுவாச—*
*கேனோபாயேன லகுனா விஷ்ணோர் நாம—ஸஹஸ்ரகம்*
*பட்யதே பண்டிதைர் நித்யம் ஸ்ரோதும் இச்சாம்யஹம் பிரபோ*

*— ஸ்ரீ வி. ஸ. உ. பா — ஸ் 26*

[இந்த விஷ்ணு ஸகஸ்ரநாமத்தை எப்போதும் ஞானவான்கள் ஜபிக்கிறார்கள். ஆனால் அதையே எந்த உபாயத்தால் ஏனையோர் எளிதாக ஜபிக்கமுடியும்?]

**பரமேஸ்வரன்** தயங்காது பதில் தந்தார்!

*ஈஸ்வர உவாச–*
*ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே*
*ஸ்கஸ்ராநாம தத்துல்யம் ராமநாம வரானனே*
*ஸ்ரீராமநாம வரானன ஓம் நம இதி*

*– ஸ்ரீ வி. ஸ. உ. பா – ஸ் 27*

["ஸ்ரீ ராம ராம ராம" என்று மனதிற்கு இனியவனான ராமனிடத்தில் நான் ரமிக்கிறேன். அந்த ராம நாமம் ஸகஸ்ரநாமத்திற்கு சமம். அழகிய முகத்தினளே! ஸ்ரீ ராம நாமமே ஸகஸ்ரநாமத்திற்கு சமம். ஓம், நமஸ்காரம்!]

நம்மைப் போன்ற சாமான்ய அடியார்களுக்கு இறை வழிபாட்டினை எளிதாக்க அன்னை எத்தனை பரிவோடு சிறிய வழியினைக் கேட்டறிகிறாள்! பரமசிவனும் ஆயிரம் திருநாமங்களில் **ஒரு நாமமாகிய ராம நாமத்தைச் சொன்னாலே போதும்** என்று சொல்கிறார்.



## 02. திரட்டுக்கள் ஏன்?

ஒரு பழத்தினை நாம் சாப்பிடவேண்டுமானால் அதன் தோலை உரித்து, கொட்டைகளைக் கவனமாக நீக்கி விட்டுச் சாப்பிட வேண்டும். பின்னர் சில பழங்களின் சக்கைகளைத் துப்பவும் வேண்டும். மற்றொருவர் பிழிந்து அதையே சாறாகத் தருவதைச் சாப்பிட்டால் முழுப் பழம் சாப்பிட்ட பலனையே நாம் எளிதில் அடைகிறோம்.

ஒரு படி பாலைக் காய்ச்சி அப்படியே சாப்பிடாது அதனை நன்றாகச் சுண்டக் காய்ச்சச் செய்து, சிறிய அளவாக மாற்றிச் சாப்பிட்டாலும் முழுப் பலனையும் நாம் பெறுகிறோம். இப்படிச் சிறிய அளவிற்கு மாற்றப்பெற்ற பாலிற்குத் **திரட்டுப் பால்** என்று பெயர்.

வேத, இதிகாச, புராணங்கள், ஸஹஸ்ரநாமங்கள், பல்லாயிரம் பாடல்கள் கொண்ட திவ்ய பிரபந்தங்கள், பன்னிரு திருமுறைகள், 700 ஸ்லோகங்களைக் கொண்ட கீதை முதலிய பெரிய மூல நூல்களைக் கண்டு, பெருவாரியான சாமானிய மக்கள் அவற்றின் அருகில் வரவே பயப்படுகிறார்கள். அது மட்டுமல்ல, இவற்றில் ஒன்றை மட்டும்கூட ஒழுங்காகப் பொருள் புரிந்து படித்து, அதனை உள்வாங்கி மனத்திலிருத்தி, தினமும் தவறாது பாராயணம் செய்து, முக்தியைப் பெறுவது தம்மால் இயலாத காரியம் என்ற முடிவிற்கு வந்து ஒதுங்கியே போய்விடுகிறார்கள்.

இவர்களை மீண்டும் முக்திப் பாதைக்கு அழைத்து வர நம் ஆச்சாரியார்களும்

அருளாளர்களும் தொன்று தொட்டு முயன்று வந்திருக்கிறார்கள். அதற்கு அவர்கள் கையாண்ட வழிகள் இரண்டு.

கடினமான மூல நூல்களைச் செவ்வனே கற்று, அவற்றின் முக்கியப் பொருளையும் செய்திகளையும் உள்வாங்கி, அவற்றின் **சாரத்தைச்** சிறு சிறு நூல்களாக ஆக்கித் தந்துள்ளார்கள்.

நூற்றுக்கணக்கான பதிகங்கள் / பாடல்கள் / ஸ்லோகங்கள் கொண்ட நூல்களையும் இதே முறையில் படித்து, அவற்றிலிருந்து ஒரு குறிப்பிட்ட பொருளுக்கான பதிகங்களை / பாடல்களை / ஸ்லோகங்களை மட்டும் தனியே பிரித்து, அவசியமிருந்தால் தாம் எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்ப மூல நூல்களிலிருக்கும் வரிசையிலிருந்து மாற்றிச் சிறு நூல்களாக ஆக்கித் தந்துள்ளார்கள். இவற்றிற்குத் **திரட்டு** என்று பெயர்.

**கீதாசாரம்**

**பிரஸ்தான த்ரயங்களில்** ஒன்றானதும், நீண்ட நாட்களாக ஆன்மிக உலகத்தில் பேசப் பெற்று வருவதுமான 700 ஸ்லோகங்கள் கொண்ட **கீதை**யின் சாரத்தை வடமொழியில் 32 ஸ்லோகங்களுக்குள் திரட்டி **"ஸ்ரீ கீதார்த்த சங்க்ரஹம்"** என்ற சிறு நூலாக **சுவாமி ஆளவந்தார்** வழங்கியுள்ளார்.

பின்னர் வந்த **சுவாமி வேதாந்த தேசிகர்** சுவாமி ஆளவந்தாரின் 32 ஸ்லோக சாரத்தை மேலும் சுருக்கி, தமிழில் மாற்றி, 21 பாசுரங்களில் **"கீதார்த்த சங்கிரகம்"** என்ற நூலாக ஆக்கித் தந்துள்ளார். மற்றும் **பகவான் ரமண மஹரிஷியும்** கீதையை அழகிய தமிழில் 42 பாடல்களில் சாரமாக்கி **"ஸ்ரீ பகவத் கீதாசாரம்"** என்ற நூலினைத் தந்திருக்கிறார்.

**அகத்தியர் தேவாரத் திரட்டு**

சைவம் சார்ந்த **பன்னிரு திருமுறை**களுள் முதல் ஏழு திருமுறைகள் **தேவாரம்** என அழைக்கப் பெறுகின்றன. இந்தத் தேவாரம் ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட பதிகங்கள் கொண்டதாக இருந்தும், இத் தேவாரத்தைச் சோழ மன்னனது முயற்சியால் **தில்லை நடராஜர்** திருக்கோவிலில் இருந்து தேடி எடுத்த பொழுது, செல்லரித்தவை போக எஞ்சி இருந்த பதிகங்கள் 797 தான்! இவற்றை **நம்பியாண்டார்**

**நம்பிகள்** ஏழு திருமுறைகளாகப் பிரித்தார். இவைதான் நாம் இப்போது அழைக்கும் **அடங்கன் முறை** என்ற திருமுறைகள்.

முதல் மூன்று திருமுறைகள் **திருஞானசம்பந்தர்** பாடியவை. நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகள் **அப்பர்** பாடியவை. ஏழாம் திருமுறை **சுந்தரர்** பாடியவை.

ஏழு திருமுறைகளிலும் அடங்கியுள்ளவை **8262 திருப்பாடல்கள்** கொண்ட **797 பதிகங்கள்.** பொதுவாகப் **பத்துப்** பாடல்கள் கொண்டவைதான் பதிகங்கள். ஆனால் சில பதிகங்களில் பத்துக்கு மேற்பட்ட பாடல்களும் அடங்கியிருக்கும்.

சைவம் சார்ந்த மக்களுக்குப் பாராயணம் செய்வதற்கு மிகச் சிறந்த நூல் **தேவாரம்** என்பர்.

முன்னர் வாழ்ந்த **சிவாலயர்** என்ற முனிவர் மிக்க ஆர்வத்தோடு இத் தேவாரத்தினைத் தினமும் பாராயணம் செய்ய முயன்றிருக்கிறார். பல காலம் முயன்றும் வெற்றி கிட்டவில்லை. நேரே தேவாரத்தினைத் தேடி எடுத்த இடமான **தில்லை** என்ற சிதம்பரம் சென்று **நடராஜரிடம்** தமது ஆவலையும், முயற்சியையும், இயலாமையையும் சொல்லி, அதற்கு ஒரு நல்வழி காட்டுமாறு வேண்டியிருக்கிறார்.

அடியார்க்கு அருள் பாலித்திடும் நடராசப் பெருமானும்,

> "நீ தெற்கே **பொதிகை மலை** சென்று அங்குள்ள **அகத்தியரைக்** கண்டு அவர் முன் உன் வேண்டுதலை வை! அவர் உரிய வழியை உனக்குக் காட்டுவார்!"

என்று அசரீரி பிறப்பித்தார்

சிவாலய முனிவரும் பொதிகை மலை சென்று அகத்தியரைக் காணச் சில ஆண்டுகள் தவம் புரிந்திருக்கிறார். உரிய காலத்தில் அகத்தியரும் அவர் முன் தோன்றித் தினமும் பாராயணம் செய்வதற்கு ஏதுவாக 797 தேவாரப் பதிகங்களில் இருந்து 263 பாடல்கள் கொண்ட **25 பதிகங்களைத்** திரட்டி அருளியிருக்கிறார். இந்தத் தொகுப்புத்தான் இக்காலத்தில் பலரும் பாராயணம் செய்யும் **அகத்தியர் தேவாரத் திரட்டு!**

திரட்டுதல் என்றாலே பொறுக்கி எடுக்கப் பெற்றவை என்பது வெளிப்படை. ஒரு குறிக்கோளை மனதிற் கொண்டு அதை அடைவதற்கு ஏதுவான பதிகங்களைத் தெரிவு செய்து தொகுத்தல். எனவே இத்திரட்டில் ஒரு அடியாரது **பக்தி என்ற அரும்பு முக்தியாக மலர்வதற்கு** ஏற்ற வகையில் அகத்தியர் தமது திரட்டினை எட்டுப் படிநிலைகளில் தொகுத்திருக்கிறார்.

இதைக் குறிக்கும் அழகிய பழம் பாடல் ஒன்று!

*குருவருளும், வெண்ணீறு, எழுத்தஞ்சும், கோயில்,*
*அரன் உருவும், என்தலைமே லாக்கும் – திருவடியும்,*
*சிட்டான அர்ச்சனையும், தொண்டும் சிவாலயற்கு என்று*
*இட்டார் அகத்தியனார் எட்டு*

அந்தப் படிநிலைகளும் அவை ஒவ்வொன்றிலும் அடங்கியுள்ள பதிகங்களும் பாடியுள்ள அருளாளரின் பெயர்களும் கீழே தரப் பெற்றிருக்கின்றன.

| படி நிலை எண் | பதிக வரிசை எண் | படிநிலை | பதிகம் | அருளியவர் |
|---|---|---|---|---|
| 1 | 1 | குருவருள் | தோடுடைய செவியன் | திருஞானசம்பந்தர் |
| | 2 | குருவருள் | கூற்றாயினவாறு | திருநாவுக்கரசர் |
| | 3 | குருவருள் | பித்தா பிறைசூடி | சுந்தரர் |
| 2 | 4 | பரையின் வரலாறு (திருநீறு) | மந்திரமாவது நீறு | திருஞானசம்பந்தர் |
| 3 | 5 | அஞ்செழுத்துண்மை | துஞ்சலும் துஞ்சல் | திருஞானசம்பந்தர் |
| | 6 | அஞ்செழுத்துண்மை | காதலாகிக் கசிந்து | திருஞானசம்பந்தர் |
| | 7 | அஞ்செழுத்துண்மை | சொற்றுணை வேதியன் | திருநாவுக்கரசர் |
| | 8 | அஞ்செழுத்துண்மை | மற்றுப்பற்று எனக்கின்றி | சுந்தரர் |
| 4 | 9 | கோயிற்றிறம் | ஆரூர் தில்லையம்பல | திருஞானசம்பந்தர் |
| | 10 | கோயிற்றிறம் | தில்லைச் சிற்றம்பலமு | திருநாவுக்கரசர் |
| | 11 | கோயிற்றிறம் | காட்டூர்க் கடலே | சுந்தரர் |
| 5 | 12 | சிவனுருவம் | ஒருருவாயினை | திருஞானசம்பந்தர் |
| | 13 | சிவனுருவம் | வரிய மறையா | திருஞானசம்பந்தர் |

| | | | | |
|---|---|---|---|---|
| | 14 | சிவனுருவம் | பாளையுடைக் கமு | திருநாவுக்கரசர் |
| | 15 | சிவனுருவம் | வடிவேறு திரிசூலம் | திருநாவுக்கரசர் |
| | 16 | சிவனுருவம் | மருவர் கொன்றை | சுந்தரர் |
| 6 | 17 | திருவடிகள் | பொடியுடை மார்பினர் | திருஞானசம்பந்தர் |
| | 18 | திருவடிகள் | அரவணையான் சிந்தித் | திருநாவுக்கரசர் |
| | 19 | திருவடிகள் | அந்தணாளன் உன் | சுந்தரர் |
| 7 | 20 | அருச்சனை | பந்துசேர் விரலாள் | திருஞானசம்பந்தர் |
| | 21 | அருச்சனை | வேற்றாகி விண்ணாகி | திருநாவுக்கரசர் |
| | 22 | அருச்சனை | கொன்று செய்த | சுந்தரர் |
| 8 | 23 | அடிமை | வேயுறு தோளி | திருஞானசம்பந்தர் |
| | 24 | அடிமை | குலம் பலம் பாவரு | திருநாவுக்கரசர் |
| | 25 | அடிமை | தில்லைவாழந்தணர் | சுந்தரர் |



# 03. ஆதி சங்கர பகவத் பாதர்

## பிறப்பு

கேரள வள நாட்டில், **பூர்ணா** என்ற நதிக்கரையில், **காலடி** என்ற கிராமத்தில், **சிவகுரு - ஆர்யாம்பா** என்ற திவ்ய தம்பதிகளின் திருமகனாய் கி.பி. **788** ஆம் ஆண்டு **அருளாளர் ஆதிசங்கரர்** அவதரித்தார். பிள்ளைப் பேறு இல்லாதிருந்த இப் பெற்றோர்களின் நீண்ட நாளையப் பிரார்த்தனைக்குப் பின்னர் ஆர்யாம்பா அம்மையாரின் கனவில் சிவனே **தோன்றி**, "நானே வந்து உனக்குப் பிள்ளையாகப் பிறக்கவிருக்கிறேன்!" என்று சொன்னதாகக் கர்ண பரம்பரைக் கதை ஒன்று உண்டு. சிவனுக்கு நன்றி கூறும் வகையில், பிறந்த பிள்ளைக்கு **சங்கரன்** அல்லது மங்களத்தைத் தருபவன் என்ற திருநாமம் இட்டனர் பெற்றோர். 32 ஆண்டு காலமே வாழ்ந்து, இறை வழிபாட்டு நெறிகளிலும், தத்துவத் துறையிலும் ஒரு பிரளயத்தையே உண்டாக்கி, மக்கள் நல்வழி வாழவும், நிறைவாக உய்வு பெறவும் பல மாற்றங்களைத் தோற்றுவித்து கி.பி. 820 ஆம் ஆண்டு இறைவனோடு ஒன்றி மறைந்தார். இவர் வாழ்ந்தது 32 ஆண்டுகள்தான் என்பது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப் பெற்றிருந்தாலும், வாழ்ந்த காலம் பல ஆய்வாளர்களும், வரலாற்று ஆசிரியர்களும் ஏற்றுக் கொண்டுள்ள கி.பி. 788 - 820 அல்ல, கி.மு. 509 - 477 தான் சரியான காலம் என்று பூரி, துவாரகை, காஞ்சியிலுள்ள பீடங்கள் கூறுகின்றன.

## இளமைக் காலம்

**இறையருள்** பெற்ற பிள்ளை ஆதி சங்கரர் என்பது அவரது இளமைக்காலத்திலேயே தெளிவுறத் தெரிந்தது. இறையருள் தந்த **ஞானத்தால்** வேதங்களையும், உபநிடதங்களையும், இதிகாசங்களையும், புராணங்களையும் கசடறக் கற்று, உணர்ந்து, அவற்றை மற்றவருக்கு விரிவாக விளக்கவும் வல்ல திறமை மிகப் பெற்றிருந்தார். இது மட்டுமல்ல, இந்து மதம் பற்றியது மட்டுமல்லாது ஏனைய மதங்களின் தத்துவங்களையும் நன்கு அறிந்த ஒரு தத்துவ வித்தகராகவே அவர் விளங்கினார்.

## தொடக்க கால அருளிச் செயல்கள்

பிரம்மச்சாரி சங்கரன் அந்த நிலைக்கு ஏற்ப **பிச்சை** எடுத்துத்தான் உண்ணவேண்டும். ஒரு நாள் பிச்சைப் பாத்திரத்துடன் ஒரு வீட்டின் முன் நின்றான். **பிச்சை**யிட ஏதுமில்லாத ஏழை மாதரசி வெளியே வந்து மறுநாள் காலை தன் ஏகாதசி விரத நிறைவுக்காக வைத்திருந்த ஒரே **நெல்லிக்கனி**யைப் பாத்திரத்தில் இட்டாள். அம்மையாரின் ஏழ்மை நிலையையும், இருப்பினும் எப்படியும் பிச்சை இட வேண்டும் என்ற உளமார்ந்த உணர்வையும் கண்டு இரங்கினான் இளைய பிரம்மச்சாரி. அவன் உள்ளுணர்வு உந்த, அவனது திருவாய் அருவியாய்க் கொட்டியது ஒரு திருப்பாடலை. ஆம்! அதுதான் இன்று நாடெங்கும், வீடெங்கும் ஒலிக்கும் **'கனகதாரா ஸ்தோத்திரம்'**. அன்னை இலக்குமியிடம், "இந்த அம்மையாரது இல்லத்தில் நீ **பொன்னை மழையாகக்** கொட்ட வேண்டும்!"என்று வேண்டிய பாடல். வேண்டியன முழுதும் தரும் **இலக்குமி** கேட்டதைக் கொடுத்தாள்.

இந்தத் திருப்பாடலை நம் **கவியரசர் கண்ணதாசன்** அவர்கள் எளிய தமிழில், புனிதம் குறையாது **"பொன் மழை"** என்ற பெயரில் நமக்காக மொழி மாற்றம் செய்து தந்துள்ளார்கள். மூலத்தைப் பாடினால் என்னென்ன நலன்கள் கிட்டுமோ அவை அத்தனையும் இந்தப் "பொன் மழை"யைப் பாராயணம் செய்தாலும் கிட்டும் என்பது உறுதி. பலர் தம் சொந்த அனுபவங்களில் கண்ட உண்மையும் கூட!

அடுத்து ஒரு அதிசய நிகழ்வு. மூன்று வயதிலேயே தந்தையை இழந்து விட்ட சங்கரன் அன்னை ஆர்யாம்பாளின் அரவணைப்பிலேயே

வளர்ந்து வந்தான். காலடி கிராமத்தில் **பூர்ணா நதி** அவரது வீட்டிற்கு அருகாமையில் இல்லாது தூரத்தில் உள்ள ஒரு காட்டிற்குள் ஓடிக்கொண்டிருந்தது. அவரது அன்னை ஆற்றில் நீராடிவர நீண்ட தூரம் நடந்து சென்று திரும்பும்பொழுது, ஒரு நாள் களைப்பின் மிகுதியால் வழியிலேயே மயங்கி விழுந்துவிட்டார். நதிக்கரைக்குப் போன அன்னை வெகுநேரமாகியும் திரும்பி வரவில்லையே என்ற ஆதங்கத்துடன் நதியை நோக்கி நடந்தான் எட்டுவயதுச் சங்கரன். மயங்கிய நிலையில் அன்னையை வழியில் கண்டான். உடனே ஆவன செய்து வீட்டிற்கு அழைத்து வந்தான். இரவில் ஒரு சிந்தனை. ''இந்த நதி இப்படி எங்கோ காட்டிற்குள் ஓடுவதால் தானே என் அன்னைக்கு மட்டுமல்ல, அனைவருக்கும் இத்தனை சிரமம். ஊருக்கு அருகே ஓடினால் மக்களுக்கும் என் அன்னைக்கும் நடைப்பயணம் வெகுவாகக் குறையுமே!'' பூர்ணா நதியிடமே தன் பிரார்த்தனையைச் சமர்ப்பித்தான். காலையில் விழித்தெழுந்து பார்த்தான். என்ன அதிசயம்! பூர்ணா நதி தன் தடம் மாறி **அவன் வீட்டோரம்** அமைதியாக ஓடிக் கொண்டிருந்தது!

## சந்நியாஸம்

தெய்வாம்சம் பொருந்திய இந்த இளைஞருக்கு இல்வாழ்க்கையில் பிடிப்பு எதுவுமில்லை. தன் அம்மாவிற்கு மட்டும் பிள்ளையாக இராது **உலகிற்கே பிள்ளையாகி,** உலக மக்கள் உய்வதற்கான வழியினைக் காட்டவேண்டும் என்ற ஆவல் அவனை ஒரு துறவியாக மாற உந்தியது. ஆனால் தவமிருந்து ஈன்றெடுத்த அன்னைக்கு அதில் விருப்பமில்லை. அன்னையின் மனம் மாறும் காலம் வரை பொறுத்திருந்தான். அந்த நேரமும் ஒரு நாள் வந்தது. தாயும் மகனும் ஆற்றுக்கு நீராடச் சென்றனர். தாயாரை நீராட்டிக் கரை சேர்த்துவிட்டு சங்கரன் ஆற்றுக்குள் இறங்கினான். அடுத்த நிமிடம் அப்பிள்ளையின் காலை ஒரு பெரும் **முதலை** கவ்விக் கொண்டது. அன்னையை உதவிக்குக் கூவி அழைத்தான். அவரால் முதலையின் பிடியிலிருந்து அன்பு மகனை மீட்க முடியவில்லை.

''இதுதான் தன் துறவிற்கு அன்னையின் சம்மதத்தைப் பெற, தக்க தருணம்'' என்று சங்கரனது உள்ளுணர்வு கூறியது. ''அன்னையே, இப்பொழுது நீ என்னைக் காப்பாற்ற ஒரே ஒரு வழிதான் உண்டு! உன் பிள்ளை என்ற என் பூர்வாஸ்ரம வாழ்க்கையை இந்த முதலையின் வாயில்

கழித்து விட்டு, புதுப்பிறவி எடுத்து ஊருக்கெல்லாம் பிள்ளை என்ற துறவியாக மாறுவதை நீ ஏற்றுக்கொண்டால் நான் மீண்டும் உயிரோடு ஆற்றை விட்டு வெளியேவர வாய்ப்புண்டு! அருள்கூர்ந்து அனுமதி தா!" என்று வேண்டினான். வேறு வழி இல்லாத நிலையில், எங்கிருந்தாலும் என் மகன் உயிரோடு வாழட்டும் என்ற பெருநோக்கத்தோடு "உனக்கு எது சரியென்று தோன்றுகிறதோ, அதையே செய்து கொள்!" என்றார் தவமிருந்து, கருவுற்றுப் பத்துமாதம் சுமந்து பெற்ற அருட்குழந்தையின் அன்னை. அவ்வளவுதான் அடுத்த கணமே **'ப்ரைஷோச்சாரணம்'** பண்ணி அதாவது **'ப்ரைஷ'** என்ற உரிய மந்திரத்தைச் சொல்லி, சந்நியாஸ்ரமம் வாங்கிக் கொண்டு துறவியாக மாறிவிட்டார் சங்கரர்.

## அன்னைக்கு இறுதிச் சடங்கு

துறவியானதும் பூர்வாஸ்ரமத் தாயாரான ஆர்யாம்பா அம்மையாரிடம் விடைபெற முனைந்தார்.ஆனால் அன்னையோ விடைகொடுக்கு முன் ஒரு கேள்வி கேட்டார்.

> "என் அந்திமக் காலத்தில் கூட ஒரே பிள்ளையான உன்னைப் பார்க்காதே என் ஆவி பிரிய வேண்டுமா?".

துறவி சங்கரரின் தீர்க்கமான பதில்:

> "இல்லை! உன் மன நிம்மதிக்காகவேணும் அந்த நேரத்தில் உன் பக்கத்திலேயே இருப்பேன். உனக்கான இறுதிச் சடங்குகளையும் நானே செய்வேன். அந்த நேரத்தில் நீ என்னை நினைத்தால் போதும். உடனே நான் வந்து விடுவேன்."

இப்படி வாக்குக் கொடுத்து, அன்னையை வணங்கிப் புறப்பட்டுச் சென்றார். அது போலவே 12 ஆண்டுகளுக்குப் பின்னர் ஆதிசங்கரர் **சிருங்கேரி**யில் இருக்கும் பொழுது அன்னையின் இறுதி நேரம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார். உடனே புறப்பட்டு காலடி கிராமத்தை அடைந்து, அவர் அருகில் அமர்ந்து, **சிவ புஜங்கத்தையும்**, அன்னையின் இஷ்ட தெய்வமான ஸ்ரீகிருஷ்ணன் மேல் **விஷ்ணு புஜங்கத்தையும்** பாடி அருளினார்.அமைதியாக அன்னையின் ஆவி பிரிந்தது. உள்ளூர் அந்தணர்கள் துறவியான ஒருவர் இறுதிச் சடங்குகள் செய்யக்கூடாது எனத் தடுத்தனர். அதைப் பொருட்படுத்தாது தாயாரின் இறுதிச் சடங்குகளை தனி ஒருவராகத் தானே நிறைவு செய்துவிட்டுத் திரும்பினார்.

## புனித யாத்திரை

தக்கதொரு குருவினைக் காணக் காடுகளையும், நதிகளையும், மலைகளையும் கடந்து சென்றார். **நர்மதா நதிக்கரையில்** உள்ள ஒரு குகையில் மஹா **குரு கௌடபாத**ரின் சீடரான, **குரு கோவிந்த பாதர்** பல ஆண்டுகளாகத் தியானத்தில் இருப்பதாகக் கேள்விப்பட்டு, அக்குகையினை அடைந்து காத்திருந்தார். தியான நிறைவில் குரு விழித்துப் பார்த்தார். தன்னைச் சீடனாக ஏற்றுக் கொள்ள வேண்டித் தன் முன்னே சாஷ்டாங்க (சக + அஷ்ட + அங்க) நமஸ்காரம் செய்த பால சந்நியாசியின் தெய்வீகத் திருமுகத்தினை ஏறிட்டுப் பார்த்த குரு கோவிந்தபாதர் கேட்டார், "குழந்தாய்! நீ யார்?" அவ்வளவுதான்! சிறுவனின் திருவாயிலிருந்து மடைதிறந்தாற்போல் வெள்ளமென வந்தன **"தஸ ஸ்லோகி"** என்ற பத்துப் பாடல்கள்!

## சீடர் சங்கரர்

சங்கரரின் **உள்ளொளி** கண்டு வியந்து போனார் குரு. அவரைத் தமது சீடராகவும் ஏற்றுக் கொண்டார். மூன்றாண்டுகள் முறையாகப் பாடமும் பயிற்சியும் பெற்றார், சங்கரர்.

## திக்விஜயம்

குருநாதர் விருப்பப்படி, சங்கரர் **இந்து மதத்திற்குப் புத்துயிர் கொடுக்கும் திருப்பணி**க்காக இந்திய நாட்டின் நான்கு திசைகளிலும் உள்ள ஓம்காரநாத், காசி, பத்ரிநாத், ஜ்யோதிஷ்மட், கேதார்நாத், குருக்ஷேத்ரம், பிருந்தாவனம், மதுரா, பிரயாகை, கோகர்ணம், கொல்லூர், கூகே, சிருங்கேரி, காலடி, ராமேஸ்வரம், திருச்செந்தூர், ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம், திருப்பதி, ராஜமுந்திரி, பூரி, உஜ்ஜயினி,சோம்நாத்பூர், துவாரகை, பசுபதிநாத், காஷ்மீர் முதலிய திருத்தலங்களுக்கெல்லாம் சென்று, அங்குள்ள தெய்வங்களை எல்லாம் தரிசித்தார். இந்தப் புனித யாத்திரையில் அவர் பல சீடர்களையும் ஏற்றுக் கொண்டார்.

அவரது யாத்திரையின் பொழுது, எதிர் வந்தவரையும், சிலரைத் தேடியும் சென்று, மாற்று மதவாதிகளுடன் வாதம் புரிந்து, வெற்றி வாகை சூடி, **இந்து மத தத்துவத்தின், வேதங்களின், உபநிடதங்களின்,** மற்றுமுள்ள முக்கிய நூல்களின் **முதன்மைத்துவத்தை** நிலைநாட்டினார்.

## சர்வஞ்ஞ பீடமேறியது

நிறைவாக, காஷ்மீரத்தில் உள்ள **சாரதா பீடத்தில்** வீற்றிருந்த மாபெரும் அதாவது ஞானிகளின் வரிசைகளை வாதத்தில் வென்று அங்குள்ள **சர்வஞ்ஞ** பீடத்தில், அனைத்தும் அறிந்தவருக்கான ஞான பீடத்தில், ஏறி அமர்ந்தார்.

## அத்வைத நெறி நிறுவனர்

இவ்வுலக வாழ்க்கையில் மானுடர், **தளை அல்லது பாசம்** என்ற கட்டுக்குள் சிக்கித் துன்புறுகின்றனர் என்பது வேதாந்தங்களின் அடிப்படைக் கருத்துக்களுள் ஒன்று. மானுடர் இந்தத் தளையிலிருந்து பரம்பொருளின் பெரும் கருணையால் விடுபட்டு, வீடு பேறு பெறுவதற்கான **ஆன்மிக நெறி**யினைக் கண்டறிந்து, அந்நெறியில் நடந்து, **வீடுபேறு பெறுதலே மானுடரின் மேலான குறிக்கோளாகும்.** இன்னும் சொல்லப்போனால் அதற்காகவேதான் நமக்கு இந்த **மானுடப்பிறவி தரப் பெற்றிருக்கிறது** என்பதையும் நாம் நம்புகிறோம்.

இதற்கென **அத்வைத நெறி**யினை வகுத்து நிறுவியவர் **ஆதிசங்கரர். அத்வைதம்** என்றால் **இரண்டற்றது என்று பொருள்.** ஒன்று என்று சொல்லி இருக்கலாம். ஆனால் அப்படிச் சொன்னால், இரண்டாவது ஒன்றும் இருக்கலாமோ என்ற ஐயம் எழலாம். எனவே அதற்கு இடம் கொடாது இரண்டல்லாதது என்று தீர்க்கமாகச் சொல்லி விட்டார் சங்கரர்.

அத்வைத நெறியின் சாரத்தைக் கீழ்க்கண்ட ஸ்லோகத்திலிருந்து அறியலாம்.

*''ப்ரம்ம சத்யம் ஜகத்மித்யா*
*ஜீவோ ப்ரம்மைவ நாபர ....''*

*—ஆ.ச. – வி.சூ. – 20*

[ப்ரம்மமே உண்மைப் பொருள். இவ்வுலகம் நிலையில்லாதது. ஜீவன் அல்லது ஆன்மா ப்ரம்மத்திலிருந்து வேறுபட்டதல்ல]

இந்த ஸ்லோகத்திலிருந்து அத்வைத தத்துவத்தின் சாரம் என்று நாம் அறிபவை :

- பிரம்மம் அல்லது பரம்பொருள் மட்டுமே **உண்மையான பொருள்.**
- **குணங்கள், குறிகள் எதுவும் இல்லாத நிர்க்குணமானது பிரம்மம்.**
- **உலகம்** அதன் ஒரு **நிலையற்ற தோற்றமே.**
- **ஜீவாத்மா** எனப்பெறும் ஒவ்வொரு ஆன்மா அல்லது உயிரும் **பிரம்மமே.**

உலகத்தில் **கட்டுண்ட ஜீவாத்மா** அல்லது ஆன்மா, பிரம்மத்தின் திருவருளால், தன்னுடைய **அவித்தையாகிய அஞ்ஞானம்** அல்லது அறியாமையை விலக்கி, **"நானும் பிரம்மமே"** என்ற தெளிவு பெற்றதும், **முக்தி** அல்லது வீடு பேறு அல்லது பிறப்பு - இறப்புச் சங்கிலி வட்டத்திலிருந்து விடுதலை அடைந்து, **பிரம்மத்துடன் ஒன்றி, ஜீவ - ப்ரம்ம ஐக்யம்** என்ற நிலையினை அடைவது.

## அறு சமய நெறி வகுத்தவர்

வேதம் சார்ந்த இந்து மதத்தில் இருப்பவர்கள் காலம் காலமாகத் தனித் தனித் தெய்வங்களைத் தம் இஷ்ட தெய்வங்களாகக் கொண்டு அவற்றையே முதன்மைத் தெய்வங்களாகவும் வழிபாடு செய்து வந்தனர். இந்த **இஷ்டதெய்வ வழிபாட்டு முறை**களிலும் ஒரு **ஒழுங்கையும் நியதியையும்** கொண்டுவர முனைந்த சங்கரர், இந்து மதத்தின் அடியாக **ஷண்மதம்** என்ற **ஆறு உருவ பக்தி மார்க்கங்களை** நெறிப்படுத்தினார்

சைவம் - சிவன்
வைணவம் - விஷ்ணு
சாக்தம் - அம்பிகை
சௌரம் - சூரியன்
காணாபத்யம் - விநாயகர்
கௌமாரம் - சுப்பிரமணியர்

இவை ஒவ்வொன்றினையும் புரிந்து கொண்டு வழிபட ஏதுவாக, இவற்றைப்பற்றிய மக்களின் அறிவு வளர்ச்சி பெற, அறிவார்ந்த நூல்களையும், அவர்களின் பக்தி வளர உணர்வு பூர்வமான **தோத்திரப் பாடல்**களையும் அவரே ஆக்கித் தந்துள்ளார்.

## ஆக்கிய நூல்கள்

இவை **பாஷ்யங்கள்** என அழைக்கப்பெறும் விரிவான **விளக்கவுரைகள்**; **ப்ரக்கிரியாக்கள்** எனப் பெறும் **மூல நூல்கள்; ஸ்லோகங்கள், புஜங்கங்கள், ஸ்துதிகள், பஞ்சரத்னங்கள்** என்றெல்லாம் அழைக்கப் பெறும் பல **தோத்திரப் பாடல்கள்.** இந்துமதத்தின் **"பிரஸ்தான த்ரயம்"** என்று போற்றப் பெறும் மூன்று முதன்மைத்துவ நூல்களான **ப்ரம்மசூத்திரம், உபநிடதங்கள், கீதை** ஆகியவற்றிற்கு இவர் வழங்கியுள்ள பாஷ்யங்கள் காலத்தை வென்றவை. மூல நூல்களில் **விவேக சூடாமணியும், பஜ கோவிந்தமும், சிவானந்தலஹரியும், சௌந்தர்ய லஹரியும்** மக்களை வெகுவாக ஈர்த்துள்ளன. புஜங்கங்களில் **ஸ்ரீஸுப்ரஹ்மண்ய புஜங்கம்** மக்களுக்குப் பெரிதும் பயன் தரத் தக்கதாகும். அனைத்து நூல்களும் வடமொழியிலேயே ஆக்கப் பெற்றுள்ளன.

## மஹா சமாதி

நிறைவாக **கேதார்நாத்தை** அடைந்தார். அங்கு தனது சீடர்கள் முன்னிலையில், தான் முன்னர் தன் குருவின் சன்னிதானத்தில் பாடிய **தஸ ஸ்லோகி** என்ற திருப்பாடலை மீண்டும் பாடி அமைதியாகத் தன் பூத உடலை பஞ்ச பூதங்களுடன் கரைத்துவிட்டு **மஹா சமாதி** அடைந்தார் ஆதிசங்கரர்.



# 04. சிவானந்தலஹரி – ஒரு பருந்துப் பார்வை

ஆதிசங்கரர் ஒரு மாபெரும் வேதாந்தி. **பிரஸ்தானத் த்ரயம்** எனப்பெறும் **உபநிடதங்கள், பகவத் கீதை, ப்ரம்ம சூத்திரம்** ஆகிய முப்பெரும் சாத்திர நூல்களுக்கும் பாஷ்யங்கள் என்ற விளக்க உரைகள் எழுதி வழங்கினார். இவை ஆன்மிக அறிவு வளர்ச்சி ஏணியின் உச்சிப் படியில் இருப்பவர்களே படித்துப் புரிந்து உள்வாங்கிக் கொண்டு, மானுட வாழ்வின் குறிக்கோளான முக்தி அடைய இயலும் என்பதை சங்கரர் உணர்ந்தார்.

அந்த ஏணியின் நடுப்படிகளில் இருப்பவர்களும் மேலே ஏறிச் செல்ல உதவியாக, அந்த முப்பெரும் நூல்களின் சாரத்தை எளிமைப் படுத்தித் தாமே **கிரந்தங்கள்** என்ற மூல நூல்களான **விவேக சூடாமணி, தத்வ போதம், ஆத்ம போதம், சாதனா பஞ்சகம்** முதலியவற்றை எழுதி வழங்கினார். இவையும் **அத்வைதம்** சார்ந்த, தத்துவப் பின்னல்கள் நிறைந்த நூல்களாகவே இருந்தன.

இதற்கிடையில் இந்திய நாடெங்குமான அவரது புனித யாத்திரை தொடர்ந்தது.

அந்தப் புனித யாத்திரையில் பலதரப்பட்ட மக்களைச் சந்திக்கும் வாய்ப்பு அவருக்குக் கிட்டி இருக்க வேண்டும். ஆன்மிக அறிவு ஏணியின் உச்சிப் படியிலும் நடுப்படியிலும் இருப்பவர்களைக் காட்டிலும் ஆன்மிக அறிவு ஏணிக்கு **அருகிலேயே**

**வராதவர்களின்** எண்ணிக்கையே பெருமளவு இருக்கிறது என்பதை அவர் உணர்ந்திருக்கிறார். **அதனால் அவருடைய அணுகு முறையில் ஒரு மாபெரும் மாற்றம் ஏற்பட்டது.**

எனவே, அவர் தமது கொள்கைகளிலும், அணுகு முறைகளிலும், இந்த சாமான்ய மக்கள் கூட்டத்தை ஈர்க்கும் வகையில் மாற்றங்கள் செய்து கொண்டார் போலும்!

- **த்வைதத்தில்** தொடங்கி நாளடைவில் **அத்வைதத்தை** மக்கள் அடையலாம் என்ற மாற்றம்
- **சகுண** வழிபாட்டில் தொடங்கி **நிர்க்குண** வழிபாடு என்ற இலக்கை அடைய முயலலாம்.
- **சகுண** வழிபாட்டிற்கு ஏற்ப **ஏகப் ப்ரம்ம வழிபாட்டினின்றும்** விலகி, அக்காலத்தில் இருந்த பல தெய்வ வழிபாட்டினை நெறிப்படுத்தி, **ஷண்மதம்** என்ற **ஆறு தெய்வ வழிபாட்டு** நெறியினை வகுத்துக் கொடுத்தது
- கடினமான **"ஞான வழி முக்தி"** என்ற நெறியிலிருந்து விலகி **'பக்தி வழி முக்தி'** என்ற எளிய நெறியை ஊக்குவித்தது
- **தியான** வழி இருக்க ஆறு தெய்வத் **திருக்கோவில் வழிபாட்டினையும்** பெருமளவு ஊக்குவித்தது
- வேத உபநிடதச் சொற்கள் அடங்கிய **கடினச் செய்யுள், வசன நடைகளிலிருந்து** மாறி சுலபமாகப் புரிந்து கொள்வதற்கு ஏதுவாக, நிறைய உதாரணங்களோடு கூடிய, பாராயணம் செய்வதற்கு ஏற்ற, **எளிய செய்யுள் நடையில்** தமது புதிய **ஸ்தோத்திர** நூல்களை ஆக்கி அளித்தது
- ஆறு தெய்வங்களையும் அவரவர் இயல்பு, ஈர்ப்பு, நாட்டம் முதலியவற்றிற்கு ஏற்ப, தத்தமது தெய்வங்களை வழிபடுவதற்கான எளிய **புஜங்கங்களை, பஞ்சரத்னங்களை, அஷ்டகங்களை, மாலாஸ்தவங்களை, தசகங்களை, லஹரிகளை** அத் தெய்வங்கள் அனைத்திற்கும் இயற்றி அருளியது
- ஆக, இறைவன் தன் பக்தர்களுக்கு அருள்பாலிக்கக் **கீழிறங்கி வருவது போல ஆதி சங்கரரும் தன்னைத் தாழ விட்டுக் கொண்டு** சாமான்ய மக்களும் ஆன்மிகத்தை நாடி வருவதற்கெனத் தமது உச்ச பீடத்திலிருந்து கீழிறங்கி வந்து ஆவன செய்துள்ளார்.

## ஸ்ரீ சைல யாத்திரை

ஆதி சங்கரரது புனித யாத்திரையில் ஒரு நாள் மாலை **ஆந்திர மாநிலத்தில்** அடர்ந்த காடுகளுக்கு நடுவில் அலைகளுடன் ஆர்ப்பரித்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்த **கிருஷ்ணா நதி** தீரத்தை அடைந்தார். வன விலங்குகளின் உறுமல் ஒரு புறம். அதனூடே பல தரப்பட்ட பறவைகள் பாடும் இனிய கீதம் மறுபுறம். எதிரே தென் கரையில் **நல்லமாலா மலைச்** சரிவு. அதில் வானுயர்ந்த மரங்கள். தன் சீடர்களுடன் நதியைக் கடந்து தென்கரை சென்றார். அந்தக் குளிர்ந்த



பளிங்கு போன்ற தீர்த்தத்தில் மூழ்கித் தம் புனித உடலுக்கு மேலும் புனிதம் சேர்த்துக் கொண்டார். மலை மீது கடும் பாறைகளுக்கும் பெரும் மரங்களுக்கும் இடை இடையே ஏறி, உச்சியில் ஒரு சம தளத்தை அடைந்தார். அந்தச் சிறுதளத்தில் அப்போதே அலர்ந்த மல்லிகையின் நறுமணம் மெல்லிய பூங்காற்றில் மிதந்து வந்தது. அந்த மணத்தில் திளைத்தவாறே எதிரே தெரிந்த மருத மரத்தினைப் பார்த்தார். அதை இறுகச் சுற்றி வளர்ந்திருந்தது மலர்கள் நிறைந்த ஒரு மல்லிகைக் கொடி. அருகில் வந்த அவர் மரத்தின் அடியைப் பார்த்தார். அங்கே ஒரு சிவலிங்கம். அந்த ஆழங்கால் பட்ட அத்வைதவாதியையே இந்தச் சூழல் மயக்கி விட்டது! **அர்ஜுனம்** என்ற மருத மரம். அதைச் சுற்றி **மல்லிகைக்**



**கொடி** மரத்தின் அடியில் **சிவலிங்கம்.** அடுத்த கணம் அவர் உள்ளத்தில் ஒரு ஜோதி! அவ்வளவுதான்!

தோத்திரப் பாடல் ஒன்று அவர் திருவாயிலிருந்து வெள்ளமெனப் பொங்கி வந்தது. ஆமாம், அதுதான் நாம் சிந்திக்கவிருக்கும் 100 பாடல்கள் கொண்ட **சிவானந்தலஹரி** அல்லது **சிவானந்த வெள்ளம்** என்ற **ஸ்தோத்திரம்!**

பொதுவாக ஆதி சங்கரரின் ஸ்தோத்திரப் பாடல்களில் **மூர்த்தி, தலம், தீர்த்தம்** குறித்த விவரங்கள் இருப்பதில்லை. ஆனால் இங்குள்ள சூழல் சங்கரரின் உள்ளத்தில் நிறைந்து விட்டது போலும். அர்ஜுன மரமும், அதை இறுகச் சுற்றியுள்ள மல்லிகைக் கொடியும், அதில் அப்பொழுதே கப்பென மலர்ந்த மல்லிகையின் மணமும் அவரை ஆட்கொண்டுவிட்டன போலும்! **மருதமரம்,** அவருக்கு **ஸ்ரீசைலம்** என்ற அத்தலத்தில் திருஇருக்கை கொண்டுள்ள, பன்னிரு ஜோதிர்லிங்கங்களில் ஒன்றான அருள்மிகு **மல்லிகார்ஜுனப்** பெருமானையும் அதைச் சுற்றியுள்ள மல்லிகைக் கொடி அப்பெருமானோடு உடனிருந்து அருள்பாலிக்கும் பதினெட்டுத் தேவியரில் ஒருவரான அன்னை **ஸ்ரீபிரம்மராம்பிகையையும்** நினைவு படுத்தியிருக்கவேண்டும்.

எனவே, தம் வழக்கத்திற்கு மாறாக, பாடல்கள் 50-லும், 51-லும் இருவரைப் பற்றியும் மிக அழகாகப் பாடியுள்ளார். திருநாம

அர்ச்சனையே செய்துள்ளார். இதோ அப் பாடல்கள் இரண்டும் அவற்றின் தமிழ் வடிவங்களும்!

*ஸந்த்யாரம்ப விஜ்ரும்பிதம் ச்ருதிசிரஸ் ஸ்த்தானாந்த ராதிஷ்டிதம்*
*ஸப்ரேம ப்ரமராபிராமம் அஸக்ருத்ஸத்வாஸனா சோபிதம்;*
*போகீந்த்ராப்ரணம் ஸமஸ்த ஸுமன: பூஜ்யம் குணாவிஷ்க்ருதம்*
*ஸேவே*
*ஸ்ரீகிரி மல்லிகார்ஜுன மஹாலிங்கம் சிவாலிங்கிதம்*

*மாலையில் நடனமாடி மகிழும் மகேசன்;*
*வேதங்களின் உச்சியான உபநிடதத்தில் உள்ளவன்;*
*அன்னை பிரம்மராம்பிகையிடம் கொண்டுள்ள*
*ஆழ்ந்த அன்பினால் அழகாகத் திகழ்பவன்;*
*சாதுக்களின் பக்தி மணம் சூழ்ந்திருப்பவன்;*
*ராஜ நாகங்களை ஆபரணமாகக் கொண்டவன்;*
*நல் மனம் கொண்டவர்களாலும்*
*தேவர்களாலும் பூஜிக்கப் பெறுபவன்;*
*அருங் குணங்களின் இருப்பிடமாகப் பொலிபவன்;*
*அன்னை பார்வதியால் ஆரத் தழுவப் பெற்றவன்;*
*இந்த மல்லிகார்ஜுனம் என்ற*
*ஸ்ரீ சைலத்தில் திருஇருக்கை கொண்டுள்ள*
*அந்த சிவனையே நான் வழிபடுகிறேன்.*

*பாடல் 50*

*ப்ருங்கீச்சா நடனோத்கட: கரிமதக்ராஹீ ஸ்புரன் மாதவா*
*ஹ்லாதோ நாதயுதோ மஹாஸிதவபு: பஞ்சே*
*ஷுணாசாத்ருத: ஸத்பக்ஷஸ் ஸுமனோவனேஷு ஸ புன:*
*ஸாக்ஷான்மதீயே மனோ*
*ராஜீவே ப்ரமராதிபோ விஹரதாம் ஸ்ரீ சைலவாஸீ விபு:*

*பிருங்கி முனிவரது இச்சைக்கு ஏற்ப*
*அருமையாக நடனமாட ஆசையுள்ளவர்;*
*கஜாசுரனின் ஆணவக் கொழுப்பினை அடக்கியவர்;*
*மோகினி வடிவெடுத்து வந்த மகாவிஷ்ணுவைக்*
*கண்டு மோகித்து மகிழ்ந்தவர்;*
*ப்ரணவ நாதத்துடன் கூடினவர்;*
*வெண்மைத் திருமேனி கொண்டவர்;*
*மன்மதனின் மலர்ப் பாணங்களுக்கு இலக்கானவர்;*
*தேவர்களைக் காப்பதில் கண்ணாக இருப்பவர்;*

*ஸ்ரீ சைலத் திருத்தலத்தில் திருஇருக்கை கொண்டவர்;*
*அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்தவர்*
*அன்னை பிரம்மராம்பிகையின் அன்புப் பதியான*
*அந்த சிவன் அடிக்கடி வந்து என்*
*இதயம் எனும் தாமரையில் விளையாடட்டும்!*

*பாடல் 51*

இங்கே ஆதி சங்கரரது வாழ்க்கையில் நிகழ்ந்த மற்றொரு சம்பவத்தினையும் நாம் ஒப்புநோக்கி மகிழலாம். **திருக்கோகர்ண யாத்திரையில்** ஆதி சங்கரர் ஒரு வலிய வயிற்று நோயால் அவதியுற்றார்.

''எம் திருக்குமாரனின் திருத்தலமான **திருச்செந்தூர்** சென்று **செந்திலாண்டவரை** வழிபாடு செய்து அங்கு தரப் பெறும் பன்னீரிலை விபூதியை வாங்கி அணிந்து கொள். இந் நோய் உடனே நீங்கும்!''

என்று அசரீரியாக **கோகர்ணேஸ்வரர்** ஆணை பிறப்பித்தார். சங்கரரும் திருச்செந்தூர் சென்று செந்திலாண்டவர் திருமுன் அவர் திருவடிகளில் தம் மனம் ஒன்றி நின்றார்!

அதே நேரத்தில் செந்திலாண்டவரின் திருமேனியில் **பாம்பொன்று** வளைந்து, வளைந்து ஏறி வழிபாடு செய்து கொண்டிருந்தது. திருச்சன்னிதியில் நின்ற சங்கரரது உள்ளத்தில் உள்ள **சைதன்யம்** ஒரு திருக்காட்சி கொடுத்தது. அடுத்த வினாடி அங்கு சங்கரர் திருவாயிலிருந்து அருவி எனக் கொட்டியதுதான், தீராத நோய் தீர்க்க வல்ல 33 பாடல்கள் கொண்ட **ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம்** என்ற **ஸ்தோத்திரம். புஜங்கம்** என்றால் **பாம்பு.** பாம்பின் வளைவினை ஒத்த **சந்தம்** கொண்டதால் பாடலுக்கும் புஜங்கம் என்று பெயர் வந்தது. இந்த நிகழ்வினைச் சங்கரரே அந்த புஜங்கத்தின் கணபதி வணக்கப் பாடலுக்கு அடுத்த பாடலிலேயே பாடி உள்ளார்!

இதோ பாம்பின் சந்தம் கொண்ட அந்தப் பாடல்!

*ந ஜாநாமி சப்தம், ந ஜாநாமி சார்த்தம்*
*ந ஜாநாமி பத்யம், ந ஜாநாமி கத்யம்*
*சிதேகா ஷடாஸ்யா ஹ்ருதித்யோததே மே*
*முகாந் நிஸ்ஸரந்தே கிரஸ்சாபி சித்ரம்*

*–ஆ.ச. – ஸ்ரீ சு.பு. – 2*

நான் மொழியாக்கம் செய்த பாடலின் தமிழ் வடிவம்! மன்னிக்கவும், இதில் அந்த சந்தம் இல்லை. ஆனால் மூலத்திலிருந்து பிறழாத பொருள் உண்டு!

*இன்னிசைச் சொற்களும், அன்னவை தரும் அரும்பொருளும்*
*நானறியேன்; செய்யுள் புனையவும், வசனமெழுதவும் தானறியேன்;*
*என்றாலும் என் உள்ளத்திலே ஒரு சைதன்யம்*
*எல்லையிலாப் பேரொளியாய், ஆறு திருமுகங்களோடு அருட்காட்சி தருகிறதால், அழகுமிகு சொல்லும், பொருளும் சுமந்த பாடல்கள் என் வாயிலிருந்து தானே வந்து அருவியாய்க் கொட்டுகின்றன!*

இனி மீண்டும் சங்கரரின் சிவானந்தலஹரிக்கு வருவோம். இது, "**பக்தியே - முக்திக்கு எளிய வழி**" என்ற கருத்தினை உள்ளடக்கி, நம்மைக் கனிந்துருகவைக்கும் தோத்திரப் பாடல்.

பொதுவாக நம் **மனம்** அழுக்கும் அஞ்ஞானமும் நிறைந்தது. இத்தகைய மனத்தினை சங்கரர் பல உவமைகளோடு ஒப்பிடுகிறார். உருவகமாகக் காட்டுகிறார்.

- கண்டதை நாடி ஓடும் குரங்கு (20)*
- பொருள் தேடி அலையும் திருடன் (22)
- கொடும் விலங்குகள் வாழும் காடு (43)
- துர்வாசனை நிறைந்த பெட்டி (74)
- கால் வைத்து நடக்க முடியாத கட்டாந்தரை (80)
- யானையின் கொட்டத்தை அடக்கும் கட்டுத் தறி (96)
- மதம் பிடித்த யானை (97)

இத்தகைய அறிவு கெட்ட மனத்தினை எப்படித் திருத்துவது? அதற்கும் சங்கரர் எளிய வழியைக் காட்டுகிறார். சிவனின் திருவடி மகிமைகளையெல்லாம் சொல்லி அந்தத் **திருவடித் தாமரைகளுக்கு சேவை செய்தால்** மனத்திலுள்ள அழுக்கும் அஞ்ஞானமும் விலகி நல்ல மனமாகி விடும் என்கிறார்.

இதோ சங்கரர் தரும் சிவனின் இரு திருவடிகளின் பெருமைகளின் பட்டியல்!

*சிவானந்தலஹரிப் பாடல் எண்

- அவை தூய்மையானவை (17)
- மங்களங்களைத் தருபவை (26)
- தர்ம, அர்த்த, காம, மோட்சத்தைத் தருபவை (45)
- மலைமகளின் மணவாளனது, அன்னங்கள் உலாவிடும் திருமாளிகை (46)
- பயம் நீக்கி இன்பம் தரவல்லவை (60)
- தேவர்களின் கிரீடங்களால் தினமும் உராயப் பெறுபவை (64)
- திருவடித் தாமரைச் சேவை செய்பவனுக்குக் கிடைக்காதது தான் எது? (65)
- பாத பத்மமாகிய புதையல் (72)
- முக்திக்கு விளை நிலம் (73)
- எமனை உதைத்த திருவடிக்கு வலிக்குமே! உன் காலை நான் பிடித்து விடுகிறேன் (80)
- அயனும் மாலும் கூடக் காணமுடியாத திருவடி (86)
- கரடு முரடான மலைகளில் அலைந்த பூவைப் போன்ற உன் கால்களை கல்லைப் போன்ற என் மனதிலும் வைக்கலாம்தானே! (95)
- அரி அயனுக்குக் கூடக் காட்டாத திருவடியை எனக்கு எப்படிக் காட்டினீர் (99)

இத்தகு மகிமைகள் பெற்ற ஈசனின் திருவடிகளின் வலி நீங்க அவற்றைக் கரங்களால் பிடித்துவிட்டு, சிரத்தால், மார்பால், கண்களால் கட்டி அணைத்து மகிழும் பக்தனின் **மனத்தில் உள்ள அழுக்கும் அஞ்ஞானமும் அகன்று விடும்** தானே! இவ்வாறு பக்தனின் **தூய்மை பெற்ற நல்ல மனம்** எப்படி இருக்கும் என்பதற்கும் சங்கரரின் பட்டியல் இதோ!

- புனிதம் பெற்ற மனம் சிவபூசைக்கு ஏற்ற மலர் (9)
- அன்னை பராசக்தியுடன் அமர்ந்திருக்கச் செவ்வனே கட்டப்பெற்ற கூடாரம் (21)
- சிவனிடம் குபேரன், காமதேனு, கற்பக விருட்சம் என்ற செல்வக் குவியலே இருந்தாலும் பக்தனின் மனமே சிறந்த காணிக்கை (27)

- உடலுக்கே புண்ணியாஹவாசனம் செய்யும் புனிதக் கலசமாகிவிடுகிறது! (36)
- கயிலைநாதரின் கவின்மிகு ராஜ்யம் (39)
- பக்திப் பயிர் வளர்க்கும் வயல் (40)
- ஆழமான அகழி, ஏறமுடியாத மதில், வெல்லமுடியாத சேனை, திடமான வாயில்கள், ஞான நிதி என அத்தனை நலன்களும் பெற்ற கோட்டை (42)
- பஞ்சமுக ஈஸ்வரன் பிரியமுடன் வாழும் குகை (44)
- அழகிய திருவடிக் கூட்டில் சரணமடைந்து வாழும் பட்சி (45)
- திருவடி மாளிகையில் விளையாடும் ஹம்ஸம் (46)
- மணமுள்ள மலரும் சுவையுள்ள பழங்களும் நிறைந்த தோட்டம் (47)
- ஹம்ஸம், சாதக, சக்கரவாக, சகோதம் போன்ற பட்சிகளின் ராஜா (59)
- தேவர்களின் மகுடங்கள் உராயும்பொழுது காயமாகாது காக்கும் இரத்தினப் பாதுகை (64)
- பெருமித நடை, அதி வேகம், மங்களங்கள் தரும் குறிகளும் சுழிகளும் தாங்கிய உயர்ந்த ஜாதிக் குதிரை (75)
- பர்த்தாவிடமிருந்து பிரிந்து வாடும் பதிவிரதை (77)
- மணமகனையே எண்ணிக் காத்திருக்கும் புது மணப் பெண் (78)
- பார்வதி பரமசிவனுக்குப் பணிவிடை செய்யக் காத்திருக்கும் பணிப் பெண் (84)

சரி, அறிவு கெட்ட மனம் திருந்தி நல்ல மனமாகி விட்டது, ஆனால் இந்த **இரசவாதம்** எப்படி நடந்தது?

**ஏக தெய்வமெனச்** சிவன் தாளினையே தொடர்ந்து வணங்கி வழிபாடு செய்து வந்ததால், அதாவது சிவனிடம் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி பக்தி செய்து வந்ததால், சிவனருளால் நிகழ்ந்தது! இப்படி ஆழ்ந்த பக்தி செய்வதற்கு, "பிறந்த குலம், வாழும் இடம், வயது, வசதி, வழிபாட்டுப் பொருள்கள் போன்ற எவையும் தடையல்ல! **மனமாகிய மலரை மட்டுமே அவன் திருவடியில் காணிக்கையாக்கி, "நீயே எனக்குப் புகல்!" என்று சொல்லிப் பூரண சரணாகதி அடைந்து**

**விட்டாலே போதும்!"** என்று சங்கரர் பல பாடல்களில் திட்ட வட்டமாகச் சொல்லி இருக்கிறார்.

அப்படியானால் அந்த **பக்தியின் மகிமை**தான் என்ன? அதற்கும் ஒரு விடைப் பட்டியல் தருகிறார் சங்கரர்.

- பக்திக்கு மிஞ்சிய பதவி எதுவும் இல்லை (23)
- இப்பூவுலக வாழ்க்கையே, **சாலோக, சாரூப, சாமீப, சாயுஜ்ஜியம்** என்ற நான்குவித முக்தி நிலைகளையும் நல்கிடும் (28)
- சிவ வழிபாட்டிலேயே முக்தி கிட்டும் (33)
- சிவ சரித்திரம் என்ற புண்ணிய நீரால் மன வயலில் வளரும் பயிர் (40)
- முக்திப் பழம் (40)
- பால் நினைந்தூட்டும் பரிவுடைய தாய் (62)
- குறை நீக்கி நிறைவு தரும் அருமருந்து (63)
- ஊட்டம் தரும் பாலை அளிக்கும் பசு (68)
- மழையினைத் தரும் மேகம் (76)
- ஜீவன் முக்தி என்ற **"வாழும்பொழுதே முக்தி"** என்ற நிலையினைத் தருவது (81)

இதுவரை சங்கரரின் சிவானந்தலஹரியில் உள்ள **ஆன்மிகத் தரத்தினைப்** பார்த்தோம். ஆனால் சங்கரர் அத்தோடு நின்றுவிடவில்லை. இதைத் தொட்டவர்கள் "ஓ, ஆன்மிகமா?" என்று சொல்லி விட்டுவிடாமல் அவர்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்வதற்காக பல **இலக்கிய உத்திகளைக்** கையாண்டுள்ளார். உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், வஞ்சப் புகழ்ச்சி, சிலேடை என அணிகள் பல பாடல்களில் அணிவகுத்து வருகின்றன. இடையிடையே மெல்லிய நகைச் சுவையையும் உதிர்த்து விட்டிருக்கிறார். உதாரணத்திற்கு சிலேடை ஒன்றை மட்டும் எடுத்துக் கொள்வோம். சிவனோடு எத்தனை வகையான பொருட்களுடன் சிலேடை அமைத்துப் பாடியிருக்கிறார் என்பதே பெரும் வியப்பைத் தருகிறது!

- சந்திரன்
- சிங்கம்
- மல்லிகை

- வண்டு
- மேகம்
- மயில்

இதற்கு மேலும் சிவானந்தலஹரியின் மகிமை பற்றி நான் சொல்வதை விட சங்கரர் தம் திருவாயால் சொல்லியதையே இங்கு நினைவுபடுத்தலே பொருத்தம் என எண்ணுகிறேன்.

*ஸர்வாலங்காரயுக்தாம் ஸரலபதயுதாம் ஸாதுவ்ருத்தாம் ஸுவர்ணாம்,*
*ஸத்பிஸ்ஸம்ஸ் தூயமானாம் ஸரஸகுணயுதாம் லக்ஷிதாம் லக்ஷணாட்யாம்*
*உத்யத்பூஷாவிசேஷா முபகத விநயாம் த்யோதமானார்த்தரேகாம்,*
*கல்யாணீம் தேவ கௌரீ ப்ரிய மம கவிதா கன்யகாம் த்வம் க்ருஹாண*

*பாடல் 98*

*அன்னை உமையின் அன்புக் கணவரே!*
*உமக்கென நானொரு கவிதையெனும்*
*பேரழகுப் பெட்டகமான பெண்*
*ஒருத்தியைப் படைத்துள்ளேன்!*
*அருள்கூர்ந்து அவளை நீர் ஏற்றுக் கொள்வீராக!*
*இதோ அவளது அறிமுகம்!*

*அழகுக் கன்னி ஒருத்தியின் வண்ண வண்ண*
*ஆடையாபரணங்களைப் போன்றே*
*உவமை, உருவகம், சிலேடை, தற்குறிப்பேற்றம்*
*என அணி அலங்காரங்கள் பல இவளுக்கும் உண்டு!*
*இளமங்கையின் எளிமையும் அன்ன நடையும் போன்றதே*
*இவளது சொல்லின் எளிமையும் மென்மையான நடையும்!*
*வாலைக் குமரியின் நிறமும் குணமும் அன்னதே*
*என் கவிதைப் பெண்ணின் எழுத்தும் செறிவும்!*
*பெண்மையின் அழகிற்கு ஒரு இலக்கணம் அவள் என்றால்*
*கவிதையின் நயத்திற்கு இவள் ஒரு பாவிலக்கணம்!*
*அந்தக் கன்னியின் இசைக்கும் குரலுக்கும் ஈடில்லை என்றால்*
*என் காவியப் பெண்ணின் ஓசையோ வீணையினும் இனியது!*
*அங்கே ஆன்றோர் போற்றும் அழகென்றால்*
*இங்கே அடியார் போற்றும் பக்தி!*
*ஒளிரும் தனரேகை அவள் கையிலென்றால்*
*மிளிரும் பொருள் ரேகை இவள் கையில்!*

*பார்ப்பவர்களுக்கு மங்களமே வடிவானவள் அவள் என்றால்*
*படிப்பவர்களுக்கு மங்களத்தையே தருபவள் இவள்!*

*சொற்கள்பல சொல்ல வேண்டாம்,*
*சுருக்கமாகச் சொல்வதானால்*
*அற்புத அழகுமிகக் கொண்ட என்*
*நற்கவிதை மகள் இவள்!*

*உம் மங்கல மங்கை நல்லாளுக்கு*
*எப்படியும் ஈடு தரக்கூடியவள்தான் இவள் என்பதால்*
*தடையேதும் சொல்லாமல்*
*இவளை நீர் ஏற்றிடுவீர் எந்தைபெருமானே!*

அவளை ஏற்றுக் கொள்ள வேண்டியது சிவன் மட்டுமல்ல! இந்த அழகு, அணி, அலங்காரம், இசை, சுவை, நயம், ஆழமிகு ஆன்மிகக் கருத்துக்கள், பக்தி என அனைத்தும் அடங்கியுள்ள இந்த சிவானந்தலஹரி ஸ்தோத்திரம் முழுவதையுமே **நீங்களும்** ஏற்றுப் படியுங்கள். பாராயணம் செய்யுங்கள். பயன்கள் நிறையவே பெறுவீர்கள்!

நிறைவாக, ஸ்ரீ சைலத் திருத்தலத்தைப் பற்றிய ஒரு செய்தி! இத்திருத் தலத்தினைப் பற்றி நம் **தேவார மூவரும்** பதிகங்கள் பாடியிருக்கிறார்கள். இச் சைவத் திருத்தலத்திற்கு அவர்கள் தந்த பெயர் **திருப்பருப்பதம். சம்பந்தரும்** (1.118), **சுந்தரரும்** (7.79) திருக்காளத்தியிலிருந்தே வடக்கு நோக்கிப் பார்த்தும், **அப்பர்** (4.58) தமது கயிலாய யாத்திரையின்போது அங்கேயே சென்றும் வழிபாடு செய்து பாடியிருக்கிறார்கள். **கச்சியப்ப சிவாச்சாரியாரும் கந்த புராணத்தில்** (க.பு. வழிநடைப் படலம் - 5/1633) திருநந்தி தேவர் இறைவனைத் தன் தலைமேல் தாங்கி நிற்பதற்காக வரம் கிடந்து, தவமியற்றி, மலையுருவம் பெற்று நிற்கும் தலம் திருப்பருப்பதத் திருத்தலம் என்று பாடியிருக்கிறார்.



# 05. பகவான் ரமண மகரிஷி

*முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்*
*மூர்த்தி அவனிருக்கும் வண்ணங் கேட்டாள்*
*பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்*
*பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்*
*அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்*
*அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்*
*தன்னை மறந்தாள்தன் நாமங் கெட்டாள்*
*தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே*
*—அ.தே 6.25.7*

**திருநாவுக்கரசர் சுவாமிகளின்** திருவாரூர் **தேவாரத்தில்** உள்ள திருப்பாட்டு இது. இப்பாடலுக்கு ஒரு முழுமையான எடுத்துக்காட்டாக அமைந்தது **பகவான் ரமண மகரிஷியின் வாழ்க்கை!**

**திருச்சுழியல்** என்பது பாண்டிநாட்டில் சுந்தர மூர்த்தி சுவாமிகளால் பாடப் பெற்ற **திருத்தலம்.** இப்பொழுது அத் தலம் **திருச்சுழி** என அழைக்கப் பெற்று விருதுநகர் மாவட்டத்தில் சேர்க்கப் பெற்றுள்ளது. திருச்சுழியில் **வக்கீல் சுந்தரமய்யர் - அழகம்மை தம்பதியருக்கு நாகசாமி, வேங்கடராமன், நாகசுந்தரம்** என மூன்று புதல்வர்கள். **அலமேலு** என்ற ஒரு புதல்வி. அண்ணன் நாகசாமி போலல்லாது தம்பி வேங்கட ராமனுக்கு பள்ளிப் படிப்பில் அத்தனை அக்கறை இருக்கவில்லை. மாறாக, விளையாட்டுக்களில் ஆர்வமுடன் இருந்தான்.

இந்நிலையில் தந்தை சுந்தரமய்யர் காலமானார். தந்தையின் மரணம் வேங்கடராமனைப் பெரிதும் பாதித்தது. **துக்கத்தை விட மரணம் பற்றிய சிந்தனையே அவனை ஆட்கொண்டது.**

தந்தையாரின் பூத உடல் வீட்டிலேயே கிடத்தப்பெற்றிருக்கிறது. ஆனால் துக்கம் கேட்க வருபவர்கள் எல்லாம், **"அப்பா போய்விட்டாரே!"** என்றுதான் சொன்னார்கள். வேங்கடராமனுக்கு இது புதிராக இருந்தது. அப்பா இன்னும் இங்குதானே இருக்கிறார். ஆனால் இவர்களெல்லாம் **"போய்விட்டார் என்றால் 'போனவர்' யார்?"** என்பதுதான் அந்தப் புதிர்! வேங்கடராமன் பின்னாளில் பகவான் ரமண மகரிஷியாகப் பரிணமித்ததற்கான **வித்து** இது.

மதுரையில் இருந்த சுந்தரமய்யரின் தம்பி சுப்பையரின் ஆதரவில், குடும்பம் திருச்சுழியிலிருந்து மதுரைக்கு மாறியது. வேங்கடராமன் மதுரை அமெரிக்கன் பள்ளியில் சேர்ப்பிக்கப் பெற்றார். வயதும் பதினாறு ஆகியது.

## பெரிய புராண ஈர்ப்பு

அருளார்ந்த நூல்கள் ஒருவரது வாழ்க்கைத் தடத்தையே மாற்றிவிடும் சக்தி வாய்ந்தவை என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டு வேங்கடராமன் வாழ்வில் அமைந்தது. முன்பு திருக்சுழியில் அவன் மனத்தில் விழுந்த சிறு **வித்திற்கு நீர் வார்த்த** நூல் **சேக்கிழார் பெருமான் இயற்றிய பெரிய புராணம்!** இறைவனுக்காக எதையும் தியாகம் செய்யத் தயாராக இருந்த அந்தச் சிவனடியார்களான **தொண்டர் தம் செறிவு நிறை பக்தி** பதினாறு வயதுப் பாலகனை ஈர்த்தது. பள்ளிப் படிப்பு அவனை ஈர்க்கவில்லை. ஆனால் இந்தப் **பன்னிரண்டாம் திருமுறை நூல்** அவனை ஆட்கொண்டதில் வியப்பில்லை, அது இறைவனின் திருவுள்ளம்.

## மரண அனுபவம்

அடுத்து ஒரு அதிசய நிகழ்வு! மாடியில் படுத்திருந்த வேங்கடராமனுக்குத் திடீரென இனம் புரியாத பயம். ஆனால் உடம்பில் நோய் ஒன்றும் இல்லை. இருப்பினும் தான் மரணத் தறுவாயில் இருப்பது போல் உணர்ந்தான். மரணமா? எப்படி இருக்கும்? பிணம் போல் உடலெல்லாம் விரைத்துப் போகுமாறு கை கால்களை நீட்டிப் படுத்தான். அவ்வளவுதான்! இந்த உடம்பு செத்து விட்டது. இனி இதை எரித்து

விடுவார்கள்! ஆனால் "நான்" மட்டும் இன்னும் இருக்கிறேனே! அப்படியானால் **"நான் யார்?"**

**இது** இந்த உடலுக்குள் கட்டுப்படாத வஸ்து போலிருக்கிறதே! இந்தக் கேள்வியும் இதற்கான விடையும்தான் பின்னாளில் ரமணரின் வாழ்க்கையின் தாரக மந்திரமாகவும் சீடர்களுக்கும் பக்தர்களுக்கும் அவரது முக்கிய உபதேசமாகவும் அமைந்தன.

வேங்கடராமனின் மனத்தில், முன் **நீர் வார்க்கப் பெற்ற வித்தினை** இந்த நிகழ்வு **முளைக்க** செய்தது.

### "நான் யார்?"

இப்படி உறுத்திய கேள்விக்கு படிப்படியாக விடைகாண முயன்றான்!

"இந்த உடல் நானில்லை! நிலம், நீர், காற்று, நெருப்பு, வானம் என்ற **பஞ்ச பூதங்கள்** நானில்லை! மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற **பஞ்சேந்திரியங்களும்** நான் இல்லை! ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்ற **பஞ்சதன்மாத்திரைகளும்** நானில்லை! வாய், கை, கால், குதம், குறி என்ற **பஞ்ச கர்மேந்திரியங்களும்** நானில்லை! பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்ற **பஞ்சப் பிராணன்களும்** நானில்லை! மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற **அந்தக்கரணங்கள் நான்கும்** நானில்லை! சர்வ விஷயங்களும் சர்வ தொழில்களுமற்று, விஷய வாசனைகளுடன் மாத்திரம் பொருந்தி இருக்கும் **அஞ்ஞானமும்** நானில்லை. இப்படி ஒவ்வொரு தொகுதியாகத் தள்ளிவிட்ட பின் எஞ்சியிருக்கும் **ஆத்ம சொரூபமே நான்.**

இந்த சொரூபமே **ஈஸ்வரன்.** இதுவே **ஜகம்.** ஆக எல்லாம் **சிவசொரூபமே** என்ற **அத்வைத** நிலையை என் **சுய அனுபவத்தால்** உணர்ந்தேன்."

பின்னாளில் ரமணரது சீடர்களில் ஒருவரான திரு **சிவப்பிரகாசம் பிள்ளை** அவர்கள் இந்நிகழ்வு பற்றி ரமணரிடம் கேட்ட பொழுது அவர் சொல்லியது இந்த விடை:

**"நான் யார்?"** என்ற விசாரணையிலேயே மனம் அடங்கிவிடும். "நான்" என்ற நினைவு மற்ற நினைவுகளையெல்லாம் அழித்து **பிணம் சுடும் தடிபோல்** முடிவில் தானும் (மனமும்) அழியும்! அப்போது ஆத்ம ஞானமே திகழும்"

இங்கே அருணகிரியாரின் பாடல் ஒன்றினை நினைவு கூர்ந்து, ரமணரின் பதிலுடன் ஒப்பிட்டு மகிழலாம்.

*தேன் என்று பாகுஎன்று உவமிக்*
*கொணாமொழித் தெய்வவள்ளி*
*கோன் அன்று எனக்கு உப தேசித்தது*
*ஒன்று உண்டு, கூறுவற்றோ?*
*வான்அன்று, கால்அன்று, தீஅன்று*
*நீர்அன்று, மண்ணும் அன்று*
*தான்அன்று, நான்அன்று, அசரீரிஅன்று*
*சரீரி அன்றே!*

*– அ.நா. – க.அ. பாடல் 9*

[தேன் என்றோ பாகு என்றோ உவமை கூற இயலாத இனிய மொழியை உடையவளும், தெய்வத்தன்மை உடையவளுமாகிய வள்ளிநாயகியுடைய கணவன் முருகன் அன்றைக்கு எனக்கு உபதேசித்தது ஒன்று உண்டு! ஆனால் அது கூறும் தகைமைத்தோ? அது வானம் அன்று; காற்று அன்று; நெருப்பு அன்று; நீர் அன்று; மண்ணும் அன்று; அவன் அன்று; நான் அன்று; சரீரம் இல்லாதது அன்று; சரீரம் உடையதும் அன்று!]

இப்படி **எல்லாமற, தன்னையும் இழந்த நலமான** அனுபூதி நிலையைப் பல்லாண்டு காலம் தவமிருந்தவர்களால்தான் பெற முடியும். ஆனால் இறைவன் திருவருளால் சிறுவன் வேங்கடராமனுக்கோ திடீரெனக் கிட்டியது!

ஆக, தன்னைத் தானே **"நான் யார்?"** என்று **ஆத்ம விசாரம்** செய்து **ஆத்ம அனுபூதி** பெற்றான் சிறுவன் வேங்கடராமன். இதே போன்று மற்றொரு மாபெரும் அருளாளரான **ஆதி சங்கரரின்** வாழ்வில் நிகழ்ந்ததையும் இங்கே நினைவு கூர்ந்து ஒப்பிட்டு மகிழ்வோம்.

## "நீ யார்?"

இந்தக் கேள்வி சங்கரரைப் பார்த்து அவர் குரு கேட்டது!

நர்மதா நதிக்கரையில் உள்ள ஒரு குகையில் இருந்த குரு கோவிந்த பாதரை நாடிச் சென்ற சிறுவன் **சங்கரனைப்** பார்த்துக் குரு கேட்ட கேள்வி: "குழந்தாய்! **நீ யார்?**" மடைதிறந்த வெள்ளமெனப் பதிலைக்

கொட்டினான் சங்கரன், **"தஸ ஸ்லோகி"** என்ற பத்துப் பாடல்கள் மூலம்! அதிலிருக்கும் முதல் பாடல் :

*ந பூமிர் ந தோயம் நதேஜோ ந வாயு*
*ந கம் ந இந்திரியம் வா ந தேஷாம் ஸமூஹ:*
*அனைகாந்தி கத்வாத் ஸுஷுப்த்யேக ஸித்த:*
*ததே கோகுவசிஷ்ட: சிவ: கேவலோஹம்*

[நான் பூமியல்ல, நீரல்ல, தேஜஸ் அல்ல, காற்றல்ல, ஆகாயமுமல்ல, கர்ம - ஞான இந்திரியங்களுமல்ல, இவற்றின் தொகுதியுமல்ல, இவை யனைத்திலிருந்தும் மாறுபட்ட பரமதத்துவமான சிவம் எதுவோ அதுவே நான்!]

இது சங்கரனின் அறிமுகம் மட்டுமல்ல. **அத்வைதத்தின் அறிமுகமும்** போலத் தோன்றுகிறது அல்லவா?

அந்தச் சிறுவன்தான் **அத்வைத சித்தாந்தத்தினை** உலகிற்குத் தந்த **ஆதி சங்கர பகவத் பாதர்** என்பதை முன்னரே பார்த்தோம்.

**இறையருள் பெற்ற இந்தச் சிறுவர் இருவரின் இளமைக் கால நிகழ்வுகளில் இருந்த ஒருமைப்பாடு பெரும் வியப்பிற்கு உரியது!**

## அருணாசல நாமம்

பின்னர் **திருச்சுழிச் சொக்குப் பட்டர்,** சுப்பையரைப் பார்க்க ஒரு நாள் மதுரைக்கு வந்திருந்தார்.

"எங்கிருந்து வருகிறீர்கள்?" அவரை வேங்கடராமன் கேட்டான்.

**"அருணாச்சலத்திலிருந்து** வருகிறேன்!" அவர் தந்த பதில்.

பொதுவாக எல்லோருக்கும் தெரிந்த பெயரான **திருவண்ணாமலை** என்று சொல்லாமல் **"அருணாச்சலம்"** என்ற இத்திருநாமத்தை அவரைச் சொல்ல வைத்தது இறைவன் திருவுள்ளம் போலும்! அத் திருநாமத்தை கேட்டதும் பதினேழு வயதே நிரம்பியிருந்த வேங்கடராமனின் உடலில் ஒரு சிலிர்ப்பு. உள்ளத்தில் ஒரு திடமான முடிவு பிறந்தது. அருணாச்சல புராணம் கூறும்

*தில்லையில் காண காசியில் இறக்க,*
*சிறக்கும் ஆரூர்தனில் பிறக்க,*

*எல்லையில் பெருமை அருணையை நினைக்க*
*எய்தலாம் முக்தி என நடித்தீர்!*

ஆக **அருணாசல நாமம்** தன் வேலையைச் செய்ய தொடங்கியது!

"நான் யார்" என்று அவன் செய்த "ஆத்ம விசாரம்", முன் விழுந்த வித்தினை முளைக்கச் செய்தது என்றால், இந்நிகழ்வு அம்**முளையினைச் செடியாக்கியது!**

கல்லூரிச் சம்பளம் கட்ட அண்ணன் கொடுத்த ஐந்து ரூபாயில் மூன்று ரூபாயை எடுத்துக் கொண்டு எஞ்சிய இரண்டு ரூபாயுடன் ஒரு சிறு தகவல் குறிப்பினையும் எழுதி வைத்துவிட்டு, **அன்னையையும் அத்தனையையும் அன்றே நீத்தான்! அருணாச்சலம் நோக்கித் தலைப்பட்டான்!**

ஆனால் அவன் விட்டுச் சென்ற தகவல் குறிப்பே அவனது குறிக்கோளைக் காட்டியது

அந்தக் குறிப்பில் கண்டிருந்த செய்தி:

*"நான் என் தகப்பனாரைத் தேடிக்கொண்டு அவருடைய உத்தரவின்படி இவ்விடத்தை விட்டுக் கிளம்பிவிட்டேன். **இது** நல்ல காரியத்தில்தான் பிரவேசித்திருக்கிறது. ஆகையால் இந்தக் காரியத்திற்கு ஒருவரும் விசனப் பட வேண்டாம். இதைப் பார்ப்பதற்காகப் பணச்செலவும் செய்ய வேண்டாம். உன் சம்பளத்தை இன்னும் செலுத்தவில்லை. ரூபாய் இரண்டு இதோடுகூட இருக்கிறது. இப்படிக்கு........."*

குறிப்பை மீண்டும் படித்துப் பார்ப்போம்!

1. **"தகப்பனார்"** என்றது பெற்ற தகப்பனாரை அல்ல! அருணாசலத்தில் அமர்ந்திருக்கும் **அப்பனை!**
2. **"நான்"** என்று உயர் திணைச் சொல்லில் தொடங்கி **அஃறிணைச்** சொல்லான **"இது"** வாக மாறி விட்டது!
3. அண்ணன் படிப்பில் அக்கறை : **"சம்பளம் இன்னும் கட்டவில்லை!"**
4. பணத்தில் ஆசையில்லை : **"ரூபாய் இரண்டு இதோடு இருக்கிறது!"**
5. கையெழுத்து எதுவுமில்லை : **"இது"** வாக மாறி விட்ட பொழுது கையெழுத்து எதற்கு?

இங்கே **அருள் மணிவாசகரின்** திருவாசகத் திருப்பாடல் ஒன்றினை நினைவு கூர்ந்து அத்திருப்பாடலோடு வேங்கடராமனின் புறப்பாட்டினை ஒப்பிட்டு அதிசயிக்கலாம்!

*உற்றாரை யான் வேண்டேன்*
*ஊர் வேண்டேன் பேர் வேண்டேன்*
*கற்றாரை யான் வேண்டேன்*
*கற்பனவும் இனி அமையும்*
*குற்றாலத்து அமர்ந்து உறையும் கூத்தா!*
*(அருணாசலத்து அமர்ந்து உறையும் அப்பனே!)*
*உன் குறை கழற்கே*
*கற்றாவின் மனம் போலக்*
*கசிந்து உருக வேண்டுவனே!*

*–மா.வா. – தி.வா. – 558*

### பால ரமணர்

இப்படிப் புறப்பட்ட "அது" பல இன்னல்களைக் கடந்து அருணாச்சலம் என்ற திருவண்ணாமலை அடைந்தது. ஐயன் குளத்தருகில் "மொட்டை போடட்டுமா?" எனக் கேட்ட நாவிதன் முன் உட்கார்ந்தது. கட்டுக் குடுமி



கழிக்கப் பெற்றதும் எழுந்து சட்டையைக் கழற்றி வீசியது. முப்புரிநூலை அறுத்தெறிந்தது. இடுப்பிலிருந்த வேட்டியைக் கிழித்துக் கோவணமாய்க் கட்டிக் கொண்டது. வருண பகவான் மழையினைப் பொழிந்து அபிஷேகம் செய்தார். **"அது"** **பால ரமணராகப்** பரிணமித்தது. வித்து முளைத்துச் செடியாகி இப்பொழுது வளரும் மரமாகி விட்டது!

**"அருணாச்சல சிவ, அருணாச்சல சிவ"** என்றே ஜபம். ஆயிரக்கால் மண்டபத்தில் தியானம். மக்கள் சிலரின் தொல்லை. தனிமைக்கான இடம் தேடல். இருள் சூழ்ந்த பாதாள லிங்கக் குகையில் ஊண், உறக்கமின்றிப் பல மாதங்கள் தவம். இளைத்துப் போன உடலைப் புழு, பூச்சிகள் துளைத்தன. ஆனாலும் பால ரமணர் தளராது தவத்தினைத் தொடர்ந்தார். செய்தி கேட்ட **சேஷாத்ரி சுவாமிகள்** என்ற பெரியவர் குகையினுள் நுழைந்து **பால ரமணர் என்ற துறவியை** வெளியே கொண்டு வந்து உலகிற்கு அறிமுகம் செய்தார்.

பல நல்ல உள்ளங்களின் உதவியுடன் **அருணாச்சலம் என்ற அந்தப் புனித மலை** உள்ளிட்ட பல இடங்களில் தவம் தொடர்ந்தது. பால ரமணர் **பிராமண சாமி** என்ற பெயர் பெற்றார்.

**அருணாசலம்** என்ற அந்தத் **திருமலையே பிராமணசுவாமி**க்குச் **சிவனின் திரு உருவமாகத்** தோன்றியது. அதையே தொடர்ந்து வலம் வந்து வழிபாடு செய்து வந்தார். அவருடன் அவருடைய சீடர்களும் பக்தர்களும் வலம் வந்தனர். இதுதான் **இக்காலத் திருவண்ணாமலைப் பௌர்ணமி நாள் கிரிவலத்திற்கான தோற்றுவாய்** போலும்!

## பாசம் நிறை அன்னை

அன்னை **அழகம்மையார்** இடை இடையே வந்து பார்த்தார். ஆனால் பாசம் அனைத்தும் அறுத்த ரமணர் பேசக்கூட இல்லை. ஆச்ரமம் ஒன்று தோன்றியது. அழகம்மையார் வந்து ஆச்ரம பக்தர்களுக்கு உணவு சமைக்கும் பணியினை தாமே மகிழ்வோடு செய்தார். அம்மையாரின் ஆயுட் காலம் நெருங்கியது. நோய் வாய்ப்பட்ட அன்னைக்குத் **துறவி ரமணர், துறவி ஆதி சங்கரர் தன் அன்னைக்குச் செய்தது போல,** அன்போடு உடனிருந்து பணி விடைகள் செய்தார். அன்னையார் பரிபூரணம் எய்தியதும் சமாதியில் திருஇருக்கை கொள்ளச் செய்தார். அங்கே ஒரு சமாதிக் கோவிலும் எழுந்தது.

## ரமணர், 'பகவான் ரமண மகரிஷி' ஆனார்

**காவ்ய கண்ட கணபதி முனிவர்** ஒரு மாபெரும் வடமொழி வல்லுனர். பண்டித சிரோமணி. அறிவிற் சிறந்த கவிஞர். வேதம், உபநிடதங்கள், இதிகாசங்கள், புராணங்கள், மந்திரங்கள் என அனைத்தையும் கற்றவர். அவர் ஒரு நாள் ரமணர் இருந்த குகைக்கு வந்து அவர் திருவடியில் வீழ்ந்தார்.

"நான் கற்பனவெல்லாம் கற்றறிந்தேன், என்றாலும் எனக்குத் தவத்தின் தாத்பரியம் தெரியவில்லை, கை கூடவும் இல்லை. அடியேனுக்கு, ஐயனே! நீங்களே புகல்!"

"இந்த 'நான், நான்' எங்கேயிருந்து புறப்படுகிறதோ அதைத் தொடர்ந்து கவனித்தால் மனம் அங்கே வீனமாகும் (அடங்கும்)"

ரமணர் தந்த அருள்வாக்கு!

கணபதி முனிவருக்கு ஒரு தகுதிமிக்க குரு அமைந்தார்.

"இம்மருவிலாக் காட்சிப் பெரியனை இனிமேல் **"மகரிஷி"** என்றே வணங்கிப் பணிக! பக்தர் யாவரும் இனி **பகவான்** என்றே அழைக்க வேண்டும்"

எனக் கணபதி முனிவர் கூறினார். ஆக, திருச்சுழி வேங்கடராமன், பால ரமணராகி, பிராமணசாமியாகி அன்று முதல் **'பகவான் ரமண மகரிஷி'** ஆனார்.

மகரிஷிக்கு அன்றிலிருந்து கணபதி முனிவர் **உகந்த சீடரும் உற்ற துணை**வருமானார்.

## பன்மொழிப் புலமை

பத்தாம் வகுப்பு வரை மட்டும் படித்திருந்த ரமணர் சமஸ்கிருதம், ஆங்கிலம், தெலுங்கு முதலிய மொழிகளில் உள்ள நூல்களை வாசிப்பதற்குக் கணபதி முனிவர் உதவியாக இருந்தார். ஆனால் மகரிஷியோ படித்த ஸ்லோகங்களை, பாடல்களை உடனே உள்வாங்கிக் கொண்டு கணபதி முனிவருக்கும் ஏனையோருக்கும் அவற்றில் பொதிந்துள்ள ஆழமான கருத்துக்களையும் அவற்றின் விளக்கங்களையும் உடனுக்குடன் கூறும் **அதிசய அருள்** பெற்றிருந்தார்.

எப்படியோ வாழ்க்கை நடத்திப் பின் அண்ணாமலையார் திருக்கோவில் கோபுரத்திலிருந்து விழுந்து "உயிர் துறக்க முனைந்த **அருணகிரிநாதரைத்** தாங்கிப் பிடித்து, **முத்தைத் தரு பத்தித் திருநகை"** என அடி எடுத்துக் கொடுத்து, அவரை ஒரு நொடியில் தென்தமிழும் வடமொழியும் கலந்து, சந்தம் தவறாது ஆயிரம் பாடல்களுக்கு மேல் பாட வைத்த அந்த **அண்ணாமலையார்** ரமணருக்கும் அருள் பாலித்திருப்பார் அல்லவா!

## ரமணாச்ரமத் தோற்றம்

அருணாச்சலத் திருமலையில் உள்ள குகைகளிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் திரு இருக்கை கொண்டிருந்த மகரிஷி அன்னையார் சமாதிக்கு அடுத்து ஒரு கீற்றுக் கொட்டகைக்குள் வந்து வசிக்கலானார். அக்கொட்டகையே கட்டடமாகிப் படிப்படியாக வளர்ந்து பல பகுதிகளுடன் இன்றைய **ரமணாச்ரமாகத்** திகழ்கிறது.

இந்த ஆச்ரமத்தில் எல்லா உயிர்களும் சமம். பூச்சி, புழு, பாம்பு, பறவை, மயில், மான், குருவி, கோழி, நாய், குரங்கு, மாடு, மனிதர் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யக்கூடாது!

ஏனைய உயிரினங்களுக்கும், விருந்தினருக்கும் உணவு பரிமாறிய பின்னர்தான் ஆச்ரம வாசிகள் உணவு உண்ண உட்கார வேண்டும். மகரிஷியும் உடன் அமர்ந்து சாப்பிடுவார்.

ஆச்ரம நிகழ்ச்சிகள் அனைத்தும் குறிப்பிட்ட கால அட்டவணைப்படி எப்பொழுதும் மிக அமைதியாக நடைபெறும். ஆச்ரமத்திற்குள் நுழைந்ததுமே அங்கு நிலவும் அமைதியும், நிர்மலமான புனிதமும் நம்முள் இன்றும் ஒரு தெய்வீக உணர்வைத் தோற்றுவிக்கும்.

## ஆதி சங்கரரிடம் ஈர்ப்பு

வடமொழி ஞானம் பெற்றதும், மகரிஷிக்கு முன்பே **அத்வைதம்** கண்ட **ஆதி சங்கரரிடம்** ஒரு அதீதமான ஈர்ப்பு ஏற்பட்டது போலும்! ஆதி சங்கரரது **பாஷ்யங்கள், கிரந்தங்கள், ஸ்தோத்திரங்கள்** அனைத்தும் மகரிஷிக்கு வசப்பட்டன. அவற்றில் சிலவற்றை முழுமையாகத் தமிழில் ஆக்கி உள்ளார். சிலவற்றின் சாரத்தைப் பிழிந்து தந்துள்ளார். சிலவற்றின் மூலங்களிலிருந்து சாமான்ய மக்களுக்குப்

புகட்டுவதற்கென குறிப்பிட்ட சில பாடல்களை மட்டும் திரட்டித் தந்துள்ளார்.

### மகரிஷிக்கு மிகவும் பிடித்தமான நூல்கள்

திருக்குறள், பைபிள், **பெரியபுராணம்,** தேவாரம், திருமந்திரம், பகவத் கீதை, உபநிடதங்கள்

### மகரிஷி ஆக்கி அளித்துள்ள நூல்கள்

- உபதேச உந்தியார்
- உள்ளது நாற்பது
- உள்ளது நாற்பது அனுபந்தம்
- ஏகான்ம பஞ்சகம்
- ஆன்ம வித்தை
- உபதேசத் தனிப்பாக்கள்
- ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை
- ஸ்ரீ அருணாசல அஷ்டகம்
- நான் யார்
- விவேகசூடாமணி அவதாரிகை
- பகவத் கீதா ஸாரம்
- குரு வாசகக் கோவை
- ஸ்ரீ ரமண நூற்றிரட்டு
- ஸ்ரீ ரமணோபதேச நூன்மாலை - விளக்கவுரை

இந்தப் பட்டியலில் **சிவானந்தலஹரித் திரட்டினைக்** காணோமே?

### சிவானந்தலஹரித் திரட்டு

நாம் முன்பு பார்த்ததுபோல் சிவனை வணங்குவதற்கு **ஆதி சங்கரர்** ஆக்கிய ஸ்தோத்திரம் - 100 பாடல்கள் கொண்ட **சிவானந்தலஹரி.** ஒரு முறை மகரிஷியின் பக்தர்களில் ஒருவர் அவரை அணுகி, ''இதிலுள்ள 100 பாடல்களையும் தினமும் பாராயணம் செய்வது கடினமாக இருக்கிறதே!'' என்று சொன்னாராம். மகரிஷி அந்நூலினை வாங்கிப் புரட்டி

**அதிலிருந்து 10 பாடல்களை மட்டும் திரட்டிக் கொடுத்து, "இவற்றைப் பாராயணம் செய்தாலே போதும்!"** என்று கூறினாராம்.

பகவான் பத்துப் பாடல்களைத் திரட்டியது மட்டுமல்ல; பாடல்களின் மூல வரிசைப்படி அவற்றை அமைக்காது, சாமான்ய மக்களுக்கு அவர் காட்ட நினைத்த எளிய வழிக்கு ஏற்பத் தம் தொகுப்பில் பாடல்களின் **வரிசையை முன் பின்னாக மாற்றி** அமைத்துள்ளார்.

இதுதான் **பகவான் ரமண மகரிஷியின் "சிவானந்தலஹரித் திரட்டு"** உருவானதன் பின்புலம். ஆனால் இது ஒரு நூலாக வெளி வரவில்லை. இருப்பினும். இதன் மூலத்துடன் இதற்கான தமிழ், ஆங்கில உரைகளையும் சேர்த்து அறிஞர் சிலர் இணைய தளத்தில் வழங்கி உள்ளனர்.

## மகரிஷி முக்திக்குக் காட்டிய வழிகள்

மானுடம் தம் குறிக்கோளான முக்தியைப் பெற, மானுடத்திற்கு வழிகாட்டுவதற்கெனவே தம் வாழ்வையும் வாக்கையும் அர்ப்பணித்த மகான்களில் மகரிஷியும் ஒருவர். இரண்டு பிரிவுகள் சார்ந்த மக்கள் கூட்டத்திற்கும் அவர் இரண்டு வழிகள் காட்டித் தந்துள்ளார்.

### 1. பக்குவம் பெற்ற மக்களுக்கு

**ஆத்ம விசாரம் :** "நான் யார்" என்ற வினாவில் தொடங்கி மனம் தானே அடங்கும்வரை அடுக்கடுக்காய்க் கேள்விகள் கேட்டு, மனம் அடங்கியதும் எஞ்சித் தனித்து நிற்கும் **அறிவே நான்.** அந்த அறிவின் சொரூபம் **சச்சிதானந்தம்!**

இதை விளக்குவதற்கென, கேள்வி - பதில் வழியிலான **"நான் யார்?"** என்ற மகரிஷியின் நூல் ஒன்றினை **ரமணாச்ரமம்** வெளியிட்டிருக்கிறது.

### 2. நம்மைப் போன்ற சாமான்ய மக்களுக்கு

**ஆழ்ந்த பக்தி** : மிக எளிய வழி! பெரும்பாலான அருளாளர்கள் முக்திக்கான பல மார்க்கங்களைக் காட்டிவிட்டு நிறைவாக **சரணாகதி உள்ளிட்ட பக்தி** மார்க்கத்தைத்தான் காட்டியிருக்கிறார்கள். மகரிஷியும், **பக்தியே - முக்திக்கு எளிய வழி** என்பதைத்

தீர்க்கமாகக் கூறி உள்ளார். அதற்கு ஒரு செய்முறையாக அமைந்ததுதான் நாம் மேலே பார்த்த **சிவானந்தலஹரித் திரட்டு.**

**மகரிஷியின் அயல்நாட்டு பக்தர்கள்**

மகரிஷியைத் தங்கள் நூல்கள், கட்டுரைகள், சொற்பொழிவுகள் மூலம் உலகுக்கு அறிமுகப் படுத்திய அறிஞர் பெருமக்களில் சிலர்:

1. Paul Brunton
2. Arthur Osborne
3. S.S. Cohen
4. Frank H. Humphreys

**மகரிஷியின் வரலாற்று நூல்கள்**

மகரிஷியின் வரலாற்றினைப் பல அறிஞர் பெருமக்கள் பல மொழிகளில் எழுதியுள்ளார்கள். இவற்றில் மிகப் பிரபலமானதும் முன்னாளிலே தோன்றியதும், பல மொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்றதுமான நூல், **யோகி சுத்தானந்த பாரதியார்** எழுதிய **"ஸ்ரீ ரமண விஜயம்"**

## மகரிஷி உடன் இருந்தவர்கள்

அவ்வப்போது தரிசித்துச் சென்றவர்கள் பலர். சில காலம் தங்கிச் சென்றவர்கள் சிலர். ஆனால் மகரிஷியுடன் பல்லாண்டு காலம் தங்கிப் பணி புரிந்தவர்களில் முக்கியமானவர்கள் :

**சேஷாத்ரி சுவாமிகள் :**

பாதாள லிங்கக் குகைக்குள் இருந்த வேங்கடராமனை வெளிக் கொணர்ந்து பால ரமணர் ஆக்கியவர். பல்லாண்டுகள் அவருக்கு பல்லாற்றானும் உதவிகள் செய்து வந்தவர். இவரது அதிஷ்டானமும் ரமணாச்ரமத்தின் உள்ளேயே இருக்கிறது

**பழனிச்சாமியார் :**

மகரிஷியின் நேர்முக உதவியாளராகப் பல்லாண்டுகள் தொண்டு புரிந்தவர். மகரிஷிக்கு பல அரிய நூல்களைக் கொண்டு வந்து கொடுத்தவர்.

**காவ்ய கண்ட கணபதி முனிவர் :**

முன்னரே இவரைப் பற்றிப் பார்த்தோம்.

மற்றும்,

**முருகனார்**
**ஸ்ரீ சாது ஓம்**
**சூரி நாகம்மா :**

மகரிஷியின் உடன் இருந்து அவரது நூல்களுக்கு விளக்க உரைகள் எழுதியதுடன் தாமும் மகரிஷியைப் பற்றி மூல நூல்கள் எழுதியவர்கள்.

**மகரிஷி பரிபூரணம் எய்தியது**

அவர் முழங்கையில் தோன்றிய புற்று நோய் ஏறத்தாழ இரண்டாண்டு காலம் அவர் உடலை வருத்தியது. அத்தனை வகை மருத்துவங்களாலும், **மயக்க மருந்து ஏது மின்றிப்** பல முறை நடந்த அறுவை சிகிச்சைகளாலும் நோயினைக் குணப் படுத்த இயலவில்லை.

*"இது **போக** வேண்டிய உடல்! அதை விடுங்கள்! அதற்கான நேரமும் வந்தாகி விட்டது. அமைதியாக இருங்கள்!"*

என்று பாதிக்குரலாலும், பாதிச் சைகையாலும் சொன்னாராம். சற்று நேரத்தில் மிக அமைதியாக "அருணாச்சல சிவ, அருணாச்சல சிவ" என்று சுற்றியிருந்தவர்களின் குரல்கள் ஒலிக்க, மகரிஷி அமைதியாகப் பரிபூரணம் எய்தினார்.

வானத்தில் ஒளிமிகு எரி நட்சத்திரம் ஒன்று பறந்து போவதைப் பார்த்ததாக உடனிருந்தவர்கள் சொன்னார்களாம்.

1879 ஆம் ஆண்டு டிசம்பர் 30 ஆம் நாள் மார்கழித் திருவாதிரையன்று திருச்சுழியில் வேங்கடராமன் எனத் திருவவதாரம் செய்த **ஜீவன்** எனும் நதி பல்லுயிரும் தழைத்தோங்கச் செய்த பின்னர், 1950 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 14 ஆம் நாளன்று பிரம்மம் எனும் பெருங்கடலுடன் **ஐக்கியமானது.**

அன்னையார் தம் சமாதிக்கு அருகிலேயே பகவான் ரமண மகரிஷியும் நிரந்தரத் திருஇருக்கை கொண்டுள்ளார்.

*ஆரம் கண்டிகை; ஆடையும் கந்தையே;*
*பாரம் ஈசன் பணியலது ஒன்றிலார்*
*ஈர அன்பினர்; யாதும் குறைவிலார்*
*வீரம் என்னால் விளம்பும் தகையதோ?*

*–சே.பெ.பு – தி.கூ.சி 9*

*ஒழிந்தேன் பிறவி; உறவென்னும் பாசம்*
*கழிந்தேன்; கடவுளும் நானும் ஒன்றானேன்;*
*அழிந்தாங்கு இனிவரும் ஆக்கமும் வேண்டேன்;*
*செழுஞ் சார்புடைய சிவனைக் கண்டேனே!*

*– தி.மூ. – தி.ம. 2958*

*அருணை என்று எண்ண யான் அருள் கண்ணி பட்டேன் உன்*
*அருள்வலை தப்புமோ அருணாசலா!*

*– ப.ர.ம. – அ.ம.மா. 102*

[கண்ணி - வலை]

*அன்பொடு உன் நாமம் கேள் அன்பர்தம் அன்பருக்கு*
*அன்பனாயிட அருள் செய் அருணாசலா!*

*– ப.ர.ம. – அ.ம.மா. 104*

**அருணாச்சல சிவ! அருணாச்சல சிவ!**



# 06. பகவான் ரமண மகரிஷியின் சிவானந்தலஹரித் திரட்டு

## மையக் கருத்து : பக்தியே - முக்திக்கு எளிய வழி!

### மூலம்

*அங்கோலம் நிஜபீஜஸந்ததி*
*ரயஸ்காந்தோபலம் ஸூசிகா*
*ஸாத்வீ நைஜவிபும் லதா*
*க்ஷிதிருஹம் ஸிந்துஸ் ஸரித்வல்லபம்*
*ப்ராப்னோதீஹ யதா ததா பசுபதே:*
*பாதாரவிந்த த்வயம்*
*சேதோவ்ருத்தி ருபேத்ய திஷ்டதி*
*ஸதா ஸா பக்திரித் யுச்யதே*
*பாடல் 1 – சி. ல. 61*

*பக்திர் மஹேச பத புஷ்கர மாவஸந்தீ*
*காதம்பினீவ குருதே பரிதோஷவர்ஷம்*
*ஸம்பூரிதோ பவதி யஸ்ய மனஸ்தடாகஸ்*
*தஜ்ஜன்ம ஸஸ்ய மகிலம் ஸபலஞ்ச நான்யத்*
*பாடல் 2 – சி. ல. 76*

*ஜனன ம்ருதியுதானாம் ஸேவயா தேவதானாம்*
*ந பவதி ஸுகலேசஸ் ஸம்சயோ நாஸ்தி தத்ர*
*அஜனி மம்ருதரூபம் ஸாம்பமீசம் பஜந்தே*
*ய இஹ பரம ஸௌக்யம் தே ஹி தன்யா லபந்தே*
*பாடல் 3 – சி. ல. 83*

*கடோ வா ம்ருத் பிண்டோப்யணுரபி ச*
*தூமோக்னி ரசல :*
*படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோரசமனம்*

*வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா தர்க்கவசஸா*
*பதாம்போஜம் சம்போர் பஜ பரம ஸௌக்யம் வ்ரஜஸுகீ :*
*பாடல் 4 – சி. ல. 6*

*வக்ஷஸ்தாடன சங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜரா :*
*கோடீரோஜ்வல ரத்னதீபகலிகா நீராஜனம் குர்வதே*
*த்ருஷ்ட்வா முக்திவதூஸ் தனோதி நிப்ருதாச்லேஷம் பவானீபதே*
*யச்சேதஸ் தவ பாதபத்ம பஜனம் தஸ்யேஹ கிம் துர்லபம்*
*பாடல் 5 – சி. ல. 65*

*நரத்வம் தேவத்வம் நக வன ம்ருகத்வம் மசகதா*
*பசுத்வம் கீடத்வம் பவது விஹகத்வாதி ஜனனம்*
*ஸதா த்வத்பாதாப்ஜ ஸ்மரண பரமானந்தலஹரீ*
*விஹாராஸக்தஞ் சேத்த்ருதய மிஹ கிம் தேன வபுஷா*
*பாடல் 6 – சி. ல. 10*

*குஹாயாம் கேஹே வா பஹிரபி வனே வாத்ரிசிகரே*
*ஜலே வா வஹ்நௌ வா வஸது வஸதே: கிம்வத பலம்*
*ஸதா யஸ்யைவாந்த: கரண மபி சம்போ தவ பதே*
*ஸ்திதஞ்சேத் யோகோஸௌ ஸ ச பரமயோகீ ஸ ச ஸுகீ*
*பாடல் 7 – சி. ல. 12*

*கபீரே காஸாரே விசதி விஜனே கோரவிபினே*
*விசாலே சைலே ச ப்ரமதி குஸுமார்த்தம் ஜடமதி:*
*ஸமர்ப்யைகம் சேதஸ்ஸரஸிஜ முமாநாத பவதே*
*ஸுகேனாவஸ்தாதும் ஜன இஹ ந ஜானாதி கிமஹோ*
*பாடல் 8 – சி. ல. 9*

*வடுர்வா கேஹீ வா யதிரபி ஜடீவா ததிதரோ*
*நரோ வா ய: கச்சித் பவது பவ கிம் தேந பவதி*
*யதீயம் ஹ்ருத்பத்மம் யதி பவததீனம் பசுபதே*
*ததீயஸ் த்வம் சம்போ பவஸி பவபாரஞ்ச வஹஸி*
*பாடல் 9 – சி. ல. 11*

*ஆத்யா(அ) வித்யா ஹ்ருத்கதா நிர்க்கதாஸீத்*
*வித்யா ஹ்ருத்யா ஹ்ருத்கதா த்வத்ப்ரஸாதாத்*
*ஸேவே நித்யம் ஸ்ரீகரம் த்வத்பதாப்ஜம்*
*பாவே முக்தேர் பாஜனம் ராஜமௌலே*
*பாடல் 10 – சி. ல. 91*

# தமிழ் வடிவம்

## பக்தி என்றால் என்ன?

தாய்மரத்தை நாடி நகர்ந்து வரும் அங்கோல மரவித்தினைப் போல,
காந்தத்தைச் சேர்ந்து ஒட்டிக் கொள்ளும் இரும்பு ஊசியினைப் போல,
தன் பதியையே எண்ணத்திலெல்லாம் பதித்து, எப்போதும்
அந்தப் பர்த்தாவையே நாடி நிற்கும் பத்தினி மனையாளைப் போல,
ஆதாரமான மரத்தையே சுற்றி வளரும் ஒரு கொடியினைப் போல,
நீலக்கடலோடு நிறைவாக ஒன்றி விடும் நதியினைப் போல,
சிவனையே எப்போதும் நினைந்து
அவனது தாமரைத் திருவடிகளில் இணைந்து
ஒன்றி விடும் உறவு தான் பக்தி.

பாடல் 1 – சி. ல. 61

## பக்தியினால் கிட்டும் பயன்

ஈஸ்வரனின் திருவடி எனும் வானத்தில்
உலாவிடும் பக்தி எனும் மேகம்
இன்பம் எனும் இனிய மழையினைப் பொழிகிறது!
பக்தனின் மனம் எனும் தடாகம்
அந்த இன்ப மழையினை ஏற்று நிரம்பி வழிகிறது!
இந்த மழைநீர் பக்தனின் வாழ்வெனும் பயிரை
வளம் பெறச் செய்கிறது! ஆனால்,
அந்தப் பவித்திரமான திருவடியினைப்
பற்றாதானுக்கோ இந்த
பாக்கியம் கிட்டுவதே இல்லை!

பாடல் 2 – சி. ல. 76

## பக்தியை யாரிடம் காட்டுவது?

நம்மைப்போலவே பிறப்பு – இறப்புச் சங்கிலியில்
உட்பட்டிருக்கும் தெய்வங்களை வழிபடுவதால்
ஆனந்தம் எதுவும் கிட்டுவதில்லை!
ஆனால்,

அமிர்தத் தன்மையும் அழகும் நிறைந்த
அம்பிகை உடனாய பரமனை வழிபடுவோர்
முக்தி எனும் பேரின்பமே பெறும் பாக்கியம் செய்தவர்கள்.
தோற்றமோ மறைவோ கிடையாது அப்பரமனுக்கு!
அவன் என்றும் நிரந்தரமானவன்!

பாடல் 3 – சி. ல. 83

**பக்தி எதில் இருக்கிறது? - திறன்மிகு தர்க்கங்களில் இல்லை, திருவடி தியானத்தில் இருக்கிறது!**

அறிவார்ந்த பெருமக்களே,
மண்ணா – குடமா, அணுவா – மலையா,
புகையா – நெருப்பா, நூலா – துணியா?
"எது முதலான உண்மைப் பொருள்?" என்ற
வாதத்தால் வரும் பயன்தான் என்ன?
வறண்டு போன தொண்டை தானே மிஞ்சும்!
இதை விடுத்து நலம் பல நல்கிடும்
ஈசனின் தாமரைத் திருவடிகளை தியானித்தால்
நிரந்தரமான பேரின்பம் நிச்சயமாகக் கிட்டிடுமே!

பாடல் 4 – சி. ல. 6

**பக்தி செய்யும் அடியாருக்கு எது தான் கிட்டாது?**

பாசமிகு அன்னை பவானிதம் பதியே!
உன் தாமரைத் திருவடிகளை ஒரு நாளும்
மறவாது மனத்தினைப் பதித்துருகும் பக்தனைப் பார்த்தாலே
நெஞ்சில் விழும் உதைக்கு அஞ்சி
எமனும் ஓடிவிடுகிறான்!
தீபமென மின்னும் நவரத்தினங்கள்
பதித்த தம் மகுடத்துடன் தேவர்கள்
அந்த பக்தனைக் குனிந்து வணங்குவது
அவனுக்கு அலங்காரத் தீபாராதனை
செய்வது போலல்லவா இருக்கிறது!
அது மட்டுமா?
முக்தியெனும் மங்கல மங்கை
அவனை ஆரத் தழுவிக்கொள்கிறாளே!
ஆக, உன் திருவடி மீது தன்
உள்ளத்தை நிலையாக வைத்திருக்கும்

பக்தனுக்கு எதுதான் கிட்டாது?

பாடல் 5 – சி. ல. 65

**ஒருவர் எடுத்திருக்கும் பிறவி பக்திக்கு ஒரு தடையில்லை**

மனிதராய், தேவராய், மலை காடுகளில் திரியும்
விலங்குகளாய், வீட்டுப் பிராணிகளாய்,
புல்லாய், பறவையாய், புழுவாய்
இப்படி எப்பிறவி தானெடுத்து
இப்புவியில் பிறந்தால் என்ன?
அதன் உள்ளம் மட்டும்
உன் தாமரைத் திருவடிகளில்
எப்பொழுதும் ஆழ்ந்திருந்தால் அதிலிருந்து
அலை அலையாய்ப் பொங்கி வரும்
ஆனந்த வெள்ளத்தில் அது அமிழ்ந்திருக்கலாமே!

பாடல் 6 – சி. ல. 10

**பக்திக்கு தவம் தேவையல்ல - அந்தக்கரண அர்ப்பணிப்பே அவசியம்**

குகையிலோ, வீட்டிலோ, வெட்ட வெளியிலோ, காட்டிலோ,
மலை உச்சியிலோ, ஆற்று நீரின் ஆழத்திலோ,
எரியும் நெருப்பிலோ தவ வாசம் செய்தாலும்
அவன் யோகி ஆகிவிட மாட்டான்!
அவனது அந்தக்கரணங்கள் உனது திருவடியில்
நிலை கொள்ள வேண்டும்; அதுவே யோக நிலை!
அவனே ஒரு பரமயோகி!
அவனே இன்பத்தில் திளைத்திருப்பவன்!

பாடல் 7 – சி. ல. 12

**பக்தி வழிபாட்டிற்குச் சமர்ப்பிக்க அரிய பொருட்கள் இல்லாதது ஒரு தடையல்ல - உள்ளத் தாமரை மலர் ஒன்றே போதும்!**

அம்மை உமையின் அன்புக் கணவரே!
உம்மைத் தூமலர் தூவித் தொழுதிட
ஆழக் குளங்களிலும், அடர்ந்த காடுகளிலும்
விரிந்து உயர்ந்த மலைகளிலும்
மலர்களைத் தேடி அலைகின்றனரே,
இந்த அறிவிலி மாந்தர்!
தம் மனமெனும் குளத்திலேயே உள்ள

உள்ளமெனும் ஒரு உன்னதத் தாமரைமலரை
மட்டும் உனக்குச் சமர்ப்பித்து விட்டு
அங்குமிங்கும் அலைந்து திரியாமல் அமைதியாக
வீட்டிலேயே இருக்க அவர்களுக்குத் தெரியவில்லையே!

பாடல் 8 – சி. ல. 9

## பிறந்த குலமும் வாழ்க்கை நிலையும் பக்திக்குத் தடைகளல்ல

முன்னோர் வகுத்துச் சொன்ன
வாழ்க்கை நிலை நான்கில், அவன்
பிரம்மச்சாரியாகவோ, இல்லறத்தானாகவோ,
அதிலிருந்து துறவு கொண்ட முதியவராகவோ
முற்றும் துறந்து முடிவளர்த்த துறவியாகவோ
எந்நிலையில் இருந்தாலும், எத்தொழிலைச் செய்தாலும்
குறை ஒன்றும் இல்லையே?
பசுபதியே! சம்புவே!
எப்பொழுது அவன் தன் இதயத் தாமரையை
உன்னிடத்தில் ஒப்படைத்துவிட்டானோ
அப்பொழுதே, நீ அல்லவா அவனோடு ஒன்றாகி
அவன் பிறவிச் சுமையையே
சுமக்கத் தொடங்கிவிட்டாய்!

பாடல் 9 – சி. ல. 11

## பக்தி ஞானம் தந்து, முக்தியும் தரும்!

சந்திரசேகரரே! சஞ்சலம் மிகுந்த
இப்பிறவியில் என்னோடு பிறந்து,
என்னிடமே இதுவரை இருந்த
அஞ்ஞானமெனும் இருளகற்றி,
என்னுள்ளே ஞான விளக்கேற்றி வைத்து,
என்னை நீ வாழ்வாங்கு வாழ வைத்துள்ளாய்!
திருவினைத் தருவதும்
முக்திக்கு இருப்பிடமும் ஆன
உன் தாமரைத் திருவடிகளையே நான்
என்றும் வழிபடுகிறேன்! தியானிக்கிறேன்!

பாடல் 10 – சி. ல. 91



# 07. பகவான் ரமண மகரிஷி திரட்டிய பத்துப் பாடல்களின் விளக்கம்

## பாடல் 1
## பக்தி என்றால் என்ன?

**எளியதொரு பக்திப் பாதையை** சாமானிய மக்களுக்குக் காட்ட **ஆதி சங்கரரின் சிவானந்த லஹரி**யிலிருந்து பத்துப் பாடல்களை மட்டும் **பகவான் ரமண மகரிஷி** திரட்டித் தந்துள்ளார் என்று பார்த்தோம். **பகவான்** நம்மைப்பற்றி நன்கு அறிந்தவர்! எனவே தமது பக்திப் **பாடத்தை** அரிச்சுவடியிலிருந்து தொடங்குகிறார்! முதலில் **"பக்தி என்றால் என்ன?"** என்பதை நமக்குப் புரிய வைப்பதற்காக சங்கரரின் 100 பாடல்களிலிருந்து **61 ஆவது** பாடலைத் தெரிவு செய்து தமது திரட்டில் முதல் பாடலாகத் தந்துள்ளார்!

*அங்கோலம் நிஜபீஜஸந்ததி*
*ரயஸ்காந் தோபலம் ஸூசிகா*
*ஸாத்வீ நைஜவிபும் லதா க்ஷிதிருஹம்*
*ஸிந்துஸ் ஸரித்வல்லபம்*
*ப்ராப்னோதீஹ யதா ததா பசுபதே:*
*பாதாரவிந்த த்வயம்*
*சேதோவ்ருத்தி ருபேத்ய திஷ்டதி*
*ஸதா ஸா பக்திரித் யுச்யதே*

*– ஆ.ச. – சி.ல.61*

**தாய்மரத்தை நாடி நகர்ந்து வரும் அங்கோல மரவித்தினைப் போல,**
**காந்தத்தைச் சேர்ந்து ஒட்டிக் கொள்ளும் இரும்பு ஊசியினைப் போல,**

**தன் பதியையே எண்ணத்திலெல்லாம் பதித்து, எப்போதும்**
**அந்தப் பர்த்தாவையே நாடி நிற்கும் பத்தினி மனையாளைப் போல,**
**ஆதாரமான மரத்தையே சுற்றி வளரும் ஒரு கொடியினைப் போல,**
**நீலக்கடலோடு நிறைவாக ஒன்றி விடும் நதியினைப் போல,**
**சிவனையே எப்போதும் நினைந்து**
**அவனது தாமரைத் திருவடிகளில் இணைந்து**
**ஒன்றி விடும் உறவு தான் பக்தி.**

**– பகவான் ரமண மகரிஷி திரட்டு – பாடல் 1**

இப்பாடலில் ''பக்தி என்றால் என்ன?'' என்பதை **சங்கரர் ஐந்து உவமைகள்** மூலம் காட்டுகிறார். மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் அவை ஒன்றுக்கொன்று தொடர்பற்ற ஐந்து உவமைகள் போல் தோன்றும். ஆனால் ஆழ்ந்து பார்த்தால், அவை நம் **பக்திப் பயணத்தின் ஐந்து படிநிலை வளர்ச்சியையும்** தொகுத்துக் காட்டுகின்றன என்பது புலனாகும்.

**1. ஏறழிஞ்சில் மரமும் அதன் விதைகளும்**

**அங்கோலம்** என்ற **ஏறழிஞ்சில் மரத்தின்** பழம் பழுத்ததும் மரம் அதன் பிடியைத் தளர்த்திப் பழத்தினைக் கீழே விடுகிறது. விழுந்த பழம் உடைந்து விதைகளை வெளியேற்றுகிறது. வெளியேறிய விதைகளின் நிலை?

**அங்கோல மரத்தின் பழம் வெடித்துத்**
**தரையிலே விழுந்த விதைகள்**
**தாய்மரத்தின் தாளினை நோக்கி**
**நகர்ந்து வந்து வரிசையாய்ச் சேரும் பாங்கு!**

பழத்திலிருந்து விதைகள் வெளிவருகின்றன - இது தான் சாமான்ய மானுடனிடம் **பக்தியின் தோற்றம்.**

மரம் விதைகளைத் தன்னை நோக்கி இழுக்கிறது - இறைவனின் அருள் பக்தன் மேல் பதிகிறது.

விதைகள் மரத்தை நோக்கி வரிசையாய் நகர்கின்றன - பக்தன் இறைவனை நோக்கி நகர்கிறான்

இப்படி இறையின் திருவருளால் மானுடனிடம் இறைநோக்கிய பக்திப் பயணம் தொடங்குகிறது. இதுதான் **பக்தி ஏணியின் முதல் படி**

ஆனால் விதைகள் மரத்தை நோக்கி நகர்ந்து வரும் போதோ அல்லது மரத்தின் அடியில் சேர்ந்த பின்னரோ, பெருங்காற்று ஒன்று அடித்தால் அந்த விதைகளின் பாதையே மாறி விட வாய்ப்பு உண்டு! அதேபோல் **புதிய புற ஆசைகள்** பக்தனிடம் தோன்றினால் அவன் தொடங்கிய பக்திப் பயணத்திலிருந்து அவன் விலகிப் போகும் வாய்ப்பும் உண்டு என்பது தொக்கி நிற்கும் செய்தி!

**2. காந்தமும் இரும்பு ஊசியும்**

**காந்தம், இரும்பு** ஊசியைத் தன் சக்தியால் **இழுக்கிறது**. ஊசியும் அதை நோக்கி நகர்கிறது. அத்துடன் நின்றுவிடவில்லை. இரும்பு ஊசி காந்தத்துடன் ஒட்டிக் கொள்கிறது.

இப்படித் தனியே கிடக்கும் இரும்பு ஊசியை
காந்தத் துண்டு இழுத்ததும் அது மெதுவாய் வந்து
காந்தத்தோடு ஒட்டிக் கொள்ளும் தன்மை

இப்படி இரண்டும் ஒட்டிக் கொண்டாலும் **இரும்பும், ஊசியும் தனித் தனிப் பொருட்களாகவே** தெரிகின்றன.

இதே போல பக்தனும் இறைவன் திருவடியினை நெருங்கி அதைப் பிடித்துக் கொள்கிறான். இறைவனோடு இருக்கிறான் என்றாலும் இருவரும் **இருமை** நிலையில்தான் இருக்கிறார்கள்.

ஊசியின் மீது மண்ணோ தூசியோ அதிகம் இருந்தால் காந்தம் இழுக்காது. அதுபோல் நம் மனதில் புற ஆசைகள் அதிகமாக இருந்தால் இறைவனால் நம்மை ஈர்க்க முடியாது. எனவே நம் மனம் தூயதாய் இருந்தல் வேண்டும்.

இது **பக்தி ஏணியின் இரண்டாவது படி.**

காந்தத்துடன் ஒட்டிக் கொண்ட ஊசியும் காந்த சக்தி பெற்று, ஏனைய ஊசிகளையும் இழுக்கும் திறன் பெறுவது போல, ஒரு பக்தன் மற்றொரு மானுடனையும் பக்தனாக்கலாம் என்பது உபரிச் செய்தி!

## 3. பத்தினியான மனைவியின் நிலை

மனம், வாக்கு, உடல் ஆகிய மூன்றாலும் கணவனிடம் அன்புநிறை ஈடுபாடு கொண்ட ஒரு பத்தினியான மனைவி **உள்ளத்தாலும், உணர்வாலும், சிந்தனையாலும்** கணவனுடன் ஒன்றியிருக்கும் நிலையில், அவர்கள் உடலால்தான் இருவர்!

**இது பத்தினியான மனைவி ஒருத்திக்கு அன்பும் ஆசையும் தம் பதியிடமே இருக்கும் பிணைப்பு!**

இதே போல, ஒரு பக்தன் **உள்ளத்தாலும் உணர்வாலும், சிந்தனையாலும்** இறைவனுடன் ஒன்றியிருந்தாலும், பக்தன் - இறைவன் என்ற இருமை நிலை இன்னும் தொடர்கிறது.

**இது பக்தி ஏணியின் மூன்றாவது படி**

## 4. கொடியும் மரமும்

வளருமொரு கொடி அதன் அருகிலிருக்கும் மரமொன்றை ஆதாரமாகக் கொண்டு அதையே சுற்றிச் சுற்றி வளரும். நாளடைவில் அந்த மரத்திலேயே வேர்விட்டு ஒட்டிக் கொண்டு அதன் வளர்ச்சிக்கே அந்த மரத்தைச் சார்ந்திருக்கும் நிலையை அடைந்து விடும். இதனால் பார்ப்பதற்கு இரண்டும் தனித் தனியாகத் தோன்றினாலும் இரண்டும் **ஒன்றைவிட்டு ஒன்று பிரியாத நிலை** பெற்று விடுகின்றன!

ஸ்ரீ சைலத்தில் சங்கரரது உள்ளத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்திய அர்ஜுன மரமும் அதைச் சுற்றிப் பின்னிப் பிணைந்து வளர்ந்திருந்த மல்லிகைக் கொடியும்தான் இந்த அழகிய உவமைக்கு ஊற்றுக் கண்ணாக இருந்தது போலும்!

இப்படி, பக்தனும் இறைவனோடு இணைந்து, அவனது திருவடிகளை விடாது சிக்கெனப் பிடித்துக் கொண்டு தம் வாழ்க்கைக்கு அவனையே சார்ந்திருக்கிறான்.

**கொடி தன்னருகிலிருக்கும்<br>மரமொன்றை ஆதாரமாகக் கொண்டு<br>அதைச் சுற்றிச் சுற்றியே வளர்ந்து<br>அதனோடே ஒட்டிக் கொள்ளும் இயல்பு!**

**இது பக்தி ஏணியின் நான்காவது படி**

## 5. நதியும் கடலும்

மலையில் தோன்றும் நதி கீழிறங்கி, உடன் சேரும் உபநதிகளையும் இணைத்துக் கொண்டு ஓடி, நிறைவாகக் கடலில் சேர்ந்து தன் நிறம், மணம், சுவை அத்தனையையும் இழந்து, கடல் நீரில் இரண்டறக் கலந்து விடுகிறது!

**ஓடிவரும் நதிகள் அனைத்தும் சேருமிடம்**
**அந்த ஆழக்கடல்தானே?**
**சேர்ந்தபின் நதியின் நிறமென்ன? மணமென்ன?**
**குணமென்ன?**
**நீரோடு நீர் சேர்ந்து நீராகத்தானே ஆகி ஒன்றியிருக்கும்!**

இதுதான் நிறைவான நிலை. கடலோடு கலந்து தன் தனித்தன்மையை இழந்துவிட்ட நீர்போலப் பக்தன் இறைவனோடு இணைந்து, இருமை நிலை கடந்து அவனுடன் ஒன்றிய **அத்வைத** நிலையை அடைகிறான்.

**இது பக்தி ஏணியின் நிறைவான ஐந்தாவது படி!**

இத்தகைய நமது படிநிலைப் பக்திப் பயணத்திற்கு ஏணிப்படியினையே உவமையாகக் கூறும் **அப்பர் சுவாமி**களின் தேவாரத் திருப்பாடல் ஒன்று!

*பேணித் தொழும் அவர் பொன்னுலகு ஆளப் பிறங்கு அருளால்*
***ஏணிப் படி நெறியிட்டுக்** கொடுத்து இமையோர் முடிமேல்*
*மாணிக்கம் ஒத்து மரகதம் போன்று வயிரம் மன்னி*
*ஆணிக் கனகமும் ஒக்கும் ஐயாறன் அடித்தலமே*

*அ.தே. 4.92.16*

[ஐயாறனின் திருவடிகள், வானவர்களின் முடியில் விளங்கும் மாணிக்கம், மரகதம், வைரம் போன்ற பொலிவும், நிறமும் நிரம்பிய மணிகள் போலவும், தரமான பொன் போலவும் ஒளி வீசுகின்றன. மேலும், அத்திருவடிகளை விரும்பித் தொழும் அடியார்கள் விண்ணுலகம் சேர்வதற்கும் அவை வழி வகுக்கின்றன. அந்தத் திருவடிகள், அடியார்களின் பக்குவ நெறிக்கேற்ப, **ஏணிப்படி போல் வீட்டுலகம் சென்றடைய வழி வகுத்துத் தருகின்றன.**]

*இப்படி* சாமானிய மானுடனாய்ப் பிறந்த ஒருவன் நாளடைவில் இறைவனின் பெரும் கருணையால் முக்தி நோக்கிய தன் பக்திப் பயணத்தில் ஏறழிஞ்சில் மர விதை போல மரத்தை நோக்கி நகரத் தொடங்கி, இரும்பு ஊசியினைப் போலக் காந்தமெனும் இறைவனோடு ஒட்டிக் கொண்டு, பத்தினியான மனைவியைப் போல உள்ளத்தாலும் உணர்வாலும் இறைவனோடு இணைந்து, மரத்தைச் சுற்றிவளர்ந்து ஒட்டிக் கொள்ளும் கொடியினைப் போல தம் வளர்ச்சிக்கே இறைவனைச் சார்ந்து, நிறைவாகக் கடலில் கலந்து அதனோடு ஒன்றிவிடும் நதியினைப் போல, இறைவன் திருவடிகளில் சரணாகதி செய்து, **இறைவனோடு ஒன்றி இரண்டறக் கலந்து பரமுக்தி பெறும் உறவுதான் பக்தி!**

இதைத்தான் சங்கரர் தனது பாடலின் இறுதி இரண்டு வரிகளில் சொல்லியிருக்கிறார்!

*யதா ப்ராப்நோதி ததா சேதோவ்ருத்தி*
*பசுபதே பாதாரவிந்த த்வயம் உபேத்ய ஸதா திருஷ்டதி*
*ஸா பக்திரிதி உச்யதே (அன்வயப் படுத்தப்பெற்றது)*

[(அந்த ஐந்தும்) எப்படி தத்தம் இலக்குகளை அடைகின்றனவோ அப்படி மனத்தால் பசுபதியான சிவனின் இரண்டு திருவடிகளையும் அடைந்து, எப்பொழுதும் அங்கேயே இருந்தால் அதுதான் பக்தி எனப்படும்]

**சங்கரரின் இந்த 61 ஆவது பாடலை** முதலாவது பாடலாகப் **பகவான் ரமணர்** தெரிவு செய்ததற்கு ஒன்றுக்கு மேலான காரணங்கள் இருக்கலாம் என்று தோன்றுகிறது!

1. **பக்தி என்றால் என்ன** என்பதை எளிய உபமானங்களுடன் பாடல் விளக்குகிறது.
2. பக்தி **முக்தி**யில் நிறைவு பெறுவதற்கான **படி நிலை வளர்ச்சியைக்** காட்டுகிறது.
3. பக்தனுக்கும் பரமாத்மாவுக்கும் இடையில் உள்ள இடைவெளியை முதல் படியிலிருந்து குறைத்துக் கொண்டே வந்து ஐந்தாவது படியில், இடைவெளியை முற்றிலுமாக நீக்கி இருவரையும் இணைத்து, **சங்கரரும், ரமணரும்** ஏற்றுப் போற்றி வந்த அத்வைத நிலையை நிறுவுகிறது.

4. நிறைவாக "என் உள்ளத்தின் உட்புகுந்து திருஇருக்கை கொண்டுள்ள **நீயே இனி எனக்கு எல்லாம்! நீயே புகல்! திவ்ய சரணங்களாகிய உன் திருவடித் தாமரைகளில் சரணாகதி அடைகிறேன்! ஏற்றருள்வாயாக!"** என்று காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் பக்தனின் தூய அன்பு பொங்கும், திருப்தி பெற்ற, சலனமற்ற, ஆணவமற்ற, ஆசைகளற்ற, சமநோக்குடைய, மறுதெய்வ வழிபாடு துறந்த, **"இனி, இன்பமே எந்நாளும் துன்பம் ஏதும் இல்லை"** என்ற மனநிலையை எட்டிப் பிடித்த பக்தனைக் காட்டுகிறது.

இந்த உன்னத நிலையை பக்தன் எட்டிப் பிடிக்கும் பயணத்தை அடுத்து வரும் எட்டுப் பாடல்களில் **பகவான் ரமணர்** காட்டுகிறார். பத்தாவது பாடலில் **அஞ்ஞான இருளகன்று ஞானம் பெற்று பரமனோடு ஒன்றிய பக்தன்** அவன் **திருவடிகளை** விடாது பிடித்துக் கொண்டிருப்பதைக் காட்டித் தம் திரட்டினை நிறைவு செய்கிறார் பகவான் ரமணர்!



## பாடல் 2
## பக்தியினால் கிட்டும் பயன்

**முதலாவது** பாடலில் **''எது பக்தி''** என்று காட்டிய **பகவான் ரமண மகரிஷி,** இரண்டாவது பாடல் மூலம் **பக்தியால் கிட்டும் பயனையும்** நமக்குக் காட்டிவிடுகிறார். நம் போன்ற சாமான்ய மக்கள் ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன்னரே ''அதனால் நமக்கென்ன லாபம்?'' என்று தெரிந்து கொண்டுதானே தொடங்குவோம்! நமது இந்த மனநிலையை நன்கறிந்த மகரிஷி, பக்தியால் உயிர்கள் பெறும் பயனைக் கூறும் **சிவானந்தலஹரியின் 76 ஆவது** பாடலை **அடுத்த** பாடலாகத் தொகுத்திருக்கிறார்

*பக்திர் மஹேச பத புஷ்கர மாவஸந்தீ*
*காதம்பினீவ குருதே பரிதோஷவர்ஷம்*
*ஸம்பூரிதோ பவதி யஸ்ய மனஸ்தடாகஸ்*
*தஜ்ஜன்ம ஸஸ்ய மகிலம் ஸபலஞ்ச நான்யத்*
*சி.ல.76*

**ஈஸ்வரனின் திருவடி எனும் வானத்தில்**
**உலாவிடும் பக்தி எனும் மேகம்**
**இன்பம் எனும் இனிய மழையினைப்**
**பொழிகிறது!**
**பக்தனின் மனம் எனும் தடாகம்**
**அந்த இன்ப மழையினை**
**ஏற்று நிரம்பி வழிகிறது!**
**இந்த மழைநீர் பக்தனின் வாழ்வெனும்**
**பயிரை**
**வளம் பெறச் செய்கிறது! ஆனால்,**
**அந்தப் பவித்திரமான திருவடியினைப்**

**பற்றாதானுக்கோ இந்த**
**பாக்கியம் கிட்டுவதே இல்லை!**

**– ப.ர.ம.தி – பாடல் 2 – சி. ல. 76**

முதற் பாடல் உன்னத **உவமைகள்** கொண்டது என்றால் இது அழகிய **உருவகங்கள்** கொண்ட ஒரு பாடல்!

| | |
|---|---|
| வானம் | - ஈசனின் திருவடி |
| மேகம் | - அடியாரின் பக்தி |
| மழை | - இன்பம் - ஆனந்தம் |
| தடாகம் - குளம் | - அடியாரின் மனம் |
| பயிர் | - அடியாரின் வாழ்க்கை |

இந்தப் பாடலை ஆழ்ந்து பார்ப்பதற்கு முன், "மழை எப்படிப் பெய்கிறது?" என்பதை நினைவுபடுத்திக் கொள்ளுதல் நலம். அதை அழகாகச் சொல்லித் தந்தவர் **ஆண்டாள் நாச்சியார். அவரது திருப்பாவையில் 4** ஆவது பாசுரம்!

*ஆழிமழைக் கண்ணா! ஒன்று நீ கைகரவேல்*
*ஆழியுட்புக்கு முகந்து கொடு ஆர்த்தேறி*
*ஊழி முதல்வன் உருவம் போல் மெய்கருத்துப்*
*பாழியந் தோளுடைப் பத்மநாபன் கையில்*
*ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
*தாழாதே சாரங்கமுதைத்த சரமழைபோல்*
*வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்*
*மார்கழி நீராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்!*

[கண்ணா! நீ, கடலினுள் புகுந்து தண்ணீரை மொண்டு கொண்டு மேலே ஏறுகிறாய்! அங்கே திருமாலின் கரிய வண்ணத் திருமேனிபோல் கருத்த மேகமாகி விடுகிறாய்! இப்படி நீ மேகமாய் வானத்தை அடைந்ததும் அந்தப் பத்மநாபன் கைச் சக்கரம்போல் மின்னி, அவன் கைச் சங்கின் ஒலிபோல் இடி இடித்து, அவனது வில்லிலிருந்து தாமதியாது புறப்படும் அம்புகள் போல் இவ்வுலகம் இன்பமுடன் வாழ, மழையாகப் பொழிகிறாய்! குளங்கள் நிரம்பி நாங்கள் மகிழ்ந்து மார்கழியில் நீராட வேண்டுமல்லவா?]

இனி, மீண்டும் **சங்கரரின் பக்தி - மழைப் பாடலுக்கு** வருவோம்!

பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் ஈசன். எனவே அவனது **திருவடி**களும் பரந்து விரிந்து காணும் **வானத்தைப்** போல்

இருக்கின்றனவாம். அவ்வானத்தில் உலவிடும் **சூல் கொண்ட மேகம்** போன்றதாம் அடியாரின் ஆழ்ந்த பக்தி. அந்த மேகமெனும் பக்தி ஈசனின் கருணை நிறை திருவடியான வானத்தைத் தொட்டதும் குளிர்ந்துவிடும். குளிர்ந்த மேகம் பொழிவது **மழை** நீர். அடியாரின் பக்தி முதிர்ந்ததும் பொழிவது **இன்பம்**, ஆனந்தம், மகிழ்ச்சி! இந்த மழை நீர் தேங்கி நிற்க ஒரு **குளமோ, ஏரியோ** தேவையல்லவா? அதுதான் அடியாரின் மனமாம்! இந்த மனம் எனும் குளம் நிரம்பி வழியும் **ஆனந்தம்** எனும் **நீர்**, அடியாரின் **வாழ்க்கை** எனும் **பயிரினை** வளமுடன் திகழச் செய்கிறதாம்!

இதுவே தூய பக்தியோடு ஈசனின் திருவடிகளைப் பற்றிய பக்தன் பெறும் பயன்! **சங்கரர்** பாடலை இத்துடன் நிறுத்திவிடவில்லை. பொதுவாக அருளாளர்கள் முக்கியமான ஒரு கருத்தைச் சொல்லும் பொழுது அதற்கு ஒரு அழுத்தம் கொடுப்பதற்காக அதை எதிர்மறை முகத்தானும் சொல்லிக் காட்டுவார்கள். ஈசனின் திருவடிகளை இவ்வாறு பற்றாதாருக்கு இத்தகைய வளமான வாழ்க்கை அமையாது என்றும் சொல்லிப் பாடலை நிறைவு செய்கிறார்.

எல்லோருக்கும் தெரிந்த, எளிதில் புரியக்கூடிய, உலகத்திலுள்ள அனைத்து உயிர்களுக்கும் ஆதாரமான, அதாவது உண்ணும் உணவை சமைக்க உதவியும், தானே உணவும் ஆகின்ற மழையினை உருவகித்துப் பாடியுள்ளார் **சங்கரர்!**

**வள்ளுவரின் திருக்குறளிலும்** கடவுள் வாழ்த்துக்கு அடுத்த அதிகாரமாக வான் சிறப்பாகிய மழைதானே வைக்கப் பெற்றிருக்கிறது!

*துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி துப்பார்க்குத்*
*துப்பாய தூஉம் மழை*

– *குறள் 12*

[உண்ணும் உணவை உண்டாக்கிக் கொடுத்தும், தானே உணவும் ஆவது மழை]

*விசும்பின் துளி வீழின் அல்லால் மற்றாங்கே*
*பசும்புல் தலை காண்பது அரிது*

– *குறள் 16*

[மேகத்திலிருந்து மழை விழாதிருந்தால் பூமியில் ஒரு புல் கூட முளைக்காது]

ஆக மழை பொழிந்தால்தான் பயிர்கள் வளரும். அப்படி மழை பெய்வதற்கு வானத்தில் மேகங்கள் திரண்டிருக்கவேண்டும். அது போல ஈசனின் திருவடிகளில் நம் பக்தி எப்பொழுதும் பதிந்திருக்க வேண்டும். இதிலிருந்து கிட்டும் ஆனந்தத்தால் நம் வாழ்க்கை திளைத்து வளர்ந்து சிறப்பாக நிறைவு பெறும் என்பதை நாம் புரிந்து கொள்ள முடிகிறது.

**ஈசனின் அருள் அவன் திருவடியிலேதான் திரண்டிருக்கிறது** என்பது அருளாளர்களின் தீர்க்கமான முடிவு. அந்த அருட் திருவடியின் மகிமை கூறும் **மாணிக்கவாசகரின்** பாடல் ஒன்று:

*போற்றி அருளுக, நின் ஆதிஆம்பாதமலர்!*
*போற்றி அருளுக, நின் அந்தம் ஆம்செம்தளிர்கள்!*
*போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றம் ஆம்பொற்பாதம்!*
*போற்றி எல்லா உயிர்க்கும் போகம் ஆம்பூம்கழல்கள்!*
*போற்றி எல்லா உயிர்க்கும் ஈறுஆம்இணை அடிகள்!*
*போற்றி மால் நான்முகனும் காணாத புண்டரிகம்!*
*போற்றி யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்!*
*போற்றி யாம் மார்கழிநீர் ஆட ஏல் ஓர் எம்பாவாய்!*

*– மா.தி – தி.வெ.– 20*

[புண்டரிகம் - தாமரை மலர்]

**பகவான் ரமண மகரிஷியின்** திரட்டின் இரண்டாவது பாடலின் விளக்கத்தை நிறைவு செய்யும் தருணத்தில் ஏறத்தாழ இதே கருத்தினைக் கொண்ட **சிவப்பிரகாச சுவாமிகள்** அருளிச் செய்த **நால்வர் நான்மணிமாலையிலிருந்து, மாணிக்கவாசகரின் திருவாசகத்தை மழையாக** உருவகித்துப் பாடியுள்ள ஒரு பாடலை இங்கு நினைவு கூர்தல் பொருந்தும்.

*வலமழு உயரிய நலமலி கங்கை*
*நதிதலை சேர்ந்த நற்கருணைக் கடல்*
*முகந்து உலகு உவப்ப, உகந்தமாணிக்க*
*வாசகன் எனும் ஒரு மாமழை பொழிந்த*
*திருவாசகமெனும் பெருநீர் ஒழுகி,*
*ஓதுவார் மனமெனும் ஒண்குளம் புகுந்து,*
*நாவெனும் மதகில் நடந்து, கேட்போர்*
*செவியெனும் மடையிற் செவ்விதிற் செல்லா*

*உளமெனும் நிலம்புக ஊன்றிய அன்பாம்*
*வித்திற் சிவமெனும் மென்முளை தோன்றி*
*வளர்ந்து கருணை மலர்ந்து*
*விளக்குறு முத்தி மெய்ப் பயன் தருமே!*

*– சி.சு.– நா.நா.மா – 16*

[**சிவனாரெ**னும் கங்கை நதி சங்கமமான கடலின் நீர் ஆவியாகி, **மாணிக்கவாசகர்** எனும் மேகமாகித் திரண்டு, **திருவாசகமெனும்** அருள் மழை பொழிந்து, அதை ஓதும் அடியார் நாவின் ஊடே பாய்ந்து, அது கேட்பவர் **செவி எனும் குளத்துள்** நிரம்பி, அவர் **உளம் எனும் நிலத்தில் பக்தி விதையை** முளைக்கச் செய்து, மடையின் மூலம் அவர்கள் மனமெனும் **சிவம் எனும் கருணை**யை மலரச் செய்து, அந்த பக்திச் செடி பூ, காய், பழம் என்ற அடுத்தடுத்த நிலைகளின் நிறைவில் மீளா முத்தியைத் தருமே!]

ஆனால் ஒன்றை நாம் நினைவில் கொள்ள வேண்டும்! நம் மனம் எனும் குளம் சிவனின் கருணை மழையால் முழுமையாக நிரம்பி வழிவதும், அரைகுறையாக நிரம்புவதும், அல்லது நிரம்பாமலே இருப்பதும் நமது முன்வினைப் பயன்களான பாவ, புண்ணியங்களையும், இந்தப் பிறவியில் அந்தப் பற்றற்றான் திருவடியினை எவ்வளவு கெட்டியாக நாம் பற்றி இருக்கிறோம் என்பதையும் பொறுத்தது!



## பாடல் 3

## பக்தி யாரிடம் காட்டுவது?

எது பக்தி என்று முதலில் தெரிந்து கொண்ட பிறகு பக்தியால் கிட்டும் பயனைப் பார்த்தோம். இனி, இந்த பக்தியை யாரிடம் காட்டுவது என்பதை நமக்குக் காட்ட **பகவான் ரமண மகரிஷி, சங்கரரின்** 83 ஆவது பாடலைத் தமது திரட்டில் தொகுத்திருக்கிறார்

*ஜனன ம்ருதியுதானாம் ஸேவயா தேவதானாம்*
*ந பவதி ஸுகலேசஸ் ஸம்சயோ நாஸ்தி தத்ர*
*அஜனி மம்ருதரூபம் ஸாம்பமீசம் பஜந்தே*
*ய இஹ பரம ஸௌக்யம் தே ஹி தன்யா லபந்தே*
*– சி.ல. 83*

**நம்மைப்போலவே பிறப்பு – இறப்புச்**
**சங்கிலியில்**
**உட்பட்ட தெய்வங்களை வழிபடுவதால்**
**ஆனந்தம் எதுவும் கிட்டுவதில்லை!**
**ஆனால்,**
**அமிர்தத் தன்மையும் அழகும் நிறைந்த**
**அம்பிகை உடனாய பரமனை வழிபடுவோர்**
**முக்தி எனும் பேரின்பமே பெறும் பாக்கியம்**
**செய்தவர்கள்.**
**தோற்றமோ மறைவோ கிடையாது**
**அப்பரமனுக்கு!**
**அவன் என்றும் நிரந்தரமானவன்!**
**– ப.ர.ம.தி.பாடல் சி.ல. 83**

தமது திரட்டில் மூன்றாவதாகப் **பகவான் ரமண மகரிஷி** தேர்வு செய்த பாடலில் சில முக்கியமான செய்திகளை **சங்கரர்** பதிவு செய்திருக்கிறார்

நம்முடைய தொடக்க கால பக்தி வழிபாட்டில், நாம் விரும்பும் பல உலகியல் வேண்டுதல்களை அவ்வவற்றிற்கு ஏற்ற தெய்வங்கள் என நாமே நினைப்பவையிடமோ அல்லது பிறர் சொல்வதைக் கேட்டு அத்தெய்வங்களிடமோ முன் வைக்கிறோம். வேண்டுதல்கள் நிறைவேறவும் செய்யலாம். அதனால் நம் பக்தி வழிபாட்டில் ஆர்வம் அதிகரிக்கும். வேண்டுதல்களும் நாளடைவில் உலகியல் சார்ந்தவையிலிருந்து படிப்படியாக விலகி ஆன்மிகம் சார்ந்தவையாக மாறலாம்.

சில வேண்டுதல்கள் நாம் வணங்கி வந்த தெய்வங்களுக்கு அப்பாற்பட்டவையாக இருக்கலாம். அதனால் அவ்வேண்டுதல்கள் நிறைவேறாமல் போகலாம். ஆனாலும் அத்தெய்வங்களிடமிருந்து விலகி வேறு தெய்வத்தை நாடினால் அத்தெய்வங்களின் கோபத்திற்கு ஆளாகி அதனால் நேரும் விளைவுகள் விரும்பத் தக்கனவாக இல்லாது போனால் என்ன செய்வது என்ற அச்சத்தால் அத் தெய்வங்களை விட்டு விலகாமலும் இருக்க நேரிடலாம்.

மற்றும் அத்தெய்வங்கள் தரும் தீர்வுகள் **தற்காலிக மகிழ்ச்சியைத்** தருவனவாகவே இருக்கும். அவை **நிரந்தரமான ஆனந்தத்தைத்** தருவனவாக இருக்காது.

அவை பொதுவாக, வருமானத்திற்கு வழிவகுக்கும் கல்வி, சுவையான உணவு, கழு பிணியிலாத உடல் நலம், சோர்வு தராத வாகனம், தேவைக்கேற்ற பொருள், வசதியான வீடு, இனிமையான மணவாழ்க்கை, நல்ல பிள்ளைகள் போன்ற புறம்சார்ந்த நலங்களையே தரும்.

அகம் சார்ந்த **ஐம்புலனடக்கம், ஆணவம் - கன்மம் - மாயை என்ற மும்மல நீக்கம், 'நான்' - 'எனது' என்ற அகங்கார உதிர்ப்பு, மன ஒழுக்கம்** முதலியன அடங்கிய **முக்திப்** பாதையில், நம்மை அத்தெய்வங்கள் ஆற்றுப்படுத்தா. ஏன் தெரியுமா? அவையும் நம்மைப் போல பிறப்பு - இறப்புச் சங்கிலிக்கு உட்பட்டவையே!

ஆனால் நமது நிறைவான குறிக்கோளோ பிறப்பு - இறப்புச் சங்கிலியிலிருந்து விடுதலை பெற்று முக்தியடைவது! எனவே, நமது குறிக்கோளை **நாம் வைக்க வேண்டிய இடம் வேறு!** ஒன்றேயான முழுமுதல் தெய்வமான சிவனின் தாமரைத் திருவடிகளே அந்த இடம்!

இதைத்தான் பாடலின் முதற் பகுதியில் **சங்கரர்** பாடியிருக்கிறார். அவர் மட்டுமல்ல, ஏனைய பல அருளாளர்களும் இதையே அறிவுறுத்தியிருக்கிறார்கள்!

சிவன், தானே ஆக்கல், அழித்தல், காத்தல் ஆகிய முச்செயல்களையும் செய்யும் நிலை **சம்பு பட்சம்** எனப்படும். **சம்** - இன்பம்; **பு** - உண்டாக்குபவன். **சம்பு** என்பது இன்பம் உண்டாக்குபவன் என்ற பொருளில் சிவனுக்கு உரிய பெயர்களில் ஒன்றாகும். இதுவே **சங்கரன்** எனவும் வழங்கும். இன்பஞ் செய்தலின் சங்கரன்! **சம்** - இன்பம், **கரன்** - செய்பவன்

சிவமாகிய இறைவன் பக்குவப்பட்ட சில ஆன்மாக்களிடம் அருள்பாலித்து இம்முத்தொழில்களையும் தன் ஆணை வழியே நடத்தும் அதிகாரத்தை அவர்களுக்கு அளிக்கின்றான். இவ்வாறு இறைவனால் **அதிட்டிக்கப்பெற்ற** ஆன்மாக்கள் **அணுபட்சம்** எனப்படுவர். அணு என்பது ஆன்மாவைக் குறிக்கும். தேவர்களாக ஆக்கப் பெற்று இறைவன் ஆணை வழி நடக்கும் ஆன்மாக்களாகிய இவர்களுக்கு **பிரமன், திருமால், உருத்திரன்** என்ற பெயர்களும் உண்டு.

அணுபட்சத்தில் உள்ள ஆன்மாக்களாகிய பிரமனும், திருமாலும் பிற தேவர்களும் பிறப்பு - இறப்புச் சங்கிலிக்கு உட்பட்டு உழல்பவர் என்றும் சிவன் ஒருவனே பிறப்பு - இறப்பு இல்லாத, முடிவே இல்லாத முழுமுதல் என்றும் திருமுறைகள் கூறும். இதோ அதற்கு ஒரு சான்று!

''ஈறிலாதவன் ஈசன் ஒருவனே!''என்பதைத் தீர்க்கமாகச் சொல்லும் **அப்பர்** என்ற **திருநாவுக்கரசர்** அருளிச் செய்த இரு திருப்பாடல்கள்

*நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்!*
*ஆறு கோடி நாராயணர் அங்ஙனே!*
*ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்!*
*ஈறி லாதவன் ஈசன் ஒருவனே!*

*– அ.தே. – 5.100.3*

*வாது செய்து மயங்கும் மனத்தனாய்*
*ஏது சொல்லுவீர் ஆகிலும் ஏழைகாள்!*
*யாதோர் தேவர் எனப்படு வார்க்கெல்லாம்*
*மாதேவன் அல்லால் தேவர் மற்றில்லையே!*

*– அ.தே. 5.100.04*

மேலும் விளக்கம் தரும் அவரது மற்றொரு பாடல்!

*நாமார்க்குங் குடியல்லோம்; நமனை அஞ்சோம்;*
*நரகத்தில் இடர்ப்படோம்; நடலை அல்லோம்;*

*ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோம் அல்லோம்;*
*இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை;*
*தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான*
*சங்கரன் நற் சங்கவெண் குழையோர் காதிற்*
*கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்*
*கொய்ம்மலர்ச்சே வடி இணையே குறுகி னோமே*

[தான் யாருக்கும் அடிமையாகாத தன்மையனும், நல்ல வெண்சங்கால் ஆன குழையை ஒரு காதில் உடைய கோமானும் ஆகிய சங்கரனுக்கே நாம் என்றும் மீளாத அடிமையாய், அப்பொழுது அலர்ந்த மலர் போன்ற அவன் திருச்சேவடிகளையே அடைக்கலமாக அடைந்துள்ளோம் என்பதால், நாம் வேறு யாருக்கும் அடிமை இல்லை. எமனுக்கும் அஞ்ச மாட்டோம். நரகத்தில் புகுந்து துன்பப்படோம். பொய்யும் இல்லோம். என்றும் இன்பமுடன் இருப்போம். "பிணியாவது எது?" என்றுகூட அறியோம். வேறு யாரையும் பணிய மாட்டோம். எந்நாளும் எமக்குள்ளது இன்பமே அன்றித் துன்பமில்லை!]

இதோ மற்றொன்று! திருமூலரின் திருமந்திரத்திலிருந்து!

*ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்;*
*நன்றே நினைமின்; நமனில்லை; நாணாமே*
*சென்றே புகும் கதியில்லை; நும் சித்தத்து*
*நின்றே நிலைபெற நீர் நினைந்து உய்ம்மினே*

*– தி.மூ. தி.ம. 2104*

[எல்லோரும் ஒரே குலம். இறைவனும் ஒருவனேதான். நமக்கும் மற்றவர்களுக்கும் நல்லதையே நினைக்க வேண்டும். அவ்வாறு எல்லோருக்கும் எப்போதும் நல்லதையே நினைத்து வாழ்ந்தால் இறப்பைப் பற்றிய பயம் இல்லாது போகும். வெட்கப்படாமல் இதை ஏற்றுக் கொண்டு, நல்லதை நினைப்பதைத் தவிர வேறு கதியில்லை. உங்கள் சிந்தனையில் எப்போதும் நல்லதையே வைத்து நீங்கள் உய்யும் வழியை அடையுங்கள்]

அடுத்து மாணிக்கவாசகர் தம் திருவாசகத்தில் அருளிய ஒரு திருப்பாடல் :

*கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு குடி கெடினும்!*
*நள்ளேன் நினது அடியாரொடு அல்லால்! நரகம்புகினும்*
*எள்ளேன் திரு அருளாலே இருக்கப்பெறின்! இறைவா,*
*உள்ளேன் பிறதெய்வம் உன்னை அல்லாது, எங்கள் உத்தமனே!*

[ஏற்றம் மிக்க எங்கள் முதல்வா, உனது திருவருளுக்குப் பாத்திரமானால் இந்திரன், மால், அயன் முதலியோரது பதவிகளும் எனக்கு ஒரு பொருட்டன்று. எனது வாழ்க்கைக்கு ஊறு வந்தாலும் உனது அடியார்களோடு அன்றிப் பிறருடன் நட்பு கொள்ள மாட்டேன். நரகம் புக நேரிடினும், அதுவும் உனது திருவருள் என்று கருதி அதை இகழமாட்டேன். **உன்னைத் தவிர்த்து பிற கடவுளரை ஒரு போதும் நினைக்க மாட்டேன்**]

"சரி, **சிவனே** ஒன்றேயான முழுத் தெய்வம் என்று ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் முன் பாடலில் எங்களது முன்வினைப் பயனால் பக்தி வழிப் பயணத்தில் தாமதம் ஏற்படலாம் என்று பார்த்தோமே, அதற்கென்ன தீர்வு?"

உங்கள் கேள்வியில் நியாயம் இருக்கிறது! **சங்கரர்** அதற்கான தீர்வினை இப்பாடலின் இரண்டாம் பகுதியில் தந்திருக்கிறார். இதைச் செவ்வனே புரிந்து கொள்ள ஒரு முன்னுரை தேவை

சிவன் முழுமுதல் தெய்வம்தான். ஆனால் அடியார்களுக்குப் பொதுவாக அவரே நேரடியாக அருள் பாலிப்பதில்லை. அவரது **அருள்** எனும் **சக்தி**யை அவரது இடப்பாகத்தில் என்றுமிருக்கும் **உமை அம்மை**யிடம் பதிய வைத்துள்ளார்.

*அருளது சக்தியாகும் அரன் தனக்கு*
*அருளையின்றித் தெருள் சிவமில்லை!*
*அந்தச் சிவமின்றிச் சக்தியில்லை!*

*– சி.சி.2.44*

என்று மெய்கண்ட சாத்திரங்களில் ஒன்றான சிவஞான சித்தியார் உறுதி செய்கிறது.

*"சுத்தமார் பளிங்கின் பெருமலையுடனே*
*சுடர் மரகதம் அடுத்தாற்போல்*
*அத்தனார் உமையொடு இன்புறுகின்ற*
*ஆலவாயாவதும் இதுவே"*

*– ச. தே. 3.120.07*

என்று **திருஞானசம்பந்தப்** பெருமான் இறைவனின் இன்புறு திருக்கோலத்தைப் பாடியுள்ளார். ஆக சிவபெருமான் இந்தச் **சேர்த்தித் திருக்கோலத்தில்** இருக்கும் பொழுது அத்தனின் சக்தித் திரு உருவாகிய

**உமையம்மை** அடியவரது துயர்களை நீக்குவார். அது **முன் வினையாக** இருந்தாலும், பால் நினைந்தூட்டும் தாயாகிய அவள் அதையும் நீக்கி அருளுவாள்.

அதனால்தான் சங்கரர் வெகு சாமர்த்தியமாக இப்பாடலில்,

**"அமிர்தத் தன்மையும் அழகும் நிறைந்த**
**அம்பிகை உடனாய பரமனை வழிபடுவோர்"**

என்று அன்பு, அழகு இவற்றின் முழுமையும், **சாவா மருந்தாகிய அமிர்தமும்** நிறைந்த அன்னையுடன் கூடிய பரமன் என்கிறார். ஆக, சிவனின் அருட் சக்தி பெற்ற அம்பாளின் **பெருங்கருணையால் முன்னையது, இப்போதையது, இனிவரவிருப்பது ஆகிய வினைகளின் விளைவுகள் அத்தனையும் நீக்கப் பெறும்.** அன்னையின் இக் கருணை மழையை ஒரு படக்காட்சியாகக் காட்டும் அருள் **மணிவாசகரின் திருவெம்பாவைப்** பாடலையும் இங்கு நினைவு படுத்திக் கொள்வோம்.

*முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்*
*என்னத் திகழ்ந்து எம்மை ஆளுடையாள் இட்டிடையின்*
*மின்னிப் பொலிந்து எம்பிராட்டி திருவடிமேல்*
*பொன்னஞ் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்*
*என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்*
*தன்னில் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு*
*முன்னியவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே*
*என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்*

*– மா.வா.தி. – தி.வெ.16*

[இந்தக் கடல்நீரை உட்கொண்டு எழுந்து எம்மையுடை யாளாகிய அம்மையினது திருமேனி போல நிறத்தோடு விளங்கி, எம்மை அடிமையாகவுடையவளது சிற்றிடை போல மின்னி, எம்பிராட்டி திருவடிமேல் அணிந்த பொன்னினால் செய்யப்பட்ட சிலம்பு போல ஒலித்து, அவளது திருப்புருவம் போல வானவில்விட்டு, நம்மை அடிமையாக உடையாளாகிய அவ்வம்மையினின்றும் பிரிதல் இல்லாத எங்கள் தலைவனாகிய இறைவனது அடியார்களுக்கும் பெண்களாகிய நமக்கும், அவள் திருவுளங்கொண்டு முன்னரே சுரக்கின்ற இனிய அருளே போன்று மழையே, நீ பொழிவாயாக]

**திருஞான சம்பந்தரது** திருவண்ணாமலைத் தேவாரத்திலிருந்து ஒரு பாடல். **உமையம்மையாருடன் அர்த்தநாரீஸ்வரராகப் பெருமான்** எழுந்தருளிய திருத்தலம் திருவண்ணாமலை. சிவனார் இப்படிச் சேர்த்தித் திருக்கோலத்தில் இருக்கும் இந்தத் திரு அண்ணாமலையைத் தொழுதாலே அவரது அடியார்தம் வினைகள் அனைத்தும் அறுபட்டு விடும் என்று சம்பந்தர் இத்திருப்பாடலில் உறுதியாகக் கூறுகிறார்.

*உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்*
*பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ*
*மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழவு அதிரும்*
*அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவணம் அறுமே*

*– ச.தே. 1.10.01*

[உண்ணாமுலை என்னும் திருப்பெயருடைய உமையம்மையாரோடு உடனாக எழுந்தருளியவரும், தம் இடப்பாகம் முழுவதும் பெண்ணாகியவருமாகிய சிவபிரானது மலை; அதிலிருந்து அடித்து வரும் அழகிய மணிகள் சுடர்விட மண்ணை நோக்கி வருவனவாகிய அருவிகள் பொருள் புரியாத மழலை ஒலியோடு கூடிய முழவு போல ஒலிக்கும் தலம் திருவண்ணாமலை ஆகும். அதனைத் தொழுவார் வினைகள் தவறாது அறுபட்டு விடும்]

இப்படி அம்மையும் அப்பனும் சேர்ந்திருப்பதைச் **சேர்த்தித் திருக்கோலம்** என்பர். இந்த நிலையில்தான் இறையருள் விரைவிலேயே அடியார்களுக்குக் கிட்டும் என்பதும் நம்பிக்கை.

**ஆதிசங்கரர்** தமது **சௌந்தர்ய லஹரி** என்ற நூலில் இன்னும் ஒருபடி மேலே போய் தனித்திருக்கும் சிவனால் எதுவும் செய்யவே இயலாது என்று பாடியிருக்கிறார்!

*ஹே பவானி!*
*ஸிவ: ஸக்த்யா யுக்தோ யதி பவதி ஸக்த: ப்ரபவிதும்*
*நசேதேவம் தேவோ ந கலு குஸல: ஸ்பந்திது – மபி*

*–ஆ.ச. – சௌ.ல. 1*

[தாயே! சர்வ மங்களங்களுக்கும் உரியவரான சதாசிவனார் சக்தியின் திருவுருவான உன்னோடு சேர்ந்திருக்கும் பொழுதுதான் இப்பிரபஞ்சத்தினை நிர்மாணம் செய்யக்கூடியவர் ஆவார். அவ்வாறு நீ உடனிருக்காவிட்டால் அவரால் சிறிது அளவு அசையக்கூட இயலாதவர் ஆகி விடுவார்!]



## பாடல் 4

# பக்தி எதில் இருக்கிறது? – திறன்மிகு தர்க்கங்களில் இல்லை, திருவடி தியானத்தில் இருக்கிறது

**பகவான் ரமண மகரிஷி** திரட்டியுள்ள முதல் மூன்று பாடல்களில், பக்தி என்றால் என்ன என்பதை நமக்குப் புரிய வைத்து, அதனால் கிட்டும் பயனைச் சொல்லி, அதை யாரிடம் காட்ட வேண்டும் என்று அவரையும் அடையாளப்படுத்தினார். இப்படிப் பக்திக்கான முன்னுரையை நிறைவு செய்த பின் இந்தப் பாடலிலிருந்து பக்தியை **எப்படிச் செயல்படுத்துவது** என்ற பகுதியை நமக்குக் காட்ட இருக்கிறார். முதலில் எப்படிச் செயல்படுத்தக்கூடாது என்பதை ஒரு தக்க உதாரணத்துடன் **சங்கரர்** தமது 6 ஆவது பாடலில் காட்டி இருப்பதை நம் முன் வைத்திருக்கிறார், பகவான்!

*கடோ வா ம்ருத் பிண்டோப்யணூரபி ச*
*தூமோயக்னி ரசல :*
*படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோரசமனம்*
*வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா*
*தர்க்கவசஸா*
*பதாம்போஜம் சம்போர் பஜ பரம ஸௌக்யம்*
*வ்ரஜஸுதீ :*

*– சி. ல. 6*

அறிவார்ந்த பெருமக்களே,
மண்ணா – குடமா, அணுவா – மலையா,
நெருப்பா – புகையா, நூலா – துணியா?
"எது முதலான உண்மைப் பொருள்?"

**என்ற வாதத்தால் வரும் பயன்தான் என்ன?**
**வறண்டு போன தொண்டை தானே மிஞ்சும்!**
**இதை விடுத்து நலம் பல நல்கிடும்**
**ஈசனின் தாமரைத் திருவடிகளைத் தியானித்தால்**
**நிரந்தரமான பேரின்பம் நிச்சயமாகக் கிட்டிடுமே!**

**– ப.ர.ம.தி – பாடல் 4 – சி. ல. 6**

பொதுவாக, அறிவாளிகள் என அழைக்கப் பெறுபவர்கள் "உண்மைப் பொருள் எது என்பதை அறிந்து கொள்ள முயல்கிறோம்!" என்று சொல்லி ஒரு தத்துவ வாதத்தில் தொடங்குவார்கள்.

**இது குடமல்ல, மண்!** மண்ணினால் உருவாக்கப் பெற்ற பொருள்களில் குடமும் ஒன்று, அவ்வளவுதான்!

இது **மலையல்ல, அணு!** பல்லாயிரம் அணுக்களால் ஆனதுதானே தவிர, மலை முதன்மைப் பொருள் அல்ல!

இங்கே தெரிவது **புகையல்ல, நெருப்பு!** நெருப்பிலிருந்து தோன்றுவதுதான் புகை!

இது **சேலையல்ல, நூல்!** நூலால் ஆக்கப்பெறும் பல பொருட்களில் சேலையும் ஒன்றுதானே தவிர, அது முதன்மைப் பொருள் அல்ல!

இந்த வாதம் நிறைவு பெறாமல் தொடர்ந்து கொண்டே போகும். காலமும் ஓடிக் கொண்டே இருக்கும். அநேகமாக, வாதிப்பவர்களின் ஆர்வம், ஆன்மிக உண்மைப் பொருள் எது என்பதைக் காண்பதில் இருப்பதைவிட, தங்கள் வாதத் திறமைகளை, வெல்லாமல் எவரையும் மிரள வைக்கும் வித்தைகளை வெளிச்சம் போட்டுக் காட்டுவதில்தான் இருக்கும்!

இதை அருளாளர் **தாயுமானவர்** ஒரு அழகான பாடலில் படம் பிடித்துக் காட்டியுள்ளார்!

**கல்லாத பேர்களே நல்லவர்கள்!**
**கற்றும் அறி வில்லாத என்**
**கர்மத்தை என்சொல்கேன்? மதியை என் சொல்லுகேன்?**
**கைவல்ய ஞான நீதி**

**நல்லோர் உரைக்கிலோ கர்மம் முக்கியமென்று**
**நாட்டுவேன்; கர்மம் ஒருவன்**
**நாட்டினாலோ பழைய ஞானம் முக்கியம் என்று**
**நவிலுவேன்; வடமொழியிலே**
**வல்லான் ஒருத்தன்வரவும் த்ராவிடத்திலே**
**வந்ததா விவகரிப்பேன்;**
**வல்லதமிழறிஞர் வரின் அங்ஙனே வடமொழியின்**
**வசனங்கள் சிறிதுபுகல்வேன்;**
**வெல்லாமல் எவரையு மருட்டிவிட வகைவந்த**
**வித்தை என் முத்திதருமோ?**
**வேதாந்த சித்தாந்த சம்ரசநன்னிலை பெற்ற**
**வித்தக சித்தர்கணமே!**

– **தாயுமானவர்** – சி.க – 7.10

[த்ராவிடத்திலே - தமிழிலே]

''இத்தகைய விதண்டா வாதங்களின் இறுதி விளைவு - வாதிடுபவர்களின் தொண்டை வறண்டு போவதுதான்!'' என்று நகைச்சுவையோடு கூறுகிறார் **சங்கரர்!**

மெய்ப்பொருள் காணாத வெறும் படிப்பறிவால் பயனேதுமில்லை என்பதையும் **சங்கரரே** தமது மற்றொரு நூலான **பஜ கோவிந்தத்தில்** ஒரு தக்க உதாரணத்துடன் விளக்கியிருக்கிறார்

*துதித்திடுக! துதித்திடுக! துயர்கெடத் துதித்திடுக!*
*மதிகெட்ட மனமே நீ, மகிமை மிகு*
*கோவிந்தனின் தூய திருநாமத்தினைத் துதித்திடுக!*
*பலத்து நீ படிக்கும் பாணிணியின் இலக்கணம்*
*காலன் வருநாளில் உன்னைக் காத்திடாதுகாண்!*

*– ஆ.ச. – ப.கோ – பாடல் 1*

இதோ, **அப்பர்** பெருமானின் ஒரு திருப்பாடல்!

*ஏதும் ஒன்றும் அறிவிலர் ஆயினும்*
*ஓதி அஞ்செழுத்து உள் உணர்வார்கட்குப்*
*பேதமின்றி அவரவர் உள்ளத்தே*
*மாதும் தாமும் மகிழ்வர் மாற்பேறரே*

*– அ.தே. – 5.60.1*

இதோ திருஞானசம்பந்தப் பெருமானின் பொருத்தமான திருப்பாடல் ஒன்று!

*ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்*
*சோதிக்க வேண்டா! சுடர்விட்டுளன் எங்கள் சோதி*
*மாதுக்கம் நீங்கல் உறுவீர், மனம்பற்றி வாழ்மின்!*
*சாதுக்கள் மிக்கீர், இறையே வந்து சார்மின்களே!*

*– ச.தே. 3.54.05*

[இறைவனை அன்பால் வழிபடும் அடியார்களே! அனுமானத்தாலும், பிரமாணத்தாலும், காட்சியாலும் இறைவனை மிகுதியாகச் சோதிக்க வேண்டாம். அவனை நாம் நமது ஊனக்கண் கொண்டு நோக்கும்பொழுது புறத்தே சோதிவடிவமாகவும், அன்போடு கூடி அகத்தால் ஞானக்கண் கொண்டு நோக்க உள்ளொளியாகவும் விளங்குபவன். அவனை விரைவில் வந்து சார்ந்து, மனம் ஒன்றி வழிபட்டு, பெரும் துக்கமான பிறவித் துன்பத்தைப் போக்கிக் கொள்ளுங்கள். இறைவன் அளவைகளால் அறியப்படும் ஆராய்ச்சிக்கு அப்பாற் பட்டவன்!]

நாம் பார்க்கும் இந்த நான்காவது பாடலில் சங்கரர் சொல்வது,

*ஸுதீ! சம்போ: பதாம்போஜம் பஜ*
*தரஸா பரம சௌக்யப : வ்ருஜ*

"நல்ல புத்தியை உடையவனே! ஈசனின் தாமரைத் திருவடிகளைச் சிக்கென பிடித்துக் கொள்! உனக்கு **பரமுக்தி**யே ஐயமின்றிக் கிட்டிடும்!"

மாயப்பிறப்பறுக்கும் அந்த ஈசனின் திருவடி மகிமை பற்றிப் பல அருளாளர்கள் பாடியுள்ளார்கள். அவற்றிலிருந்து **அப்பர்** பெருமான் பாடியுள்ள **திருவதிகை வீரட்டானத்து**ப் பதிகத்திலிருந்து ஒரு பாடல்

*அணியனவுஞ் சேயனவும் அல்லா அடி*
*அடியார்கட்கு ஆரமுதமாய அவ்வடி*
*பணிபவர்க்குப்பாங்காக வல்ல அடி*
*பற்றற்றார் பற்றும் பவள அடி*
*மணியடி பொன்னடி மாண்பாம் அடி*
*மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்ல அடி*

*தணிபாடு தண் கெடில நாடன் அடி*
*தகைசார்வீரட்டத் தலைவன் அடி*

*– அ.தே.6.6.9*

[கெடில நாடனாகிய தகை சார்ந்த வீரட்டேசுவரின் திருவடியானது, அடியவர்கள் அல்லாதவர்களுக்குக்கூட தொலைவு இன்றி அண்மையாக விளங்குவது; அடியவர் பெருமக்களுக்கோ அமுதம் போன்று இனிமை தருவது; பணிந்து ஏத்தும் பக்தர்களுக்குப் பாங்குடன் அருளவல்லது; மணியும் பொன்னும் என விளங்கும் மாண்புடையது; மருந்தாகி நின்று பிறவியாகிய பிணியைத் தீர்த்து இனிப்பிறவாமை எனும் பேற்றைத் தர வல்லது. இத்தகைய பெருமையுடைய திருவடியை வணங்கி மகிழ்க!]

நிறைவாக, நாரத பக்தி சூத்திரத்திலிருந்து இரண்டு ஸ்லோகங்கள்

*வாதோ ந அவலம்ப்ய:*

*–சூ 74*

[(பகவானைப் பற்றிய) வாக்கு வாதத்தினை மேற்கொள்ளலாகாது]

*பாஹூல்ய அவகாசாத் அநியதத்வாத்*

*–சூ 75*

[ஏனென்றால் (ஆத்ம ஞானம்) பலவிதமான வாதங்களுக்கு இடம் தருவது; மேலும் முடிவில்லாதது]

## பாடல் 5

## பக்தி செயும் அடியாருக்கு எதுதான் கிட்டாது?

எது பக்தி எனக் காட்டி, அது தரும் பயனைக் கூறி, பக்திக்கு உரியவரை அடையாளம் காட்டி, அவரிடம் எப்படி பக்தி செலுத்த வேண்டும் என்ற வழியினையும் காட்டினார் **பகவான்**. அடுத்து பக்தி செயும் அடியாருக்கு முக்தி உடனாய அனைத்தும் கிட்டும் என்று சொல்லும் **சங்கரரது 65 ஆவது** பாடலைத் தமது **ஐந்தாவது** பாடலாகப் பகவான் தொகுத்துள்ளார்.

*வக்ஷஸ்தாடன சங்கயா விசலிதோ*
*வைவஸ்வதோ நிர்ஜரா :*
*கோடீரோஜ்வல ரத்னதீபகலிகா நீராஜனம் குர்வதே*
*த்ருஷ்ட்வா முக்திவதூஸ் தனோதி*
*நிப்ருதாச்லேஷம் பவானீபதே*
*யச்சேதஸ் தவ பாதபத்ம பஜனம்*
*தஸ்யேஹ கிம் துர்லபம்*

*சி. ல. பாடல் எண் 65*

**பாசமிகு அன்னை பவானிதம் பதியே!**
**உன் தாமரைத் திருவடிகளை ஒரு நாளும்**
**மறவாது அதில் மனத்தினைப்**
**பதித்துருகும் பக்தனைப் பார்த்தாலே**
**நெஞ்சில் விழும் உதைக்கு அஞ்சி**
**எமனும் கூட ஓடிவிடுகிறான்!**

**தீபமென மின்னும் நவரத்தினங்கள்**
**பதித்த தம் மகுடத்துடன் தேவர்கள்**
**அந்த பக்தனைக் குனிந்து வணங்குவது**

**அவனுக்கு அலங்காரத் தீபாராதனை**
**செய்வது போலல்லவா இருக்கிறது!**
**அது மட்டுமா?**

**முக்தியெனும் மங்கல மங்கை**
**அவனை ஆரத் தழுவிக்கொள்கிறாளே!**

**ஆக, உன் திருவடி மீது தன்**
**உள்ளத்தை நிலையாக வைத்திருக்கும்**
**பக்தனுக்கு எதுதான் கிட்டாது?**

**பாடல் 5 – சி. ல. 65**

ஈசனின் இணையிலாத் திருவடிகளை என்றும் தம் மனத்திலே நிலையாகப் பதித்து, நாளும் மறவாது நினைந்துருகும் அடியார்களுக்குக் கிட்டும் பல பயன்களில் **மூன்றினை** மட்டும் இப்பாடலில் பட்டியலிட்டுக் காட்டுகிறார் **சங்கரர்**

## 1. பயந்தோடும் எமன்

இந்தச் சிவனடியாரைப் பார்த்தாலே **எமன்** பயந்து ஓடி விடுகிறானாம்! ஏன் தெரியுமா? முன்னம் சிவன் திருச்சன்னிதியில் **பஞ்சாட்சரம்** ஓதிக் கொண்டிருந்த **மார்க்கண்டேயப்** பாலகனைத் தம் பாசக் கயிற்றால் கட்டி இழுத்துச் செல்ல வந்த எமனை **ஈசன்** அங்கே எழுந்தருளி, தமது இடக்காலால் அவன் நெஞ்சிலே உதைத்து மாளச் செய்தார்!

இந்நிகழ்வு **திருக்கடவூரில்** நடந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. ஈசனை நாளும் தம் உள்ளத்தில் வைத்து வழிபடும் அடியார்களைக் கண்டதுமே முன்னாளில் நடந்த இந்த நிகழ்வு எமனது நினைவிற்கு வருமாம்! உடனே அவன் அஞ்சி ஓடி விடுவானாம். விளைவு? இத்தகு அடியார்களுக்கு இறப்பே கிடையாது. அதாவது மீண்டும் பிறந்து இறக்கும் நிலை அவர்களுக்கு வராது!

இந்நிகழ்வினைப் பற்றிய **அப்பர்** பெருமானின் **தேவாரத்** திருப்பாடல் ஒன்றினை நினைவு படுத்திக் கொள்வோம்

*பதத்தெழு மந்திரம் அஞ்செழுத்து ஓதிப் பரிவினொடும்*
*இதத்தெழு மாணிதன் இன்னுயிர் உண்ண வெகுண்டு அடர்த்த*

*கதத்தெழு காலனைக் கண்குரு திப்புனல் ஆறு ஒழுக*
*உதைத்தெழு சேவடி யாம்கட வூர் உறை உத்தமனே*
*– தி.ச.தே 4.107.2*

['ஓம்! நமசிவாய' என்ற இதமான ஐந்தெழுத்து மந்திரத்தைப் பக்தி நனி சொட்டச் சொட்ட ஓதிக் கொண்டிருந்த பதினாறு வயதுடைய மார்க்கண்டேயனது இன்னுயிரைக் கவர, கோபத்தோடு வந்து தாக்கிய எமனை அவன் கண்களிலிருந்து இரத்தம் ஆறாகப் பெருகி வழியுமாறு உதைத்த சிவந்த திருவடிகளையுடைய உத்தமர், திருக்கடவூர் அமிர்த கடேஸ்வரப் பெருமான்]

## 2. தேவர்களின் தீபாராதனை

பொலியும் நவரத்தினங்களால் இழைக்கப்பெற்ற தம் மகுடங்களோடு விண்ணுலகத் **தேவர்கள்,** குனிந்து இத்தகு பெருமைமிகு மண்ணுலக **அடியாரை** வணங்கும்பொழுது அவர்களது மகுடங்களில் உள்ள இரத்தினங்களிலிருந்து மின்னும் ஒளித்திரள்கள் அந்த அடியாருக்குத் தேவர்கள் செய்யும் அலங்காரத் தீபாராதனை போல் தோன்றுகிறதாம்!

## 3. முக்தி மங்கை கட்டித் தழுவுதல்

அடியாரது பக்திக்கான பலன்கள் மூன்றில், முதலிரண்டைக் காட்டிலும் மூன்றாவதுதான் முழுமையான, நிறைவான பலன்! மானுட அடியாரது குறிக்கோளான **முக்தி**யே அவருக்குக் கிட்டி விடுகிறதாம். இதைச் **சங்கரர்** இந்த **ஆனந்த லஹரி**க்கே உரித்தான அழகிய உருவகக் காட்சியாகக் காட்டுகிறார். முக்தியை ஒரு அழகுமிகு மங்கல மங்கையாக உருவகித்து, அவளே வந்து இந்த **அடியாரை ஆரத் தழுவிக்** கொள்வதாகச் சொல்கிறார்!

### பாடலில் நினைவிற் கொள்ள வேண்டிய முக்கியச் சொற்றொடர்

தமது பாடலை ஒரு நயமிக்க வரியால் நிறைவு செய்து, தாம் சொல்ல வந்த கருத்தினை அடிக்கோடிட்டுக் காட்டுகிறார் **சங்கரர்**

*தஸ்ய இஹ கிம் துர்லபம்*

[அந்த அடியாருக்கு இவ்வுலகத்தில் எதுதான் கிட்டாது? அதாவது எல்லாமே கிடைக்கும்!]



## பாடல் 6

# ஒருவன் எடுத்திருக்கும் பிறவி பக்திக்கு ஒரு தடையில்லை

இந்த பக்தி வழிமூலம் நாம் முக்தி பெறப் பொதுவாகச் சில தடைகள் இருக்கின்றன என மக்கள் எண்ணுகின்றனர். **பகவான்** திரட்டியுள்ள அடுத்து வரும் நான்கு பாடல்களில் **சங்கரர் நான்கு** முக்கியமாவையாகக் கருதப்பெறும் தடைகளைப் பட்டியலிட்டு **அவற்றால்கூட நாம் முக்தி பெறுவதைத் தடுக்க இயலாது** என்பதை அழுத்தத்துடன் சொல்லி, நம் பக்திப் பயணத்தை மிக்க நம்பிக்கையுடன் தொடருமாறு ஊக்குவிக்கிறார்.

*நரத்வம் தேவத்வம் நக வன ம்ருகத்வம் மசகதா*
*பசுத்வம் கீடத்வம் பவது விஹகத்வாதி ஜனனம்*
*ஸதா த்வத்பாதாப்ஜ ஸ்மரண பரமானந்தலஹரீ*
*விஹாராஸக்தஞ் சேத்த்ருதய மிஹ கிம் தேன வபுஷா*

*– சி.ல. பாடல் எண் 10*

**மனிதராய், தேவராய், மலை காடுகளில் திரியும்**
**விலங்குகளாய், வீட்டுப் பிராணிகளாய்,**
**புல்லாய், பறவையாய், புழுவாய்**
**இப்படி எப்பிறவி தானெடுத்து**
**இப்புவியில் பிறந்தால் என்ன?**
**அதன் உள்ளம் மட்டும்**
**உன் தாமரைத் திருவடிகளில்**
**எப்பொழுதும் ஆழ்ந்திருந்தால் அதிலிருந்து**
**அலை அலையாய்ப் பொங்கி வரும்**
**ஆனந்த வெள்ளத்தில் அது அமிழ்ந்திருக்கலாமே!**

பாடல் 6 – சி. ல. 10

நம் முன்வினைப் பயனால் நமக்கு இப்போது கிட்டியிருக்கும் பிறவி, எதுவாக இருந்தாலும் அது ஒரு தடையில்லை என்று முதலில் சொல்லி நம்மைத் திடப்படுத்துகிறார்.

மனிதர், தேவர், மலை காடுகளில் திரியும் விலங்கு, வீட்டுப் பிராணி, மற்றும் தாவரம், பறவை, புழு - இவற்றில் இப்போது நமக்கு எந்தப் பிறவி வாய்த்தாலும் பக்தி செய்யத் தடையேதும் இல்லை.

ஆனால் ஒரு நிபந்தனை!

எடுத்த பிறவி எதுவாக இருந்தாலும் **இறைவனின் திருவடித் தாமரைகளை எப்போதும் நம் உள்ளத்தில் நிரந்தரமாக வைத்து,** தினமும் தியானமோ, திருநாம ஜபமோ, பாராயணமோ, நேராகவோ, மானசீகமாகவோ, அபிஷேக அர்ச்சனைகளோ ஏதாவது ஒன்றை நமக்குத் தெரிந்த அளவில் செய்து இறைவனிடம் நமக்குள்ள பக்தியைக் காட்டி வழிபாடு செய்து வந்தாலே போதும்! இந்தத் தினசரி வழிபாட்டில் **நம் உள்ளம் சலனமில்லாது அந்தத் திருவடிகளில் பூரணமாகத் திளைத்திருக்குமானால்** அதிலிருந்து **ஆனந்தம்** அலை அலையாக எழுந்து வெள்ளமாக ஓடி வரும். எனவே "இப்போது வாய்த்த இந்தப் பிறவி எதுவாக இருந்தால் என்ன?" என்று கேட்டு, "அதைக் கொண்டே நாம் முக்தி பெறலாம்!" என்று நமக்கு உறுதி அளிக்கிறார் சங்கரர்.

*சதா த்வத்பாதப்ஜ ஸ்மரண பரமானந்த லஹரி*
*விஹாரஸக்தஞ்சேத் ஹ்ருதயம் தேன வபுஷா கிம்?*

[எப்பொழுதும் தேவரீரது தாமரை மலரனைய திருவடிகளை நினைத்ததாலாகிற மிகுந்த இன்பத்தின் பிரவாகத்தில் விளையாடுவதில் ஆவலுடையதாக என் இதயம் இருக்குமானால் அந்த சரீரத்தினால் என்ன கெடுதி உண்டாகும்? (எதுவும் உண்டாகாது)]

## முசுகுந்தச் சக்கரவர்த்தி

வில்வமரத்தின் மேலிருந்த ஒரு **குரங்கு** அனிச்சையாக வில்வ இலைகளைப் பிடுங்கிக் கீழே போட்டுக் கொண்டிருந்தது. அந்த இலைகள் மரத்தின் அடியிலிருந்த **சிவலிங்கத்தின்** சிரசின் மேல் விழுந்தன. அன்று **மகா சிவராத்திரி!** இதையே வில்வ அர்ச்சனையாகக் கொண்டு அந்தக் **குரங்கிற்கு** அடுத்த பிறவியில் **முசுகுந்தச் சக்கரவர்த்தி**யாகப் பிறக்கும் பேறு அளித்தார் சிவபெருமான். **முசு** என்றால் **குரங்கு** என்று பொருள்.

இந்த முசுகுந்தச் சக்கரவர்த்தி இந்திரனிடமிருந்து பெற்ற **ஏழு தியாகராஜ மூர்த்தி**களையும் - திருவாரூர், திருநள்ளாறு, திருநாகைக்காரோணம், திருமறைக்காடு, திருவாய்மூர், திருக்காறாயில், திருக்கோளிலி ஆகிய ஏழு தலங்களில் ஸ்தாபித்தார். அவைதான் இன்று **சப்தவிடங்கத் தலங்கள்** என்று விளங்குபவை.

## கஜேந்திர மோட்சம்

பெருமாளை தினமும் வணங்கி வந்த **யானை** ஒன்று வழக்கம் போல் **பெருமாளுக்குச்** சாத்தத் தாமரை மலரை எடுப்பதற்காகத் தடாகத்திற்குள் காலை வைத்தது. ஆனால் அன்று முன்வினை காரணமாக, தடாகத்திலிருந்த **முதலை** யானையின் காலைக் கவ்விக் கொண்டது. யானை தன் காலைத் தானே திருப்பி இழுத்துக் கொள்வதற்கு ஆயிரம் வருடங்கள் போராடியது. இயலவில்லை!

பின்னர், **"தன்னால் இனி முடியாது!"** என்ற எண்ணம் தோன்றியதும் **பெருமாளிடம் பூரண சரணாகதி** அடைவதே உசிதம் என்ற முடிவிற்கு வந்த யானை, **"ஆதி மூலமே!"** என அலறியது. உடனே சங்கு சக்கரதாரியாக பெருமாள் கருடன்மேல் பறந்து வந்து யானையைக் காப்பாற்றி அதற்கு **மோட்சமும்** அருளினார். இது **வைணவத்தில் கஜேந்திர மோட்சம்** என்று பெரிதும் பேசப் பெறும் நிகழ்வு.

*தொட்ட படை எட்டும் தோலாத வென்றியான்*
*அட்டபுயகரத்தான் அஞ்ஞான்று குட்டத்துக்*
*கோள்முதலை துஞ்ச, குறித்து எறிந்த சக்கரத்தான்*
*தாள்முதலே நங்கட்டுச் சார்வு*

*—நா.தி.பி. – பே.ஆ. – 2380*

## ஜடாயு மோட்சம்

***சீதையை* இராவணன்** தூக்கிச் செல்லும் பொழுது இடைமறித்து அவனோடு போர் புரிந்து, தன் இறக்கைகளை இழந்து சாவின் தறுவாயில் கிடந்தது **ஜடாயு** என்ற **பறவை**. சீதையைத் தேடிக் கொண்டு வந்த **இராமர்** ஜடாயுவின் இந்நிலை கண்டதும் அதைத் தூக்கித் தன் மடியில் கிடத்திக் கொண்டார். சீதை இராவணனால் தூக்கிச் செல்லப்படுவதை இராமனுக்கு உணர்த்தியதும் ஜடாயுவின் உயிர் பிரிந்தது. தன் தகப்பனார்

தசரதனுக்குத் தான் செய்ய இயலாது போன ஈமக் கிரியைகளைத் தன் தகப்பனார் ஸ்தானத்திலுள்ள ஜடாயுவிற்கு இராமனே செய்து **மோட்சமும்** நல்கினார் என்று படித்திருக்கிறோம்.

*தன் மருவு வைதேகி பிரியலுற்றுத்*
*தளர்வெய்திச் சடாயுவை வைகுந்தத்தேற்றி*
*– குலசேகராழ்வார் பாசுரம் 746*

இந்நிகழ்வு நடந்தது வைணவத்தில். **திருப்புட்குழி** திவ்ய தேசம் என்று சிலரும் **திருப்புள்ளம் பூதங்குடி** திவ்ய தேசம் என்று மற்றும் சிலரும் சொல்கிறார்கள்.

**இராமன்** ஜடாயுவிற்கு ஈமக்கிரியைகள் செய்யும் பொழுது **அன்னை சீதை** உடனிருக்க இல்லையாதலால் அந்த இடத்தில் **அன்னை பூமாதேவி** நின்று கிரியைகள் முறைப்படி நடக்கச் செய்தாராம். அதனால் திருப்புட்குழியில் அன்னை பூமாதேவியின் அம்சமான ஆண்டாள் நாச்சியாரின் சன்னிதியும் திருத்தாயாரின் சன்னிதியும் **இடம் மாறி** இருக்கின்றன.

ஆனால் சைவத்தில், இது **திருப்புள்ளிருக்குவேளூர்** எனப்பெறும் இன்றைய **வைத்தீஸ்வரன் கோவிலில்** நிகழ்ந்தது என்று சொல்கிறார்கள். இந்தத் திருக்கோவிலுக்குள் **ஜடாயு மோட்ச குண்டம்** ஒன்றும் இருக்கிறது. **புள்** - பறவை, **இருக்கு** - வேதம், **வேள்** - முத்துக்குமார சுவாமி என்ற முருகன், **ஊர்** - சூரியன், ஆகிய நால்வரும் வழிபாடு செய்த தலம் என்பதால் இத்தலம் திருப்புள்ளிருக்கு வேளூர் என்ற திருப்பெயரினைப் பெற்றது என்பர்.

**சிலந்தி, யானை - இரண்டிற்கும் நற்கதி**

**திருச்சி**க்கு அருகில் காவேரிக் கரையில் கூரையில்லாது ஒரு **சிவலிங்கம்** இருந்தது. வெய்யில், மழை, மரச் சருகுகள் சிவலிங்கத்தின் மேல் விழாமலிருக்க ஒரு **சிலந்தி** தன் வாயிலிருந்து வரும் திரவத்தினால் சிவலிங்கத்திற்கு மேலே ஒரு வலை பின்னிக் காத்து வழிபாடு செய்து கொண்டிருந்தது.

அதே சிவலிங்கத்தை ஒரு **யானை**யும் தினமும் துதிக்கையில் நீரும் பூவும் கொண்டு வந்து வழிபட்டது. சிலந்தி தன் வாய்த் திரவத்தினால்

பின்னிய வலையை அனுசிதம் எனக் கருதிய யானை தினமும் அதை நீக்கிவிட்டுத் தன் வழிபாட்டைச் செய்யும். இப்படியே சில நாட்கள் நடந்தன. இதைத் தடுக்க எண்ணிய சிலந்தி யானையின் துதிக்கைக்குள் நுழைந்தது. சிலந்தியும் யானையும் போராடிக் கடைசியில் இரண்டுமே மடிந்தன.

இந்த இரண்டு பேர்களது சிவபக்தியைக் கண்டு மகிழ்ந்த சிவன் **யானையைத் தன் சிவகணங்களுக்குத் தலைவனாக்கினார்.**

**சிலந்தியை** அடுத்த பிறவியில் **கோச்செங்கட் சோழனாகப்** பிறக்கச் செய்தார். தனது பூர்வ ஜன்ம வாசனையால், **யானை நுழைய முடியாத குறுகலான வாயில்கள்** கொண்ட 70 திருக்கோவில்களைக் கோச் செங்கட் சோழன் கட்டியதாக வரலாறு. அந்த மாடக் கோவில்களில் ஒன்றுதான் இன்றைய **திருவானைக்கா ஜம்புகேஸ்வரர் திருக்கோவிலாகும்.**

இந்நிகழ்வினைப் பற்றி அப்பர் சுவாமிகள் தமது **திருக்குறுக்கைத்** தேவாரத்தில் பாடியுள்ளார்!

*சிலந்தியும் ஆனைக் காவில் திருநிழற் பந்தர் செய்து*
*உலந்து அவண் இறந்த போதே கோச்செங்க ணானு மாகக்*
*கலந்தநீர்க் காவிரி சூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்*
*குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே*

*–அ. தி.தே. 4.49.04*

## எலியும் மகாபலி மன்னனும்

**வேதங்கள் சிவபெருமானை** வழிபட்ட திருத்தலம் **வேதாரணியம்** என்ற **திருமறைக்காடு.** அத் திருத்தலத்துக் கோயிலில் ஒரு விளக்கு அணையும் நிலையில் இருந்தது. அப்போது ஒரு **எலி** அங்கு வந்தது. விளக்கில் இருந்த எண்ணெய் எலியைக் கவர்ந்தது. அதைக் குடிக்கும் எண்ணத்துடன் விளக்கில் தனது மூக்கை நுழைத்தது. அதனால், அணையும் தறுவாயில் இருந்த விளக்கின் திரி தூண்டப் பெற்று பிரகாசமாக எரியத் தொடங்கியது. எலி எண்ணெய் பருகவே வந்தது. ஆனாலும் **ஈசன்** தனது தனிப்பெருங்கருணையினால், தனது திருக்கோயில் தீபத்தை எலி தூண்டிப் பிரகாசமாக எரியச் செய்ததாகக் கருதினான். அந்த எலியை அடுத்த பிறவியில் மூவுலகையும் ஆண்ட **மகாபலி** மன்னனாகப் பிறக்கச் செய்தான்.

இந் நிகழ்வினைக் கூறும் **அப்பர்** சுவாமிகளின் **தேவாரத்** திருப்பாடல் ஒன்று!

*“நிறை மறைக்காடு தன்னில் நீண்டுஎரி தீபம் தன்னைக்*
*கறைநிறத்து எலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட*
*நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவான் உலகம் எல்லாம்*
*குறைவறக் கொடுப்பர்போலும் குறுக்கைவீரட்டனாரே”*

*– அ.தே 4.49.9*

இவ்வாறு **பலதரப்பட்ட பிறவிகளுக்கும் இறைவன் அருள்பாலித்து முக்தியும் வழங்கி** உள்ளார். இதையொட்டியே **சங்கரரும்**, “நமக்கு எந்தப் பிறவி கிடைத்தாலும் பரவாயில்லை! முக்தி பெற, நம் உள்ளத்தில் இறைவனின் சிந்தனையோடு என்றும் நீங்காத பக்தி மட்டும் இருந்தால் போதும்!” என்று நம்மை உணர வைக்கிறார்.

இறைவனின் இத் திருக்குணத்தினைக் கூறும் **சம்பந்தரின்** தேவாரத் திருப்பாடல் ஒன்றினை இங்கு நினைவு கூர்தல் பொருத்தம்

*எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு*
*இங்கேயென்று அருள்புரியும் எம்பெருமான் எருதேறிக்*
*கொங்கேயு மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையுஞ்*
*சங்கேயொத்த ஒளிர்மேனிச் சங்கரன்தன் தன்மைகளே!*

*– ச.தே. 2.40.6*

இவ்விளக்க உரையின் நிறைவாக ஒரு செய்தி! நமது ஜாதகத்தைக் கணித்து எழுதும் பொழுது, ஜோதிடர் முதலில் எழுதும் மங்கள ஸ்லோகம்:

*ஜனனி ஜன்ம சௌக்யானாம்*
*பதவி பூர்வ புண்ணியானாம்*
*ஜன்ம பத்ரிகா லிக்யதே!*

[எடுத்துள்ள இந்த மானுடப் பிறவியில் சுகமாக வாழ்ந்திட வேண்டும்! இந்த அரிய பிறவி முற்பிறவியில் செய்த புண்ணியத்தின் பலனாய்க் கிடைத்துள்ளது. (அந்தப் பிறவி புழுவாகவோ, பூச்சியாகவோ, பறவையாகவோ, விலங்காகவோ மற்று எதுவாக இருந்திருந்தாலும்) அப்பிறவியில் செய்த புண்ணிய, பாவ பலன்களின் அடிப்படையிலேயே இப்பிறவிக்கு இந்த ஜாதகம் குறிக்கப் பெறுகிறது]

**பாடலில் நினைவிற் கொள்ள வேண்டிய முக்கியச் சொற்றொடர்**

**பகவான் ரமணர்** தெரிவு செய்துள்ள இப்பாடலின் முக்கியக் கருத்து. பக்திக்கு ஒருவன் எடுத்துள்ள பிறவியால் தடையேதுமில்லை. இதைச் சொல்லும் மூலப் பாடலின் முக்கியச் சொற்றொடர்: ***"கிம் தேன வபுஷா?"*** இத்தொடரின் சாரம்: கிடைத்தது எந்தப் பிறவியானாலும் பக்திக்கு அதனால் என்ன தடை? (தடை ஒன்றும் இல்லை!)



## பாடல் 7

# பக்திக்குத் தவம் தேவையல்ல – அந்தக்கரண அர்ப்பணிப்பே அவசியம்!

முன் பாடலில் நமது பூர்வ ஜன்ம பாவ புண்ணிய பலன்களினால்தான் நமக்கு இந்தப் பிறவி கிட்டியிருக்கிறது என்றும் ஆனால் அது எந்தப் பிறவியாக இருந்தாலும் பக்தி செய்வதற்குத் தடையேதும் இல்லை என்றும் பார்த்தோம். **பகவான் ரமணர்** தெரிவு செய்துள்ள அடுத்த **சிவானந்தலஹரியின்** 12 ஆவது பாடலில், இப்படிப் பக்தி செய்வதற்கு "எது வேண்டாம்? எது வேண்டும்?" என்று திட்ட வட்டமாகச் சொல்லப் பெற்றிருக்கிறது.

*குஹாயாம் கேஹே வா பஹிரபி*
*வனே வாத்ரிசிகரே*
*ஜலே வா வஹ்நௌ வா வஸது*
*வஸதே: கிம்வத பலம்*
*ஸதா யஸ்யைவாந்த: கரண மபி சம்போ தவ பதே*
*ஸ்திதஞ்சேத் யோகோஸௌ*
*ஸ ச பரமயோகீ ஸ ச ஸுகீ*

*சி. ல. பாடல் எண் 12*

**குகையிலோ, வீட்டிலோ, வெட்ட வெளியிலோ,**
**காட்டிலோ,**
**மலை உச்சியிலோ, ஆற்று நீரின் ஆழத்திலோ,**
**எரியும் நெருப்பிலோ தவ வாசம் செய்தாலும்**
**அவன் யோகி ஆகிவிட மாட்டான்!**
**அவனது அந்தக்கரணங்கள் உனது**
**திருவடியில்**

**நிலை கொள்ள வேண்டும்; அதுவே யோக நிலை!**
**அவனே ஒரு பரமயோகி!**
**அவனே இன்பத்தில் திளைத்திருப்பவன்!**

பாடல் 7 – சி. ல. 12

இருண்ட மலைக்குகையிலோ, காட்டிலோ, வீட்டிலோ, வெட்ட வெளியிலோ, மலையின் உச்சியிலோ, ஓடும் ஆற்றின் ஆழத்திலோ, எரியும் நெருப்பின் மேல் நின்றோ, இருந்தோ, வசித்தோ தவம் செய்தால் மட்டும் ஒருவன் பக்தியில் சிறந்த யோகி ஆகி விட மாட்டான்!

இவையனைத்தும் புறக்கரணங்கள் சார்ந்தவை. அவனுடைய **அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், "நான்", "எனது" என்ற அகங்காரம்** ஆகியவையும் ஈசனிடம் அர்ப்பணிக்கப் பெற்று அவனது திருவடித் தாமரைகளில் ஒன்றி நிலை கொள்ள வேண்டும். இப்படித் தம் உள்ளத்தை இறைவனின் திருவடி மலர்களில் நிலை பெறச் செய்பவரே பரம யோகி ஆவார்! அவர் என்றும் இந்த இன்பத்தில் திளைத்திருப்பார்.

ஆனால் சங்கரர், பக்தன் தம் அந்தக்கரணங்களை ஈசனிடம் அர்ப்பணிக்காது, **அவன் திருவடி மலர்களில் தம் உள்ளத்தை ஏகாக்ர சிந்தையோடு நிலை நிறுத்தாது** முன் சொன்ன இடங்களில் தன்னைத் துன்புறுத்திக் கொண்டு ஜபம், தவம், தியானம், தாரணை, பிரார்த்தனை, உபாசனை முதலியன எத்தனை ஆண்டுகள் செய்தாலும் **பலன் ஏதும் இல்லை** என்பதையும் தெளிவாக்கி இருக்கிறார்.

நாட்டில் இத்தகையோரே பெருகி உள்ளார்கள் என்பதால் பல அருளாளர்கள் இவர்களது நிலையைக் கடிந்து நாம் அவர்களைப் பின்பற்றாது இருக்க எச்சரித்துள்ளார்கள். அவற்றுள் சில!

**திருநாவுக்கரசரது ஐந்தாம் திருமுறைத் தேவாரத்திலிருந்து** சில பாடல்கள்:

*கங்கை ஆடிலென் காவிரி ஆடிலென்*
*கொங்கு தண்கும ரித்துறை ஆடிலென்*
*ஓங்கு மாகடல் ஓதநீராடில் என்*
*எங்கும் ஈசன் எனாதவர்க்கு இல்லையே*

*–தி.தே. 5.99.02*

*நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்*
*குன்றம் ஏறி யிருந்து தவஞ் செய்யிலென்*
*சென்று நீரிற் குளித்துத் திரியிலென்*
*என்றும் ஈசனென் பார்க்கு அன்றி இல்லையே*

*–தி.தே 5.99.08*

*கோடித் தீர்த்தங் கலந்து குளித்து அவை*
*ஆடினாலும் அரனுக்கு அன் பில்லையேல்*
*ஓடும் நீரினை ஓட்டைக் குடத்தட்டி*
*மூடி வைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே*

*–தி.தே. 5.99.09*

இவையனைத்தும் செய்தாலும் சிவனைத் தன் உள்ளத்தில் அன்போடு நிலை பெறச் செய்யாதவர்களின் நிலை, **"ஆற்று நீரினை மொண்டு ஓட்டைக் குடத்தில் அடைத்து மூடி வைத்ததை ஒக்கும்!"** என்று கூறுகிறார் **திருநாவுக்கரசர்.**

அடுத்து, பத்தாம் திருமுறையான திருமூலரது திருமந்திரத்திலிருந்து இரண்டு திருப்பாடல்கள்:

*ஓதம் ஒலிக்கும் உலகை வலம் வந்து*
*பாதங்கள் நோவ நடந்தும் பலனில்லை*
*காதலில் அண்ணலைக் காண இனி அவர்*
*நாதன் இருந்த நகர் அறிவோரே*

*– தி.மூ. – தி.ம. 707*

[அலை ஒலிக்கும் கடல் சூழ்ந்த நில உலகம் முழுவதையும் கால் வலிக்க நடந்தாலும் கடவுளைக் காண இயலாது. இனி, அவர் இறைவன் இருக்குமிடத்தை அறிந்து, அங்கு செல்வார்களாக. பக்தியால் தனது உள்ளத்தின் உள்ளேயே இருக்கிற அவனை எங்கும் அலையாமல் பக்தியால் அங்கேயே காண இயலும் என்பது கருத்து]

*இத்தவம் அத்தவம் என்றிரு பேர்இடும்*
*பித்தரைக் காணின் நகும்எங்கள் பேர்நந்தி*
*எத்தவ மாகில் என்! எங்குப் பிறக்கில் என்!*
*ஒத்துணர் வார்க்கு ஒல்லை ஊர்புக லாமே*

*– தி.மூ. – தி.ம. 1568*

[இத்தவம், அத்தவம் என்று தவங்கள் பல இருப்பன போலச் சுட்டிப் பேசும் பித்தர்களைக் காணும்போதெல்லாம் எங்கள் பெரும் பெருமானாகிய சிவன் நகைப்பான். ஏனெனில் எந்தச் செயலாய் இருந்தால் என்ன? எங்கே பிறந்தால் என்ன? உள்ளத்தில் கடவுளை உணர்வோடு ஒன்றிக் கலந்து வணங்கி வழிபடுபவர்கள் விரைந்து சிவப் பேறு பெறுவர் என்பதே உண்மை]

இனி, **பன்னிரண்டாம் திருமுறையான சேக்கிழாரின் பெரிய புராணத்திலிருந்து** ஒரு **நாயனாரைப்** பற்றிய குறுஞ்செய்தி.

பிறப்பு - இறப்புச் சங்கிலியில் இருந்து விடுதலை பெற எண்ணிய ஒரு வேளாளப் பெருமகனார் **புத்தமதத்தினைச்** சார்ந்து வழி தேடினார். அவருக்கு அங்கே ஏற்புடைத்தான வழி எதுவும் தெரியவில்லை. மேலும் ஆய்ந்த பொழுது **சிவநெறியே செந்நெறி** என்று தெரிய வந்தது. அதிலிருந்து அவர் தாம் கொண்டிருந்த **சாக்கிய கோலத்தையும் துவர்** ஆடையையும் கூட மாற்றாது தினமும் **சிவலிங்க வழிபாடு** செய்த பின்னர்தான் உணவு உட்கொள்வது என்ற நியமத்தை மேற்கொண்டார்.

தம் முன்னர் ஒரு **சிவலிங்கத்தைக்** கண்டார். அருகே **செங்கற்கள்** சிதறிக் கிடந்தன. அவற்றையே எடுத்து ஒவ்வொன்றாகச் சிவலிங்கத்தின் திருமேனி மீது இட்டு வழிபாடு செய்து வந்தார். உள்ளன்பின் மிகுதியால் சேயொன்று இகழ்வனவே செய்தாலும் தாய் அதனை மகிழ்வோடு ஏற்றுக் கொள்வது போல் சிவனாரும் ஏற்றுக் கொண்டார். அது மட்டுமல்ல, தம் தொண்டரது பேரன்பு கண்டு மகிழ்ந்த கண்ணுதலார் தம் துணைவியாரொடு விண்ணிலே மழவிடை மேல் எழுந்தருளி அந்த பக்தரை ஆட்கொண்டார். அவர்தான் **சாக்கிய நாயனார்**. இதன் உட்கருத்தை விளக்கும் பாடல்:

*எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்*
*மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருளென்றே*
*துன்னியவேடந் தன்னைத் துறவாதே தூயசிவம்*
*தன்னைமிகும் அன்பினால் மறவாமை தலைநிற்பார்*

*–சே.பெ.பு 3646*

அடுத்து, **ஆதி சங்கரரின் பஜ கோவிந்தத்திலிருந்து** ஒரு பாடல்

காவியுடை மொட்டையொடு
கையிலொரு பாத்திரமும்
காட்டுவது என்ன துறவோ!

கண்ணியமும் இல்லை அதில்
புண்ணியமும் இல்லை வெறும்
கட்டைகளின் வேஷ மலவோ!

கோவணமும் நீள்சடையும்
கோஷமிடும் வாய்மொழியும்
கோமுனிவன் ஆக்கி விடுமோ!

கும்பியை நிரப்பவொரு
செம்புசுமப்பார் அவர்க்குக்
கோவிந்தன் காட்சி வருமோ!

நம்பியவன் நன்னெறியும்
நல்வழியும் நல்லுறவும்
நாடுவதில் உண்டு நலமே!

நாத்திகரைக் கூடவொரு
தோத்திரம் படிக்கவைத்த
நாயகனைப் பாடு மனமே!

தமிழ் வடிவம் : கவியரசர் கண்ணதாசன்

மற்றும் **தமிழ் மறையான திருக்குறளிலிருந்து** தொடர்புடைய இரு குறட்பாக்கள்!

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்

–தி கு 280

யான்எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்

– தி கு 346

[வானோர்க்கு உயர்ந்த உலகம் - வீடு பேறு தரும் உலகம்]

## பாடலில் உள்ள முக்கிய சொற்றொடர்

நமது **கால்களால்** மலையேறி, **கைகளால்** பூப்பறித்து, இறைவன் திருமேனிக்கு அபிஷேக, அலங்காரங்கள் செய்தல்; **கண்களால்** அந்த அழகுத் திருமேனியைக் கண்டு மகிழ்தல்; **நாவால்** திருநாம ஜபம் செய்தல்; **காதால்** இறையவரது திருக்கதைகளைக் கேட்டல்; **உடலால்** அமர்ந்து தவம் செய்தல் - இவை அனைத்தும் இறைவழிபாட்டிற்குத் தேவைதான். இந்தப் புறக்கரணங்களுடன் யோகியின் உள்ளத்தில் உள்ள அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அனைத்தும் இறைவன் திருவடிகளில் ஒன்றி நிலை பெறச் செய்ய வேண்டும் என்பதைச் சங்கரர் இந்தப் பாடலில் உள்ள ***அந்தக்கரணம் அபி*** என்ற ஒரு சொற்றொடரால் வலியுறுத்தி இருக்கிறார் இதைச் செய்ய முடிந்த யோகிதான் பேரின்பம் பெறும் பரம யோகி ஆவார் என்கிறார்.

***"அந்தக்கரணம் அபி"*** என்றால் "அந்தக்கரணத்தையும்" என்று பொருள்.



## பாடல் 8

## பக்தி வழிபாட்டிற்குச் சமர்ப்பிக்க அரிய பொருட்கள் இல்லாது ஒரு தடையல்ல – உள்ளத் தாமரை மலர் ஒன்றே போதும்!

பக்திக்குத் தடையானவை என்று நாம் கருதுபவைகளில் ஒன்று - முழு இறை வழிபாட்டின் அம்சங்களான அபிஷேக, அலங்கார, அர்ச்சனை, நைவேத்யம், தூப, தீப ஆராதனை ஆகியவற்றிற்குத் தேவையான **திரவியங்களையும், தீர்த்தங் களையும், மலர்களையும் சேகரிப்பதில் உள்ள சிரமம்.** நம்மை நன்கு புரிந்து கொண்ட **பகவான் ரமணர்** இந்தத் தடையை முற்றிலுமாக நம் மனத்திலிருந்து நீக்கத்தான் **சங்கரரின் சிவானந்த லஹரியில் உள்ள 100 பாடல்களில் 9 ஆவதாக இருக்கும்** இப்பாடலைத் தமது திரட்டில் சேர்த்துள்ளார். ஏனென்றால் சங்கரர் இப்பாடலில் இறைவழிபாட்டில் ஒரு **புரட்சிகரமான கருத்தைப்** பதிய வைத்துள்ளார்.

அரிய வழிபாட்டுப் பொருட்கள் இல்லாததால் தடையேதும் இல்லை என்பதை உணர்த்த, பல அருளாளர்கள் எளிய பொருள்களே போதும் என்பதையும் அவற்றின் எண்ணிக்கையையும் படிப்படியாகக் குறைத்து, நிறைவாக **உள்ளத் தாமரை மலர்** ஒன்றே போதும் என்று சொல்லித் தந்துள்ளார்கள்.

***கபீரே காஸாரே விசதி விஜனே கோரவிபினே***
***விசாலே சைலே ச ப்ரமதி குஸுமார்த்தம்***
***ஜடமதி:***

*ஸமர்ப்யைகம் சேதஸ்ஸரஸிஜ முமாநாத பவதே*
*ஸு்கேனாவஸ்தாதும் ஜன இஹ ந ஜானாதி கிமஹோ*

*சி.ல. பாடல் எண் 09*

**அம்மை உமையின் அன்புக் கணவரே!**
**உம்மைத் தூமலர் தூவித் தொழுதிட**
**ஆழக் குளங்களிலும், அடர்ந்த காடுகளிலும்**
**விரிந்து உயர்ந்த மலைகளிலும்**
**மலர்களைத் தேடி அலைகின்றனரே,**
**இந்த அறிவிலி மாந்தர்!**
**தம் மனமெனும் குளத்திலேயே உள்ள**
**உள்ளமெனும் ஒரு உன்னதத் தாமரைமலரை**
**மட்டும் உனக்குச் சமர்ப்பித்து விட்டு**
**அங்குமிங்கும் அலைந்து திரியாமல் அமைதியாக**
**வீட்டிலேயே இருக்க அவர்களுக்குத் தெரியவில்லையே!**

**பாடல் 8 – சி. ல. 9**

பக்தர்களின் பொதுவான இயலாமை கருதி **பகவான் கிருஷ்ணரே** தமது **கீதையில்** இந்த இறைவழிபாட்டினை எளிமைப்படுத்திக் கூறியுள்ளார்.

*பத்ரம், புஷ்பம், பலம், தோயம், ய:மே பக்த்யா ப்ரயச்சதி*
*தத் அஹம் பக்தி உபஹ்ருதம் அச்னாமி ப்ரயத ஆத்மன :*

*–கீதை 9.26*

[**இலை, பூ, பழம், நீர்** - ஆகிய நான்கில் எதையாயினும் எவன் எனக்குத் தூய மனத்துடன் அளிக்கிறானோ, முயற்சியுடைய அன்னவன் அப்படி அன்புடன் அளித்ததை உண்பேன் யான்!]

பொதுவாக, பக்தர் அல்லாதவர் எப்பொருளைக் கொண்டும் இறைவனின் அருளைப் பெற இயலாது. ஆனால் தூய மனமுடைய பக்தர்கள் படைப்பது எதுவானாலும் அவன் அதை அன்புடன் ஏற்றுக் கொள்கிறான்.

பகவான் கிருஷ்ணரின் மேற்கண்ட கீதை ஸ்லோகத்தின் பட்டியலில் உள்ள பொருட்கள் அனைத்தும் இயற்கை தருபவை. விலை கொடுத்து வாங்க வேண்டியவை அல்ல! பகவான் எத்தனை எளிமையான பக்தி வழியைக் காட்டியிருக்கிறார்!

அதுமட்டுமல்ல, **விதுரர்** வார்த்த **கஞ்சியை அமிழ்தெனப்** பாராட்டி அருந்தினார். **குசேலர்** கொண்டுவந்த **அவல் முடிச்சைத்** தானே வலியப் பிடுங்கி அவிழ்த்து வாயில் போட்டுக் கொண்டார். **சபரி** சுவைத்துக் கொடுத்த **உலர்ந்த கனிகள் இராமனுக்கு** ஏற்புடையதாயின. **கண்ணப்பனது** உமிழ் நீரும், மென்று பார்த்துக் கொடுத்த மாமிசத் **துண்டுகளும் சிவனுக்குச்** சிறந்த நைவேத்தியமாயின.

ஆக, நாம் இவற்றிலிருந்து புரிந்து கொள்வது - **இறைவனுக்கு நாம் சமர்ப்பிக்கும் பொருட்கள் முக்கியமல்ல. நமக்கு அவனிடம் உள்ள தூய உளமார்ந்த பக்தியே முக்கியம்!**

**அப்பர்** பெருமானது இறை வழிபாட்டுப் பட்டியலில்,

*சலம், பூவொடு தூபம் மறந்தறியேன்*
*தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்*

*– அ.தே. 4.1.06*

இந்தப் பட்டியலில் உள்ள **நீர், பூ, தூபம்** அல்லது சாம்பிராணி ஆகிய மூன்றினையும் எடுத்துச் செல்வது சுலபம் தான்.

அடுத்துப் **பொய்கை ஆழ்வாரின்** பாசுரம் ஒன்று!

அந்தப் பட்டியலில் **இரண்டே** பொருட்கள் - **பூவும், நீரும்**

*மனமாசு தீரும்; அருவினையும் சாரா;*
*தனம் ஆய தானே கைகூடும்; புனம் மேய*
*பூந் துழாயான் அடிக்கே போதொடு நீர் ஏந்தி*
*தாம் தொழா நிற்பர் தமர்*

*– நா.தி.பி. 2124*

[பெருமானை அணுகினால் மன அழுக்குகள் நீங்கும், தீராத வினைகளும் வாரா; அருட்செல்வம் தானே வந்து சேரும்; நிலத்தில் வளரும் துளசியிலான மாலை அணிந்த பெருமான் திருவடிகளை, அடியார் பூவும் நீரும் சுமந்து சென்று தொழுவர்]

இனி, **நம்மாழ்வாரின்** பாசுரம் ஒன்று!

அதில் **ஒரு பொருள்** மட்டும் - **மலர்!**

*நாடீர் நாள் தோறும்*
*வாடா மலர் கொண்டு;*

*பாடீர் அவன் நாமம்;*
*வீடே பெறலாமே!*

*– நா.தி.பி. 3939*

மலர் என்று பொதுவாகத் தானே ஆழ்வார் சொல்லி இருக்கிறார். மலரிலேயே இறைவனுக்கு ஏற்புடையதான எளிய மலர் ஏதாவது இருக்கிறதா? இருக்கிறதே, **எருக்கம் பூ!** அதுவும் இறைவனுக்கு ஏற்புடையதே என்று நம் முன்னோரான **புலவர் கபிலர் புறநானூற்றுப் பாடல்** ஒன்றில், அதை ஒரு உவமையாகவே வைத்துப் பாடி இருக்கிறார்.

*நல்லவும் தீயவும் அல்ல குவி இணர்ப்*
*புல்லிலை எருக்கம் ஆயினும், உடையவை*
*கடவுள் பேணேம் என்னா; ஆங்கு*
*மடவர் மெல்லியர் செல்லினும்*
*கடவன், பாரி கை வண்மையே*

*–க. பு.நா 106*

[நல்லதாயினும் சரி, தீயதாயினும் சரி, குவிந்த பூங்கொத்தும் புல்லிய இலையும் உடைய எருக்கம் பூவாயினும் சரி, ஒருவன் உள்ளன்புடன் சூட்டினால் அதனைத் தெய்வங்கள் விரும்பி ஏற்குமேயன்றி, 'யாம் அவற்றை விரும்பேம்' என்று கூற மாட்டார்கள்.

அதுபோல, அறிவில்லாதாரும், புல்லிய குணத்தாரும் தாமறிந்த அளவிற்குப் பாடிப் புகழ்ந்து சென்றாலும், **பாரி,** அவர்க்கும் உவந்து வழங்குவதே தனது கடமை எனக் கருதும் பெரும் வள்ளலாவான்]

சரி, அந்தப் பொருள் எருக்கம் பூ! அதையும் விட எளிமையான பொருள் ஏதும் இருக்கிறதா? இருந்தாலும் அதை இறைவன் ஏற்பானா? இருக்கிறது! இறைவன் அதை ஏற்கவும் செய்வான்! அதுதான் **இலை!** யார் யாருக்கு எது, எதைக் **கொடுத்தல் தர்மம்** என்று சொல்லித் தருகிறார் **திருமூலர்.**

*யாவர்க்கும் ஆம் இறைவர்க்கு ஒரு பச்சிலை*
*யாவர்க்கும் ஆம் பசுவிற்கு ஒரு வாயுறை*
*யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி*
*யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே*

*– தி.மூ. – தி.ம 252*

பாமர மக்களுக்கும் பக்தி உணர்வு ஊட்டப் பாடியுள்ள **சங்கரரின் புரட்சிகரமான கருத்து** இனித்தான் வருகிறது! இத்தகைய **புறப்பொருட்களான** இலை, பழம், மலர், நீர் போன்ற எதுவும் தேவையில்லை என்கிறார். பின், பக்தி செய்யும்பொழுது இறைவனுக்கு எதையாவது சமர்ப்பணம் செய்ய வேண்டாமா? கட்டாயம் செய்ய வேண்டும். அப்படியானால் அந்தப் பொருள் எது?

அந்தப் பொருளுக்காக பக்தன் ஆறு, குளங்களின் ஆழத்தில் அமுங்கியோ, அடர்ந்த காட்டில் அலைந்து திரிந்தோ, உயர்ந்த மலைகளில் ஏறியோ மலர்களைத் தேடி அலைய வேண்டாம்! **அந்தப் பக்தனிடமே மலர் இருக்கிறதே!** அதைச் சமர்ப்பித்தால் போதும்! அது எந்த மலர்? எங்கே இருக்கிறது? **பக்தனின் இதயத்தில் இருக்கும் உள்ளமாகிய தாமரை மலரைச் சமர்ப்பித்தாலே போதும்!** அந்த ஒரு மலரை இறைவன் திருவடியில் சமர்ப்பித்துவிட்டு அலைந்து திரியாது சுகமாக வீட்டிலேயே இருக்க அந்த எளிய பக்தனுக்குத் தெரியவில்லையே என ஆதங்கப்படுகிறார் சங்கரர்!

*ஏகம் சேதஸ்ஸரஸிஜம் பவதே சமர்ப்ய*

*–சி.ல.09*

[ஏகம் - ஒன்று; சேதஸ் - மனம்; ஸரஸிஜம் - தாமரை மலர்; பவதே - உமக்கு]

இக்கருத்தினைப் பின்னாளில் வந்த **அருணகிரி**யாரும் ஏற்றுத் தமது **திருப்புகழில் முருகனுக்கு** புஷ்ப அலங்காரம் எப்படிச் செய்வது என்று விளக்கும் பாடலில் பாடியுள்ளார்

*ஆசைகூர் பத்த னேன்மனோ பத்மம்*
*ஆனபூ வைத்து ...... நடுவேஅன்*
*பானநூ லிட்டு நாவிலே சித்ர*
*மாகவே கட்டி ...... ஒரு ஞான*
*வாசம்வீ சிப்ர காசியா நிற்ப*
*மாசிலோர் புத்தி ...... அளிபாட*
*மாத்ருகா புஷ்ப மாலைகோ லப்ர*
*வாளபா தத்தி ......ல் அணிவேனோ*

*– அ.நா. திருப்புகழ் 1212*

[உன் மீது ஆசை மிகுந்த பக்தியை உடைய நான் என் **மனம்** எனப்படும் **தாமரை மலரை** வைத்து, இடையில் **அன்பு** என்னும் **நாரைக்** கொண்டு, **நாக்கு** என்னும் இடத்திலே அழகான ஒரு **மாலை**யைத் தொடுத்து, அந்த மாலையின் மீது ஒப்பற்ற **ஞானம்** என்னும் நறுமணத்தைத் தடவி, அந்த மாலை மிக்க ஒளியுடன் விளங்கவும் அதைச் சுற்றி குற்றமற்ற **அறிவு** என்ற ஒரு **வண்டு** மொய்த்துப் பாடவும் **மாத்ருகா மந்திர மாலை**யான இந்தப் பூமாலையை அழகிய பவளம் போன்று சிவந்த உன் திருவடிகளில் அணிவிக்கும் பாக்கியத்தைப் பெறுவேனோ?]

இனி, நான்காவது தடையெனக் கருதுவதைப் பற்றிய அடுத்த பாடல்!



பாடல்-9

## பக்தி வழிபாட்டிற்கு ஒருவரது வர்ணாஸ்ரமம் அல்லது வாழ்க்கை நிலை தடையல்ல

பக்தி வழிபாட்டிற்குப் **பிறவி, சடங்குகள், வழிபாட்டுப் பொருட்கள்** முதலிய மூன்றாலும் தடையேதும் இல்லை என்று **சங்கரின்** பாடல்கள் மூலம் காட்டிய **பகவான் ரமணர்** நான்காவதாக மக்கள் கருதும் மற்றொன்றாலும் தடையில்லை என்று காட்டுகிறார்.

*வடூர்வா கேஹீவா யதிரபி ஜடீவா ததிதரோ*
*நரோ வாய: கச்சித் பவது பவகிம் தேந பவதி*
*யதீயம் ஹ்ருத்பத்மம் யதி பவததீனம் பசுபதே*
*த தீயஸ் த்வம் சம்போ பவஸி பவ பாரஞ்ச வஹஸி*

முன்னோர் வகுத்துச் சென்ற
வாழ்க்கை நிலை நான்கில், அவன்
பிரம்மச்சாரியாகவோ, குடும்பஸ்தனாகவோ,
அதிலிருந்து துறவு கொண்ட முதியவராகவோ,
முற்றும் துறந்து முடிவளர்த்த துறவியாகவோ
எந்நிலையில் இருந்தாலும், எத்தொழிலைச்
செய்தாலும்
குறை ஒன்றும் இல்லையே?
பசுபதியே! சம்புவே!
எப்பொழுது அவன் தன் இதயத் தாமரையை
உன்னிடத்தில் ஒப்படைத்துவிட்டானோ
அப்பொழுதே, நீ அல்லவா அவனோடு ஒன்றாகி
அவன் பிறவிச் சுமையையே
சுமக்கத் தொடங்கிவிட்டாய்!

பாடல் 9 – சி. ல. 11

பிரம்மச்சரியம் அல்லது **மாணவ நிலை,** குடும்பஸ்தன் அல்லது **இல்லற நிலை,** வானப்ரஸ்தம் அல்லது **முதுமையில் ஆன்மிகச் சிந்தனை நிலை,** சன்யாஸம் அல்லது **முழுத் துறவு நிலை** என்று நான்கு நிலைகளையும் **பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்** என்று **உயர்வு - தாழ்வுகளற்ற தொழில்முறைப் பிரிவினையும்** நம் வாழ்க்கைக்கு வகுத்துக் காட்டியுள்ளது வேதம்.

ஆனால் காலப்போக்கில் இந்த நான்கில், ஒரு குறிப்பிட்ட நிலையில் உள்ளவர்கள் அல்லது சில குறிப்பிட்ட வகுப்புக்களைச் சார்ந்தவர்கள் தான் இறைவனிடம் பக்தி செலுத்தவும் முக்திக்கான முயற்சியைத் தொடங்கவும் தகுதியானவர்கள் என்ற தவறான கருத்து உருவாகிவிட்டது. பக்தன் மனதிலிருந்து - அதுவும், குறிப்பாகச் சாமான்ய மக்கள் மனதிலிருந்து இக்கருத்தினை முற்றிலுமாக நீக்கி, இந்த நான்கில் எந்த நிலையில் ஒருவன் இருந்தாலும் அவனுக்கு இறைவனிடம் பக்தி செலுத்தத் தடையேதும் இல்லை என்பதை நமக்குத் தெளிவாகப் புரிய வைப்பதற்காகப் **பகவான் ரமணர் ஆதி சங்கரரின் சிவானந்த லஹரியின்** 100 பாடல்களில் **9 ஆவது** பாடலைத் தெரிவு செய்து தந்துள்ளார்.

இக்கருத்தினைப் பல திருநூல்களும் சொல்லி இருக்கின்றன. அருளாளர்களும் பாடி இருக்கிறார்கள். அவற்றில் சிலவற்றை இங்கே பார்த்து ஒப்பு நோக்கி நம் நம்பிக்கையைத் திடப்படுத்திக் கொள்வோம்!

முதலில் **பகவான் கிருஷ்ணரின் கீதை**யிலிருந்து ஒரு ஸ்லோகம்:

*மாம் ஹி பார்த்த வ்யபாஸ்ரித்ய*
*யேண்பி ஸ்யு: பாயயோனய:*
*ஸ்த்ரியோ வைஸ்யாஸ்த்தா ஸூத்ராஸ்*
*தே பி யாந்தி பராம் கதிம்ன* —*கீதை 9.32*

[பார்த்தா! கீழான பிறவியர்கள் என மக்கள் கருதும் பெண்பாலர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் கூட என்னைச் சார்ந்திருந்து பரகதியை நிச்சயமாய் அடைகிறார்கள்]

அடுத்து **அப்பர்** பெருமானது **திருமாற்பேறு தேவாரத்** திருப்பாடல் ஒன்று!

*சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்*
*கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்?*
*பாத்திரம் சிவமென்று பணிந்திரேல்*
*மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே!*

*–அ.தே 5.60.3*

[மாத்திரை - கண் இமைக்கும் நேரம்]

இதற்கும் ஒரு படி மேற்சென்றும் **அப்பர்** பெருமானே பாடி இருக்கிறார்.

*சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து*
*தரணியொடு வானளாவத் தருவ ரேனும்*
*மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்*
*மாதேவர்க் கேகாந்தர் அல்லா ராகில்*
*அங்கமெலாங் குறைந்து அழுகு தொழுநோ யராய்*
*ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்*
*கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்ப ராகில்*
*அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவு ளாரே*

*– அ.தே – 6.95.10*

[சங்கநிதி பதுமநிதி ஆகிய நிதிகள் இரண்டையும் தந்து, ஆட்சி செய்யப் பூமியொடு வானுலகையும், தருவாராயினும் சிவபெருமானிடத்தே ஒரு தலையாய அன்பில்லாதவரின் நிலையற்ற அழிவதாகிய அவரது செல்வத்தை யாம் ஒருபொருளாக மதிக்க மாட்டோம். உறுப்புக்கள் எல்லாம் அழுகிக் குறைந்த தொழுநோய ரானாலும், பசுவை உரித்துத் தின்று திரியும் புலையராயினும் கங்கையைத் தம் நீண்ட சடைக்குள் மறைத்து வைத்திருக்கும் சிவபெருமானுக்கு அன்பராயின், அவரே நாம் வணங்கும் கடவுள் ஆவார்]

கடவுளை வணங்குவது ஒரு பக்கம் இருக்கட்டும். இப்பாடலில் அத்தகைய **தொழுநோயாளியும் புலையரும் சிவனடியார்களாயின், அவர்களும் கடவுளாக வணங்கத் தக்கவர்** என்பது அப்பர் பெருமானது திருவாக்கு!

**நாரத பக்தி சூத்திரத்தில்** உள்ள 72 ஆவது சூத்திரம்:

*நாஸ்து தேஷு ஜாதி–வித்யா–ரூப–குல*
*தன–க்ரியாதி–பேத:*

[இறைவனிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவர்களிடையே - ஜாதி, கல்வி, உடல்அழகு, குலம், செல்வம், தொழில் முதலிய வேற்றுமைகள் கிடையாது]

மற்றும் **ஸ்ரீமத் பாகவதத்தி**லிருந்து ஒரு ஸ்லோகம்

*மன்யே தனாபிஜனரூபதபச் ச்ருதௌஜ:*
*தேஜ: ப்ரபாவ பல பௌருஷ புத்தி யோகார்*
*நாராதனாய ஹி பவந்தி பரஸ்ய பும்ஸ:*
*பக்த்யா துதோஷ பகவான் கஜயூதபாய*

[உடைமை, சுற்றம், அழகு, தவம், கேள்வி, ஆற்றல், கீர்த்தி, பலம், முயற்சி, புத்தி, யோகம் ஆகியவை பரம புருஷனுடைய வழிபாட்டில் பயன்படாது என்றே நான் கருதுகிறேன்! **பக்தியாலன்றோ பகவான் கஜேந்திரனுக்கு அருள் புரிந்தார்**]

நிறைவாக, நம் **அமரகவி பாரதியாரின் பரசிவ வெள்ளம்** என்ற பகுதியில் உள்ள பாடல் ஒன்று!

*காவித்துணி வேண்டா! கற்றைச் சடை வேண்டா!*
*பாவித்தாற் போதும், பரமநிலை எய்துதற்கே!*
*சாத்திரங்கள் வேண்டா! சதுர்மறைகள் ஏதுமில்லை!*
*தோத்திரங்களில்லை! உளந்தொட்டு நின்றால் போதுமடா!*

ஆக **பகவான் ரமணர்** தமது திரட்டில் மிகக் கவனமாக **"எது பக்தி"** என்பதை **ஆதிசங்கரரின் சிவானந்தலஹரியின் 61** ஆவது பாடல் மூலம் நமக்குக் காட்ட, இறைவனுக்கும் நமக்கும் காந்தம் - இரும்பு ஊசி என்ற இரட்டை உவமையோடு தொடங்கிய படிநிலை வளர்ச்சி முறையில், நிறைவாக நதி - கடல் என்ற உவமையோடு நதியான நாம் கடலான இறைவனோடு கலந்து, நதி எப்படித் தன் நிறம் மணம், குணம், அத்தனையையும் துறந்து கடலோடு கடலாக ஆகி விடுகிறதோ அதுபோல் நாமும் ஆகி விடலாம் என்று முதற்பாடலிலேயே நம்மைச் சிந்திக்க வைக்கிறார்.

அதைத் தொடர்ந்து **ஆதி சங்கரரின் சிவானந்தலஹரியின் ஏனைய பாடல்கள்** மூலம் பக்தியை எப்படி, எந்தத் தடையுமின்றி, எளிதாக நம்மால் செலுத்த முடியும் என்று படிப்படியாகக் காட்டி, இந்த ஒன்பதாவது பாடலில், நம் இதயம் எனும் தாமரை மலரை இறைவனிடமே ஒப்புவித்து அவனிடம் **பூரண சரணாகதி** அடைந்தால் அவனோடு ஒன்றி விட முடியும் என்பதையும் அதற்குப் பின்னர் **நம்முடன் இருக்கும் இறைவனே நம் வாழ்க்கைச் சுமையை சுமந்து நம்மைக் கடைத்தேற்றத் தொடங்கிவிடுவான்** என்றும் காட்டுகிறார்.

**ஆதி சங்கரரது** இந்தப் பாடலில் உள்ள ஒரு சொற்றொடரை நாம் எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும்.

*யதீயம் ஹ்ருத்பத்மம் யதி பவததீனம் பசுபதே*
*ததீயம் த்வம் சம்போ பவஸி பவபாரஞ்ச வஹஸி*

[பசுபதியாகிய தேவரீரது திருவடியில் எவன் தன் உள்ளமெனும் தாமரையைச் சமர்ப்பித்து விடுகிறானோ, அவனுக்கே நீங்கள் சுவாதீனமாகி, அவனுடைய பிறப்பு எனும் வாழ்க்கைச் சுமையையும் அல்லவா சுமக்கத் தொடங்கி விடுகிறீர்!]

இனி, **பகவான் ரமணரது திரட்டின்** நிறைவான பாடல்!



## பாடல் 10

# பக்தி ஞானம் தந்து, முக்தியையும் தரும்!

இறை வழிபாட்டுச் சடங்குகளையும், சம்பிரதாயங்களையும், மானுடரே தோற்றுவித்துள்ள பல தடைகளையும் கண்டு நம்மைப் போன்ற சாமான்ய மக்கள் இறைவனிடமிருந்து விலகிச் சென்று இல்வாழ்க்கையெனும் பெருங்கடலில் உழன்று கொண்டிருக்கிறோம். இப்படி நாம் திரிவதைக் கண்ணுற்ற **பகவான் ரமணர்,** இறை வழிபாட்டு முறையை எளிமைப் படுத்தினார். நம்மாலும் அதைச் செய்ய முடியும், செய்து உய்வும் பெறலாம் என்பதை உணரவைத்து, **நம் வாழ்க்கையின் குறிக்கோளான முக்தியை** நோக்கி நம்மை ஆற்றுப்படுத்த விழைந்தார். அவரது அந்த நல் விருப்பத்தினை விரைவில் நிறைவேற்ற **ஆதி சங்கரரின் சிவானந்தலஹரி** அவருக்குக் கை கொடுத்தது. தாம் சொல்ல வந்ததைக் கோவையாகச் சொல்ல சிவானந்தலஹரியின் **100 பாடல்களி லிருந்து** அங்குமிங்குமாக **10 பாடல்களைத் தெரிவு செய்து** முக்திப் பயணத்திற்கான ஒரு திரட்டாக அதனை வழங்கியுள்ளார் என்பதை முன்னரே பார்த்தோம்.

இப்பொழுது அந்த ஆன்மிகப் பயணத்தின் சேருமிடத்தை நெருங்கி வந்துள்ள நிலையில், **பகவான் ரமண மகரிஷியின் திரட்டின்** நிறைவுப் பாடலாக **சங்கரரின் சிவானந்தலஹரியின் 91 ஆவது** பாடல் வருகிறது.

*ஆத்யா(அ) வித்யா ஹ்ருத்கதா நிர்க்கதாஸீத்*
*வித்யா ஹ்ருத்யா ஹ்ருத்கதா த்வத்ப்ரஸாதாத்*
*ஸேவே நித்யம் ஸ்ரீகரம் த்வத்பதாப்ஜம்*
*பாவே முக்தேர் பாஜனம் ராஜமௌலே*

*பாடல் எண் 91 – 10*

**சந்திரசேகரரே! சஞ்சலம் மிகுந்த**
**இப்பிறவியில் என்னோடு பிறந்து,**
**என்னிடமே இதுவரை இருந்த**
**அஞ்ஞானமெனும் இருளகற்றி,**
**என்னுள்ளே ஞான விளக்கேற்றி வைத்து,**
**என்னை நீ வாழ்வாங்கு வாழ வைத்துள்ளாய்!**
**திருவினைத் தருவதும்**
**முக்திக்கு இருப்பிடமும் ஆன**
**உன் தாமரைத் திருவடிகளையே நான்**
**என்றும் வழிபடுகிறேன்! தியானிக்கிறேன்!**

பாடல் 10 – சி. ல. 91

**மானுடன்** என்னும் **நதி**யான நாம் **இறைவன்** எனும் **கடலில் கலந்த நிலையில்** உள்ளோம் என்றும் இந்தத் **தூய ஒன்றிப்பின்** விளைவாக, இறைவன் நம், **சரணாகதி**யை ஏற்று, இடர் மிகுந்த இந்த உலகில் நம்மோடு பிறந்து, உடன் வந்த **அஞ்ஞானம் (அவித்யை)** எனும் இருளால் சூழப்பெற்றிருந்த நம் **உள்ளமெனும் கோவிலினுள் புகுந்து**, அந்த **இருளை அகற்றி**, அதில் **ஞான விளக்கு ஏற்றி** வைத்து, அத் திவ்ய ஒளிக்கிடையே **திருஇருக்கை கொண்டு** நம் **வினையையும் அகற்றி** நம்மை வாழ்வாங்கு வாழ வைத்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்லி, **பக்வத் பாதர் சங்கரர்** நமக்கு இதுவே **முக்தி நிலை** என்று காட்டுகிறார். நாமும் நமக்கு அனைத்து நலன்களையும் தரக்கூடியதும் முக்திக்கு இருப்பிடமாயும் உள்ள இறைவனின் தாமரைத் திருவடிகளைப் பற்றிக் கொண்டு வழிபடுகிறோம். தெரிந்த அளவில் தியானமும் செய்கிறோம்.

இனி, முன் பாட்டுக்களில் நாம் பார்த்தது போல இங்கும், இக்கருத்தோடு ஒட்டிப் பாடியுள்ள ஏனைய அருளாளர்களின் பாடல்கள் / ஸ்லோகங்கள் சிலவற்றை ஒப்பிட்டுப் பார்த்து மகிழ்வோம்.

முதலில் **ப்ரஹதாரண்ய உபநிடதத்திலிருந்து** மிகப் பொருத்தமான ***அப்யாரோஹ மந்திரம்!***

***அப்யாரோஹ*** என்பது அபி + ஆரோஹ என்று பிரிக்கப்பெறும்.

இதன் பொருள் : இந்த மந்திரத்தை ஜபிப்பவர்களை இன்னும் மேலான நிலைக்கு உயர்த்தி வைக்கும்!

*அஸதோமா சத் கமய*
*தமஸோமா ஜியோதிர் கமய*
*ம்ருத்யோர்மா அமிர்தம் கமய*
*ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி:*

*–ப்ரஹ்.உப 1.3.28*

**எங்களைப்**
**பொய்மையிலிருந்து மெய்மைக்கு வழி நடத்து!**
**இருளிலிருந்து ஒளிக்கு வழி நடத்து!**
**மரணத்திலிருந்து மரணமிலாப் பெரு நிலைக்கு வழி நடத்து!**
**ஓம்! ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம், ஆதியாத்மிகம்**
**என்ற மூன்று மூலங்களிலிருந்தும்**
**வருகின்ற துன்பங்களும் நீங்கி அமைதி நிலவுவதாகுக!**

[இருள் - அஞ்ஞானம்; ஒளி - ஞானம்]

ஏறத்தாழ இதே கருத்துடைய **மாணிக்கவாசகப் பெருமானின் சிவபுராண** வரிகளில் சில :

*பொய் ஆயின எல்லாம் போய் அகல வந்தருளி*
*மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே,*
*எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே,*
*அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே!*

*– மா.வா.தி – சி.பு 37–40*

மற்றும் அவருடைய **திருவெண்பா**விலிருந்து ஒரு பாடல்! அஞ்ஞானத்தை அகற்றிய இறைவன் தன் பக்தனின் சிந்தையையே ஊராகக் கொண்டுவிட்ட விந்தையைச் சொல்கிறது!

*இன்பம் பெருக்கி இருள் அகற்றி எஞ்ஞான்றும்*
*துன்பம் தொடர்வு அறுத்துச் சோதியாய் – அன்புஅமைத்து*

*சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையையே*
*ஊராகக் கொண்டான் உவந்து*

*– மா.வா.தி. 627*

அடுத்து, **திருக்குறளிலிருந்து இரு குறட்பாக்கள்!**

*ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்*
*வானம் நணிய துடைத்து*

*–தி.வ. – தி.கு 353*

[மயக்கம் நீங்கி மெய்ப்பொருளைக் கண்டவருக்கு இம்மண்ணுலகை விட, அந்த விண்ணுலகம் அண்மையில் உள்ளதாகும்]

*இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு*

*– தி.வ – தி.கு. 352*

[மயக்கம் நீங்கித் தெளிவு நிலையில் உண்மை கண்டவருக்கு, அஞ்ஞானமாகிய இருள் நீங்கும்; ஞானம் எனும் இன்பம் சேரும்]

இனி, **திருமூலர் திருமந்திரத்திலிருந்து** சில பாடல்கள் :

*ஆன்கன்று தேடி அழைக்கும் அதுபோல்*
*நான்கன்றாய் நாடி அழைத்தேன் என்நாதனை*
*வான்கன்றுக்கு அப்பாலாய் நின்ற மறைப்பொருள்*
*ஊன்கன்றால் நாடி வந்து உள் புகுந்தானே*

*– தி.மூ. – தி.ம 2627*

[தாய்ப் பசுவைப் பிரிந்த இளங்கன்று தாயைத் தேடும். தாயிருக்கும் இடம் அறியக் குரல் கொடுத்துக் கதறி அழைக்கும். அதுபோல நானும், தாயைப் பிரிந்து தவிக்கும் பசுங்கன்றைப் போல, என் தலைவனை நாடி, வருந்தி அழைத்தேன். வான் கன்றுகளாகிய தேவருலகத்தினர் யாவருக்கும் அப்பாலாய் விளங்கும், வேத விழுப்பொருளாகிய சிவம், என் ஊன் உடம்பு வாடி வருந்தவிடாமல், என்னைத் தேடி வந்து என் உள்ளத்தில் புகுந்து கொண்டான்.

ஆன் - பசு. வான்கன்று - வானுலகத்து சீவர்கள். மறைப்பொருள் - வேத வித்து. ஊன் - உடம்பு (ஊன் - சதை) கன்றால் - கன்றாமல், வாடி வருந்த விடாமல்]

*நான்என்றும் தான்என்றும் நாடினேன் நாடலும்*
*நான்என்றும் தான்என்றும் இரண்டில்லை என்பது*
*நான்என்ற ஞான முதல்வனே நல்கினான்*
*நான்என்று நானும் நினைப்பு ஒழிந்தேன்னே*

*– தி.மூ. – தி.ம 2820*

[நான் வேறு, சிவன் வேறு என்று நான் எண்ணிக் கொண்டிருந்த போது, நான் என்றும், சிவன் என்றும் வேறுவேறாக இரண்டில்லை, இரண்டும் ஒன்றே என்ற உண்மையை ஞான முதல்வனான இறைவனே எனக்கு உணர்த்தி அருளினான். அப்போதுதான், 'நான்', என்ற என் தன்முனைப்பை, நினைப்பை நான் விட்டொழிந்தேன். நாடுதல் - அறிதல்]

அருள் **மணிவாசகப் பெருமான்** தம்மைத் **திருப்பெருந்துறை** உறையும் பெருமான் ஆட்கொண்டு அவர்தம், உள்ளத்தின் உள்ளே புகுந்த அற்புதத்தை நமக்கு ஒரு பாடல் காட்சியாகக் காட்டுகிறார்:

*சிந்தனை நின்தனக்கு ஆக்கி, நாயினேன் தன்*
*கண் இணைநின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி,*
*வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி, வாக்கு உன்*
*மணிவார்த்தைக்கு ஆக்கி, ஐம்புலங்கள் ஆர,*
*வந்துஎனை ஆட்கொண்டு, உள்ளே புகுந்த விச்சை*
*மால் அமுதப் பெரும் கடலே! மலையே! உன்னைத்*
*தந்தனை! செந் தாமரைக்காடு அனையமேனித்*
*தனிச்சுடரே! இரண்டு இல் இத்தனியனேற்கே!*

*– மா.வா. – தி.வா 30*

[செந்தாமரைக் காடனைய சிவந்த மேனியனே, செழும் தனிச்சுடரே, என்னுடைய சிந்தனையை உந்தனுக்கு உரியதாக்கினாய். என் இரு கண்களையும் உன் திருவடிகளைக் காணுமாறு செய்தாய். எனது வாழ்த்தையும் வழிபாட்டினையும் உனக்கு உகந்தது என ஆக்கிக் கொண்டாய். ஐம்புலன்களையும் உன் தொண்டுக்கு ஆகுமாறு செய்தாய். என் உள்ளத்தே புகுந்த விந்தையாம் மெய்ஞானப் பொருளே, உன்னைத் தந்து என்னை நீ ஆட்கொண்டாய். இரண்டும் கெட்டானாகிய எளியேனை ஆட்கொண்ட உனது பேரருளை என்னென்பேன்]

பொருளின் ஈர்ப்பிலிருந்து பூரண ஆனந்தம் பெறுகின்ற வரையிலான படிநிலை வளர்ச்சியைக் காட்டும் **தாயுமான சுவாமிகளின்** திருப்பாடல் ஒன்று!

*பொருளாகக் கண்டபொருள் எவைக்கும் முதல்*
*பொருள் ஆகி போதம் ஆகித்*
*தெருள் ஆகிக் கருதும் அன்பர் மிடி தீரப்*
*பருகவந்த செழுந்தேன் ஆகி*
*அருள் ஆனோர்க்கு அகம்புறம் என்று உன்னாத*
*பூரண ஆனந்தம் ஆகி*
*இருள் தீர விளங்கு பொருள் யாது? அந்தப்*
*பொருளினை யாம் இறைஞ்சி நிற்பாம்*

*– தா.பா. 3 : 7*

[போதம் ஆகி - ஆத்ம அனுபவம் ஆகி; தெருள் ஆகி - தெளிவு என்ற ஞானம் ஆகி; அன்பர் மிடி தீர - அடியார் தம் வறுமை நீங்க; அகம் புறம் என்று உன்னாத - உள்ளே என்றும் வெளியே என்றும் நினையா திருப்பதற்கே காரணமாகி; இருள் தீர - அஞ்ஞானம் நீங்க; விளங்கு பொருள் யாது? - அந்தப் பொருள் இறைவனே; இறைஞ்சி நிற்பாம் - அவனை வேண்டி, வணங்கி நிற்போம்]

**"ஊரும் சதமல்ல, உற்ற பெற்றாரும் சதமல்ல, யாரும் சதமல்ல"** என்ற உணர்வு இறையருளால் வந்ததும், ஒரு நொடியில் அனைத்தையும் துறந்தவர் காவிரிப்பூம்பட்டினத்துச் செல்வந்தர் **திருவெண்காடர்.** **"காதற்ற ஊசியும் வாராது காணுங் கடை விழிக்கே"** என்று தன் வளர்ப்பு மகன் **மருதவாணர்** எழுதி அனுப்பிய ஓலை நறுக்கைப் பார்த்த மறுகணம் இடுப்பில் கட்டியிருந்த ஒற்றைத் துணியோடு வீட்டைவிட்டுப் புறப்பட்டுச் சென்றவர். தினமும் பிச்சை ஏற்று உண்டவர். அவர்தான் **பட்டினத்தார்** என்று பிற்காலத்தவர் அழைத்த சைவப் பெரியவர். அவரது இரண்டு வரிப் பாடல்கள் இரண்டு!

*எனக்குள்ளே நீயிருக்க உனக்குள்ளே நானிருக்க*
*மனக்கவலை தீர வரமருள்வாய் பூரணமே! – பட் – நெ.பு – 33*

[என்னில் தேவரீர் எழுந்தருளியிருக்கத் தேவரீரில் யானிருக்க (இத்தகைய நெருக்கமுடைய தேவரீர் என்னுடைய) மனக்கவலை நீங்க வரம் தரல் வேண்டும்]

*உடனாகவே இருந்து உணர அரியானோடு*
*கடல்நீரும் ஆறும்போல் கலந்தனையே நெஞ்சமே!*

*– பட் – நெ.ம – 15*

[மனமே! என்னுடன் அத்துவிதமாய்க் கலந்திருந்தும் அறிகின்றதற்கு அரியவனாய் இருப்பவனோடு சமுத்திர சலமும் நதியும் போல நீ கலந்து விட்டாய்!]

*அப்பினில் கூர்மை ஆதித்தன் வெம்மையால்*
*உப்பெனப் பேர்பெற்று உருச்செய்த அவ்வுரு*
*அப்பினில் கூடியது ஒன்றாகு மாறுபோல்*
*செப்பினில் சீவன் சிவத்துள் அடங்குமே*

*– தி.மூ. – தி.ம 136*

[கடல் நீரில் கலந்திருக்கிற உப்பு, உப்பளங்களில், சூரிய வெப்பத்தால், நீர் ஆவியாகிக் காய்ந்தவுடன், உப்பாகப் படிந்து நிற்கும். இப்படிப் படிந்துள்ள உப்பை எடுத்து, அதில் ஓர் உருவம் செய்து, தண்ணீரில் விட்டால், அந்த உப்பு உருவம் தண்ணீரில் கரைந்து, உப்பு வேறு, நீர் வேறாகத் தோன்றாதபடி, தண்ணீரோடு இரண்டறக் கலந்து விடும். இதைப் போலவே சீவன் சிவத்தோடு கலந்து, சிவனுள் அடங்கும். உப்பும் தண்ணீரும் போலச் சீவனும் சிவனும் இரண்டறக் கலக்க வேண்டும் என்பது பொருள். செப்பினில் சீவன் என்றது, உடம்பாகிய செப்பின் உள்ளிருக்கும் உயிரை.

அப்பு - கடல் நீர்; கூர்மை - உப்புத் தன்மை; ஆதித்தன் - சூரியன்; வெம்மையால் - வெப்பத்தால்;]

***சீவன் எனச்சிவன் என்ன வேறில்லை***
***சீவனார் சிவனாரை அறி கிலர்***
***சீவனார் சிவனாரை அறிந்த பின்***
***சீவனார் சிவன் ஆயிட்டு இருப்பரே***

*– தி.மூ. – தி.ம. 2017*

[சீவன் என்றும் சிவன் என்றும் இரண்டில்லை. இரண்டும் வேறல்ல என்றாலும், சீவனிடம் சீவத் தன்மை உள்ளவரையில் தன்னுள் இருக்கும் சிவத்தை அறிந்துணராது இருக்கிறது. சீவனது சீவத்தன்மை மாறி சீவன் சிவத்தை அறியும் அகண்ட ஞானம் பெற்று விட்டால் சீவன், சிவமாகி இருக்கும். சீவன் சிவனை அறிவதாவது, சீவன் தன் சீவத்தன்மை நீங்கிப் பர ஞான உணர்வு பெற்றுச் சிவனுடன் கலத்தலாகும்.

சீவன் - உயிர், ஆன்மா]

இதுவரை **சிவ** பரமான பாடல்களைப் பார்த்த நாம் இதே கருத்தினைக் கொண்ட **அம்பிகை பரமான அபிராமி அந்தாதியிலிருந்து** ஒரு

பாடலையும், **அபிராமி** அம்மைப் பதிகத்திலிருந்து ஒரு பாடலையும் பார்ப்போம்!

*பொருளே, பொருள் முடிக்கும் போகமே, அரும்போகம் செய்யும்*
*மருளே, மருளில் வரும்தெருளே, என் மனத்து வஞ்சத்து*
*இருள் ஏதுமின்றி ஒளிவெளியாகி இருக்கும் உன்றன்*
*அருள் ஏது அறிகின்றிலேன்! அம்புயாதனத்து அம்பிகையே!*

*– அ.ப. – அ.அந்.36*

[பொருளாய் உள்ளவளே! பொருளால் முடிக்கும் இன்ப துன்ப நுகர்ச்சியாய் உள்ளவளே! அரிதாகிய போகங்களைத் துய்க்கும்படி தரும் மயக்கமாய் உள்ளவளே! அம்மயக்கத்தின் முடிவில் வரும் தெளிந்த ஞானமாய் உள்ளவளே! தாமரையாகிய ஆசனத்தில் எழுந்தருளிய அபிராமியம்மையே! அடியேனது உள்ளத்தில் அஞ்ஞான இருள் சிறிதும் இல்லாது ஒழிய, ஞானவொளி வீசும் பரவொளியாக இருக்கும் உன்னுடைய திருவருள் எத்தகையது என்று அறிகின்றிலேன்! அறிவிப்பாயாக!]

**ஞானம் தழைத்து, உன் சொரூபத்தை அறிகின்ற**
**நல்லோர் இடத்தினில் போய்**
**நடுவினில் இருந்து உவந்து அடிமையும் பூண்டு அவர்**
**நவிற்றும் உபதேசம் உட்கொண்டு,**
**ஈனம்தனைத் தள்ளி, எனது நான் எனும்மானம்**
**இல்லாமலே துரத்தி,**
**இந்திரிய வாயில்களை இறுகப்புதைத்து, நெஞ்சு**
**இருள் அற விளக்கு ஏற்றியே,**
**வான் அந்தம் ஆனவிழி அன்னமே, உன்னை என்**
**மனத் தாமரைப் போதிலே**
**வைத்து, வேறே கவலை அற்று,மேல்உற்ற பர**
**வசமாகி அழியாத ஓர்**
**ஆனந்த வாரிதியில் ஆழ்கின்றது என்று காண்?**
**ஆதிகடவூரின் வாழ்வே!**
**அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!**
**அருள்வாமி! அபிராமியே!**

**– அ.அம்.பதி. 8**

நிறைவாக, **பகவான் ரமணரே** அருளிச் செய்த **ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலையிலிருந்து** சில கண்ணிகள்!

*தோடமில் நீ அகத்தோடு ஒன்றி என்றும் சந்*
*தோடம் ஒன்றிட அருள் அருணாசலா!*

*—ப.ர.ம. அ.அ.ம 52*

[அருணாசலா! நீ தோஷமே இல்லாதவன். நீ என்னோடு இரண்டறக் கலந்து, நான் பேரின்பம் அனுபவிக்க அருள் புரிவாய்]

*நூலறிவு அறியாப் பேதையன் என்றன்*
*மாலறிவு அறுத்தருள் அருணாசலா!*

*—ப.ர.ம. அ.அ.ம 58*

[அருணாசலா! நான் நூல்களைக் கற்கவில்லை. எனவே என்னிடத்துக் கல்வியறிவு இல்லை. அறிவில்லாத பேதை நான். என் மயக்க அறிவை நீக்கி மெய்யுணர்வை என் உள்ளத்தில் விளக்கி அருள்க]

*பொடியான் மயக்கி என் போதத்தைப் பறித்து உன்*
*போதத்தைக் காட்டினை அருணாசலா!*

*—ப.ர.ம. அ.அ.ம 73*

[சொக்குப் பொடி போட்டாற்போல என் அறிவை நீக்கி உன்னறிவினைக் காட்டினாய், அருணாசலா!]

*மையல் நீத்துஅருள் மையினால் உனது உண்மை*
*வசம் ஆக்கினை அருணாசலா!*

*—ப.ர.ம. அ.அ.ம 84*

[கனமான இருள் போன்ற என் மனமயக்கம் மாற்றி, திருவருள் என்னும் வசிய மையினால் என்னை உன் சொரூப வசமாக்கிக் கொண்டாய்]

*அப்புவில் ஆலிபோல் அன்புரு உனில் எனை*
*அன்பாக் கரைத்தருள் அருணாசலா!*

*—ப.ர.ம. அ.அ.ம 101*

[தண்ணீரில் பனிக்கட்டி கரைந்து தண்ணீராகவே ஆவது போல, நின் அன்புருவான சொரூபத்தில் நான் ஒன்றாகக் கலந்து கரைவதற்கு அருள் புரிவாயாக]

ஆக, **முக்திக்கு எளிய வழி பக்தியே** என்பது இப்பொழுது புரிகிறது. ஏனைய மார்க்கங்களைக் காட்டிலும் இதுவே நமக்குக் கைவரக் கூடியது. தவிரவும், பக்தி செய்வதற்கு மற்றொரு பிரமாணமோ ஆதாரமோ

தேவையில்லை. பக்தி தனக்குத் தானே பிரமாணமாக இருப்பதால், அது சுலபம் (நா.ப.சூ. 58&59).

இனி நம் பங்கில் நாம் செய்ய வேண்டியது ஒன்று தான்!

**பகவான் ரமண மகரிஷி**யின் இந்த எளிய **சிவானந்தலஹரித் திரட்டி**னை நாம் இயன்ற பொழுதெல்லாம் காதலாகிக் கசிந்து, கண்ணீர் மல்கி, பாராயணம் செய்து கொண்டு, அஞ்ஞானத்தை நீக்கி, அகண்ட ஞானம் தந்து, இறைவனோடு இரண்டறக் கலக்க வைத்து, நிறைவாக அந்த **அத்வைத** நிலையில் **முக்தி**யையுமே தரக்கூடிய இறைவன் திருவடித் தாமரை மலர்களில், **பூரண சரணாகதி** செய்து பேரின்பப் பெருவாழ்வினைப் பெறுவோமாக!

பூரண சரணாகதி என்பதை விளக்கிச் சொல்லும் ஒரு ஸ்லோகத்தினை இங்கே நினைவுபடுத்திக் கொள்வோம்.

*ஆனுகூல்ய சங்கல்ப: ப்ராதிகூல்ய வர்ஜனம்*
*ரக்ஷிஷ்யதீதி விச்வாஸோ கோப்த்ருத்வ வர்ணம் ததா*
*ஆத்ம நிக்ஷேப கார்ப்பண்யே ஷட்விதா சரணாகதி!*

சரணாகதி ஆறு அங்கங்களைக் கொண்டது :

1. இறைபக்திக்கு ஏற்புடையனவற்றை மட்டும் செய்தல்
2. அதற்கு எதிரானவற்றை முற்றிலும் தவிர்த்தல்
3. இறை தன்னைக் கட்டாயம் காக்கும் என்கிற அசைவிலா நம்பிக்கையுடன் இருத்தல்
4. இறையையே தனக்குப் புகலிடமாகக் கொள்ளுதல்
5. இறையிடம் முற்றிலுமாக ஆத்ம சமர்ப்பணம் செய்துவிடல்
6. தனக்கு வேறு கதி எதுவும் இல்லை என்று நம்பி இருத்தல்

இப்படிச் சரணாகதி செய்வதற்கு, முன் சொன்னபடி எந்த விதமான ஸ்தல நியமமும், கால நியமமும், பிரகார நியமமும், அதிகாரி நியமமும் இல்லை என்பதையும் இங்கே நினைவிற் கொள்வோம்.

**பகவான் ரமணரின் சிவானந்தலஹரித் திரட்டின்** விளக்க உரையை அவருக்கு மிகவும் பிடித்தமான **ப்ரஹதாரண்ய உபநிஷத்தில்** உள்ள சாந்தி மந்திரத்துடன் நிறைவு செய்வோம்!

*ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ண முதச்யதே*
*பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணம் ஏவாவசிஷ்யதே*
*ஓம்! சாந்தி, சாந்தி, சாந்தி:*

[இறைவன் முழுமையானவர். இந்த உலகம் முழுமையானது. முழுமையான இறைவனிலிருந்தே முழுமையான உலகமும் அதிலுள்ளவை அனைத்தும் தோன்றியுள்ளன. முழுமையிலிருந்து முழுமையை எடுத்த பின்னும் முழுமையே எஞ்சியுள்ளது. ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி]

# ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை

## காப்பு

அருணாசல வரற்கு ஏற்ற அக்ஷரமணமாலை சாற்றக்
கருணாகர கணபதியே கரம் அருளிக் காப்பாயே

## நூல்

அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலா!
அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலா!

அருணாசலம் என அகமே நினைப்பவர்
அகத்தை வேரறுப்பாய் அருணாசலா! 1

அழகு சுந்தரம்போல் அகமும் நீயும் முற்று
அபின்னமாய் இருப்போம் அருணாசலா! 2

அகம் புகுந்து ஈர்த்து உன் அக குகை சிறையாய்
அமர்வித்து என்கொல் அருணாசலா! 3

ஆருக்கா எனை ஆண்டனை அகற்றிடில்
அகிலம் பழித்திடும் அருணாசலா! 4

இப்பழி தப்ப, உனை ஏன் நினைப்பித்தாய்
இனியார் விடுவார் அருணாசலா! 5

ஈன்றிடும் அன்னையின் பெரிதருள் புரிவோய்
இதுவோ உனது அருள் அருணாசலா! 6

உனை ஏமாற்றி ஓடாது உளத்தின் மேல்
உறுதியாய் இருப்பாய் அருணாசலா! 7

ஊர் சுற்றும் உளம் விடாது உனைக் கண்டு அடங்கிட
உன் அழகைக் காட்டு அருணாசலா! 8

எனை அழித்து இப்போது எனைக் கலவாவிடில்
இதுவோ ஆண்மை அருணாசலா! 9

ஏனிந்த உறக்கம் எனைப்பிறர் இழுக்க
இது உனக்கு அழகோ அருணாசலா! 10

ஐம்புலக் கள்வர் அகத்தினில் புகும்போது
அகத்தில் நீ இலையோ அருணாசலா! 11

ஒருவன் ஆம் உன்னை ஒளித்து எவர் வருவார்
உன் சூதேயிது அருணாசலா! 12

ஓங்காரப் பொருள் ஒப்பு உயர்வு இல்லோய்
உனை யார் அறிவார் அருணாசலா! 13

ஔவை போல் எனக்குன் அருளைத் தனது எனை
ஆளுவது உன் கடன் அருணாசலா! 14

கன்னுக்குக் கண்ணாய்க் கண் இன்றிக்காண் உனைக்
காணுவது எவர் பார் அருணாசலா! 15

காந்தம் இரும்பு போல் கவர்ந்து எனை விடாமல்
கலந்து எனோடு இருப்பாய் அருணாசலா! 16

கிரி உரு ஆகிய கிருபைக் கடலே
கிருபை கூர்ந்து அருளுவாய் அருணாசலா! 17

கீழ்மேல் எங்கும் கிளர் ஒளி மணி என்
கீழ்மையைப் பாழ்செய் அருணாசலா! 18

குற்றம் முற்று அறுத்து எனைக் குணமாய்ப் பணித்து ஆள்
குரு உருவாய் ஒளிர் அருணாசலா! 19

கூர்வாட் கண்ணியர் கொடுமையில் படாது அருள்
கூர்ந்து எனைச் சேர்ந்து அருள் அருணாசலா! 20

கெஞ்சியும் வஞ்சியாய்க் கொஞ்சமும் இரங்கிலை
அஞ்சல் என்றே அருள் அருணாசலா! 21

கேளாது அளிக்கும் உன் கேடு இல் புகழைக்
கேடு செய்யாது அருள் அருணாசலா! 22

கையினில் கனி உன் மெய்ரசம் கொண்டு உவகை
வெறி கொள அருள் அருணாசலா! 23

கொடியிட்டு அடியரைக் கொல் உனைக் கட்டிக்
கொண்டு எங்ஙண் வாழ்வேன் அருணாசலா! 24

கோபம் இல் குணத்தோய் குறியாய் எனைக்கொளக்
குறை என்செய்தேன் அருணாசலா! 25

கௌதமர் போற்றும் கருணை மாமலையே
கடைக்கணித்து ஆள்வாய் அருணாசலா! 26

சகலமும் விழுங்கும் கதிர் ஒளி இன(ன்) மன
சலசம் அலர்த்தியிடு அருணாசலா! 27

சாப்பாடு உன்னைச் சார்ந்து உணவா யான்
சார்ந்தமாய்ப் போவன் அருணாசலா! 28

சித்தம் குளிரக் கதிர் அத்தம் வைத்து அமுத
வாயைத்திற அருண்மதி அருணாசலா! 29

சீரை அழித்து நிர்வாணமாச் செய்து அருள்
சீரை அழித்து அருள் அருணாசலா! 30

சுகக்கடல் பொங்கச் சொல் உணர்வு அடங்கச்
சும்மா பொருந்திடு அங்கு அருணாசலா! 31

சூது செய்து என்னைச் சோதியாது இனி உன்
ஜோதி உருக்காட்டு அருணாசலா! 32

செப்படி வித்தை கற்று இப்படி மயக்கு விட்டு
உருப்படு வித்தை காட்டு அருணாசலா! 33

சேராய் எனில் மெய் நீராய் உருகிக் கண்நீர்
ஆற்று அழிவேன் அருணாசலா! 34

சை எனத் தள்ளில் செய்வினை சுடும் அலால்
உய்வகை ஏது உரை அருணாசலா! 35

சொல்லாது சொலி நீ சொல் அற நில் என்று
சும்மா இருந்தாய் அருணாசலா! 36

சோம்பியாய்ச் சும்மா சுகம் உண்டு உறங்கிடில்
சொல் வேறு என்கதி அருணாசலா! 37

சௌரியம் காட்டினை சழக்கு அற்றது என்றே
சலியாது இருந்தாய் அருணாசலா! 38

ஞமலியில் கேடா நான் என் உறுதியால்
நாடி நின் உறுவேன் அருணாசலா! 39

ஞானம் இல்லாது உன் ஆசையால் தளர்வு அற
ஞானம் தெரித்தருள் அருணாசலா! 40

ஞிமிறு போல் நீயும் மலர்ந்திலை என்றே
நேர் நின்றனை என் அருணாசலா! 41

தத்துவம் தெரியாது அத்தனை உற்றாய்
தத்துவம் இது என் அருணாசலா! 42

தானே தானே தத்துவம் இதனைத்
தானே காட்டுவாய் அருணாசலா! 43

திரும்பி அகந்தனைத் தினம் அகக்கண் காண்
தெரியும் என்றனை என் அருணாசலா! 44

தீரம் இல் அகத்தில் தேடி உந்தனை யான்
திரும்ப உற்றேன் அருள் அருணாசலா! 45

துப்பறிவு இல்லா இப்பிறப்பு என் பயன்
ஒப்பிட வாய் ஏன் அருணாசலா! 46

தூய்மன மொழியர் தோயும் உன் மெய் அகம்
தோயவே அருள் என் அருணாசலா! 47

தெய்வம் என்று உன்னைச் சாரவே என்னைச்
சேர ஒழித்தாய் அருணாசலா! 48

தேடாது உற்ற நல் திருவருள் நிதி அகத்
தியக்கம் தீர்த்து அருள் அருணாசலா! 49

தைரியமோடும் உன் மெய் அகம் நாட யான்
தட்டழிந்தேன் அருள் அருணாசலா! 50

தொட்டு அருட்கை மெய் கட்டிடாய் எனில் யான்
நட்டமாவேன் அருள் அருணாசலா! 51

தோடம் இல் நீ அகத்தோடு ஒன்றி என்றும்
சந்தோடம் ஒன்றிட அருள் அருணாசலா! 52

நகைக்கு இடம் இலை நின் நாடிய எனை அருள்
நகையிட்டுப் பார் நீ அருணாசலா! 53

நாணிலை நாட்ட நானாய் ஒன்றி நீ
தாணுவா நின்றனை அருணாசலா! 54

நின் எரி எரித்து எனை நீறு ஆக்கிடுமுன்
நின் அருள் மழை பொழி அருணாசலா! 55

நீ நான் அறப்புலி நிதம் களிமயமா
நின்றிடும் நிலை அருள் அருணாசலா! 56

நுண்ணுரு உனையான் விண்ணுரு நண்ணிட
எண்(ண) அலை இறும் என்று அருணாசலா! 57

நூலறிவு அறியாப் பேதையன் எந்தன்
மால் அறிவு அறுத்து அருள் அருணாசலா! 58

நெக்கு நெக்கு உருகி யான் புக்கிட உனைப்புகல்
நக்கனா நின்றனை அருணாசலா! 59

நேசம் இல் எனக்கு உன் ஆசையைக் காட்டி நீ
மோசம் செயாது அருள் அருணாசலா! 60

நைந்து அழி கனியால் நலன் இலை பதத்தில்
நாடி உட்கொள் நலம் அருணாசலா! 61

நொந்திடாது உந்தனைத் தந்து எனைக் கொண்டிலை
அந்தகன் நீ எனக்கு அருணாசலா! 62

நோக்கியே கருதி மெய் தாக்கியே பக்குவம்
ஆக்கி நீ ஆண்டு அருள் அருணாசலா! 63

பற்றி மால்விடம் தலையுற்று இறுமுனம் அருள்
பற்றிட அருள்புரி அருணாசலா! 64

பார்த்தருள் மால் அறப் பார்த்திலை எனின் அருள்
பார் உனக்கு ஆர் சொல்வர் அருணாசலா! 65

பித்துவிட்டு உனை நேர் பித்தன் ஆக்கினை அருள்
பித்தம் தெளி மருந்து அருணாசலா! 66

பீதியில் உனைச் சார் பீதியில் எனைச்சேர்
பீதி உந்தனக்கு ஏன் அருணாசலா! 67

புல்லறிவு ஏது உரை நல்லறிவு ஏது உரை
புல்லிடவே அருள் அருணாசலா! 68

பூமணம் மா மனம் பூரண மணம் கொளப்
பூரண மணம் அருள் அருணாசலா! 69

பெயர் நினைத்திடவே பிடித்து இழுத்தனை உன்
பெருமை யார் அறிவர் அருணாசலா! 70

பேய்த்தனம் விட விடாப்பேயாப் பிடித்து எனைப்
பேயன் ஆக்கினை என் அருணாசலா! 71

பைங்கொடியா நான் பற்றின்றி வாடாமல்
பற்றுக் கோடாய்க் கா அருணாசலா! 72

பொடியான் மயக்கி என் போதத்தைப் பறித்து உன்
போதத்தைக் காட்டினை அருணாசலா! 73

போக்கும் வரவும் இல் பொது வெளியினில் அருட்
போராட்டம்காட்டு அருணாசலா! 74

பௌதிகம் ஆம் உடல் பற்று அற்று நாளும் உன்
பவிசு கண்டுற அருள் அருணாசலா! 75

மலைமருந்து இட நீ மலைத்திடவோ அருள்
மலை மருந்தாய் ஒளிர் அருணாசலா! 76

மானங்கொண்டு உறுபவர் மானத்தை அழித்து
அபிமானமில்லாது ஒளிர் அருணாசலா! 77

மிஞ்சிடில் கெஞ்சிடும் கொஞ்ச அறிவன்யான்
வஞ்சியாது அருள் எனை அருணாசலா! 78

மீகாமன் இல்லாமல் மாகாற்று அலை கலம்
ஆகாமல் காத்தருள் அருணாசலா! 79

முடு அடி காணா முடி விடுத்து அனைநேர்
முடுவிடக் கடனிலை அருணாசலா! 80

மூக்கிலன் முன்காட்டும் முகுரம் ஆகாது எனைத்
தூக்கி அணைந்து அருள் அருணாசலா! 81

மெய்யகத்தின் மன மென்மலர் அணையில் நாம்
மெய் கலந்திட அருள் அருணாசலா! 82

மேன்மேல் தாழ்ந்திடும் மெல்லியர்ச் சேர்ந்து நீ
மேன்மை உற்றனை என் அருணாசலா! 83

மை மயல் நீத்து அருள் மையினால் உனது உண்மை
வசம் ஆக்கினை அருணாசலா! 84

மொட்டை அடித்தெனை வெட்ட வெளியில் நீ
நட்டம் ஆடினை என் அருணாசலா! 85

மோகம் தவிர்த்து உன் மோகமா வைத்தும் என்
மோகம் தீராய் என் அருணாசலா! 86

மௌனியாய்க் கல்போல் மலராது இருந்தால்
மௌனம் இது ஆமோ அருணாசலா! 87

யவன் என் வாயில் மண்ணினை அட்டி
என் பிழைப்பு ஒழித்தது அருணாசலா! 88

யாரும் அறியாது என் மதியினை மருட்டி
எவர் கொளை கொண்டது அருணாசலா! 89

ரமணன் என்று உரைத்தேன் ரோசம் கொளாது
எனை ரமித்திடச் செயவா அருணாசலா! 90

ராப்பகல் இல்லா வெறு வெளி வீட்டில்
ரமித்திடுவோம் வா அருணாசலா! 91

லட்சியம் வைத்து அருள் அஸ்திரம் விட்டு எனை
பட்சித்தாய் பிராணனோடு அருணாசலா! 92

லாபம் நீ இகபரலாபம் இல் எனை உற்று
லாபம் என் உற்றனை அருணாசலா! 93

வரும்படி சொலிலை வந்து என்படிஅள
வருந்திடு உன் தலைவிதி அருணாசலா! 94

வாவென்று அகம் புக்கு உன் வாழ்வு அருள் அன்றே
என் வாழ்வு இழந்தேன் அருள் அருணாசலா! 95

விட்டிடில் கட்டமாம் விட்டிடாது உனை உயிர்
விட்டிட அருள்புரி அருணாசலா! 96

வீடு விட்டு ஈர்த்து உளவீடு புக்குப் பைய உன்
வீடு காட்டினை அருள் அருணாசலா! 97

வெளிவிட்டேன் உம்செயல் வெறுத்திடாது உன் அருள்
வெளிவிட்டு எனைக்கா அருணாசலா! 98

வேதாந்தத்தே வேறு அற விளங்கும்
வேதப் பொருள் அருள் அருணாசலா! 99

வைதலை வாழ்த்தா வைத்து அருட்குடியா
வைத்து எனை விடாது அருள் அருணாசலா! 100

அம்புவில் ஆலிபோல் அன்பு உரு எனில் எனை
அன்பாக் கரைத்து அருள் அருணாசலா! 101

அருணை என்று எண்ண யான் அருள் கண்ணி பட்டேன்
உன் அருள்வலை தப்புமோ அருணாசலா! 102

சிந்தித்து அருள்படச் சிலந்தி போல் கட்டிச்
சிறையிட்டு உண்டனை அருணாசலா! 103

அன்பொடு உன் நாமம் கேள் அன்பர்தம் அன்பருக்கு
அன்பன் ஆயிட அருள் அருணாசலா! 104

என்போலும் தீனரை இன்புறக் காத்து நீ
எந்நாளும் வாழ்ந்து அருள் அருணாசலா! 105

என்புருகு அன்பர்தம் இன் சொற்கொள் செவியும் என்
புன்மொழி கொள அருள் அருணாசலா! 106

பொறுமையாம் பூதர புன்சொலை நன்சொலாப்
பொறுத்து அருள் இஷ்டம் பின் அருணாசலா! 107

மாலையளித்து அருணாசல ரமண என்
மாலை அணிந்து அருள் அருணாசலா! 108

அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலா!
அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலா!

❑ ❑ ❑

# இணைப்புக்கள்

## 1. மேற்கோள் குறியீடுகளின் விரிவுப் பட்டியல்

| | குறியீடு | விரிவு |
|---|---|---|
| 1 | அ - தி தே - | அப்பர் திருக்குறுக்கை தேவாரம் |
| 2 | அ - தே - | அப்பர் தேவாரம் |
| 3 | அ நா - தி - | அருணகிரி நாதர் திருப்புகழ் |
| 4 | அ நா- க அ - | அருணகிரி நாதர் கந்தர் அலங்காரம் |
| 5 | அ ப - அ அந் - | அபிராமி பட்டர் அபிராமி அந்தாதி |
| 6 | ஆ ச - சி ல - | ஆதி சங்கரர் சிவானந்தலஹரி |
| 7 | ஆ ச - செள ல - | ஆதி சங்கரர் செளந்தர்யலஹரி |
| 8 | ஆ ச - ப கோ - | ஆதி சங்கரர் பஜ கோவிந்தம் |
| 9 | ஆ ச - ஸ்ரீ சு பு - | ஆதி சங்கரர் ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம் |
| 10 | ஆ ச.- வி சூ - | ஆதி சங்கரர் விவேக சூடாமணி |
| 11 | க - பு நா - | கபிலர் புறநானூறு |
| 12 | கீ சா - | கீதா சாரம் |
| 13 | ச - தே - | சம்பந்தர் தேவாரம் |
| 14 | சி சி - | சிவஞான சித்தியார் |
| 15 | சி சு - நா நா மா - | சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணி மாலை |
| 16 | சி ல - | சிவானந்தலஹரி |
| 17 | சு.- தே - | சுந்தரர் தேவாரம் |
| 18 | சே-பெ பு -தி கூ சி - | சேக்கிழார் பெரிய புராணம் - திருக்கூட்டச் சிறப்பு |
| 19 | தா - ப க -<br>தா.பா. | தாயுமானவர் பராபரக் கண்ணி<br>தாயுமானவர் பாடல்கள் |

| | | |
|---|---|---|
| 20 | தி கு - | திருக்குறள் |
| 21 | தி நா - தே. - | திருநாவுக்கரசர் தேவாரம் |
| 22 | தி வ - தி கு - | திருவள்ளுவர் திருக்குறள் |
| 23 | தி.மூ. - தி.ம. - | திருமூலர் திருமந்திரம் |
| 24 | திரு.செ.க - இரா ப | திருச்செந்தூரின் கடலோரத்தில் - இராமநாதன் பழனியப்பன் |
| 25 | நா தி ப - | நாலாயிர திவ்ய பிரபந்தம் |
| 26 | நா ப சூ - | நாரத பக்தி சூத்திரம் |
| 27 | ப ர ம - அ ம மா - | பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி அருணாசலஅக்ஷர மண மாலை |
| 28 | ப ர ம - தி - | பகவான் ரமண மகரிஷி திரட்டு |
| 29 | பட் - நெ பு - | பட்டினத்தார் நெஞ்சொடு புலம்பல் |
| 30 | பட் - நெ ம - | பட்டினத்தார் நெஞ்சொடு மகிழ்தல் |
| 31 | ப்ரஹ் உப - | ப்ரஹதாரண்ய உபநிடதம் |
| 32 | ம வா - தி வா - | மணிவாசகர் திருவாசகம் |
| 33 | மா தி - தி வெ - | மாணிக்கவாசகரின் திருவெண்பா |
| 34 | மா வா - தி சி பு - | மாணிக்கவாசகரின் சிவ புராணம் |
| 35 | ஸ்ரீ வி ஸ - | ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாமம் |

## 14.02. நூல் உருவாக உதவிய ஆவணங்கள் மிகுந்த நன்றி உணர்வோடு இங்கே பட்டியலிடப் பெற்றுள்ளன

| | ஆவணத்தின் பெயர் | ஆசிரியர் | ஆவண வகை | வெளியீடு | ஆண்டு |
|---|---|---|---|---|---|
| 1. | ஆதிசங்கரர் அருளிச்செய்த சிவானந்த லஹரி | திருமுருக கிருபானந்த வாரியார் | புத்தகம் | குகஸ்ரீ வாரியார் பதிப்பகம் | 2002 |
| 2. | சிவானந்தலஹரி | பாஷ்யம் "அண்ணா" | புத்தகம் | ஸ்ரீ ராம கிருஷ்ண மடம் | 1965 |
| 3. | சிவானந்தலஹரி (ஆங்கிலம்) | ந.ஆனந்தராமன் | புத்தகம் | சி .பி.எச்.பதிப்பகம் | 1985 |
| 4. | சிவானந்தலஹரி (ஆங்கிலம்) | Dr.கமலா சிதம்பரம் | புத்தகம் | சின்மயா மிஷன் | 1989 |
| 5. | சிவானந்தலஹரி (ஆங்கிலம்) | சுவாமி தபஸ்யாநந்தா | புத்தகம் | ஸ்ரீ ராம கிருஷ்ண மடம் | 1985 |
| 6. | சௌந்தர்யலஹரி | ஆதிசங்கரர் கணேசய்யர் | புத்தகம் | கிரி டிரேடிங் | 2003 |
| 7. | சௌந்தர்யலஹரி | பாஷ்யம் "அண்ணா" | புத்தகம் | ஸ்ரீ ராம கிருஷ்ண மடம் | 1989 |
| 8. | ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கரர் அருளிய அருள் அமுது | அ.வெ.ர.கிருஷ்ணசாமி ரெட்டியார் | புத்தகம் | திருவடி பதிப்பகம் | 2009 |
| 9. | ஜகத்குரு ஸ்ரீ சங்கரசரிதம் | எச்.பத்மநாபன் | புத்தகம் | தேசீய மொழிகள் நிறுவனம் | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 10. | சங்கரா (ஆங்கிலம்) | சின்மயா மிஷன் | புத்தகம் | சின்மயா மிஷன் | 1978 |
| 11. | ஸ்ரீ ரமண வழி (மூன்றாம் பாகம்) | சாதனை சாரம் ஸ்ரீ சாது ஓம் | புத்தகம் | ஸ்ரீ அருணாசல ரமண நிலையம் | 1983 |
| 12. | அருணாசல அக்ஷர மணமாலை | ஸ்ரீ ரமண மகரிஷி - முருகனார் விருத்தியுரை | புத்தகம் | ஸ்ரீ ரமணாச்ரமம் | 1952 |
| 13. | ஸ்ரீ ரமண மகரிஷி | பாலகுமாரன் | புத்தகம் | விகடன் பிரசுரம் | 2012 |
| 14. | நாட்டுக்கு உழைத்த நல்லவர் ரமண மகரிஷி | எம்.வி.வெங்கட்ராம் | புத்தகம் | பழனியப்பா பிரதர்ஸ் | 1970 |
| 15. | சிவானந்தலஹரி மூலமும் உரையும் | எஸ். ராமன் | இணைய தளம் | | |
| 16. | சிவானந்தலஹரி கவிதை (ஆங்கிலம்) | பி.ஆர்.ராமச்சந்தர் | இணைய தளம் | | |
| 17. | தெய்வத்தின் குரல் | காஞ்சிப் பெரியவர் ரா கணபதி | புத்தகம் | வானதி பதிப்பகம் | 1999 |
| 18. | நான் யார்? | ரமண மகரிஷி | புத்தகம் | விஜயா பதிப்பகம் | 2012 |
| 19. | பஜ கோவிந்தம் - ஆதிசங்கரர் | மும்பை ராமகிருஷ்ணன் | புத்தகம் | | |
| 20. | பஜ கோவிந்தம் - ஆதிசங்கரர் | ராஜாஜி | புத்தகம் | | |
| 21. | பஜ கோவிந்தம் - ஆதிசங்கரர் | சின்மயானந்தா | புத்தகம் | சின்மயா மிஷன் | 2005 |
| 22. | பஜ கோவிந்தம் - ஆதிசங்கரர் | கண்ணதாசன் | புத்தகம் | | |
| 23. | "தத்வலோகா" பத்திரிகைக் கட்டுரைகள் | பேராசிரியர் வி.கிருஷ்ண மூர்த்தி | பத்திரிகை | தட்சணாமூர்த்தி ஸ்ரீ சாரதா பீடம், சிருங்கேரி | |

# நூலாசிரியர்



முத்தமிழ் வளர்ச்சிக்கு முன்னின்று உழைத்துவரும், **நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபில்**, புதுக்கோட்டை மாவட்டம் பொன்.புதுப்பட்டியில் **மூ.பழ.பரம்பரையின்** தலைமுறை தழைக்கப் பிறந்தவர் **திரு.இராமநாதன் பழனியப்பன்.** பணிவு, பத்திமை, பண்பாடு, நேர்மை நெறி நிற்பவர். அன்பும், கனிவும், பாசமும் மிக்க இவருக்கு இறைவன் தந்த நல்வரமான **இனிய மனைவி விசாலாட்சி ஆச்சி,** பெருமை சேர்க்கும் மக்கட் செல்வங்கள் **இராமநாதன், நடராஜன், லக்ஷ்மி அடைக்கலவன், மருமகள்கள்** மற்றும் பேரன்களோடு வாழ்க்கை நெறியிலும் வளமை கண்டவர்.

**பொறியியல் பட்டதாரியான** இவர் பத்தாண்டு காலப் பணிக்குப் பின்னர் தாமே பல்தொழில்களை நிறுவி, தமது பிள்ளைகளோடு அவற்றை இயக்கி வருகிறார். ஐ.நா., மத்திய, மாநில அரசுகளின் தொழில் மேம்பாட்டு நிறுவனங்களுக்கும், வங்கிகளுக்கும், தனியார் நிறுவனங்களுக்கும் ஆலோசகராகவும், இயக்குனராகவும் பணி செய்தவர், செய்து கொண்டு இருப்பவர்.

தொழில் துறையில் இருந்தாலும், தொன்மைத் தமிழ் இலக்கியங்களிலும், ஆதி சங்கரரது நூல்களிலும், ஆன்மிகத்திலும் ஈடுபாடு கொண்ட இவர், சென்னை ஆன்மிக-இலக்கிய வட்டத்தின் நிறுவனர் - தலைவர். அதன் வழி **திருக்குறள், திருமுறை, திவ்யப் பிரபந்தம், அபிராமி அந்தாதி** பற்றிக் கற்றறிந்த சான்றோர்களின்

விரிவுரைகளைப் பதிவு செய்து குறுந்தகடுகளாகவும், ஒலிப்பேழை களாகவும் வெளிக் கொணர்ந்தவர். இவை பற்றித் தமிழிலும், ஆங்கிலத்திலும் தொடர் உரை ஆற்றி வருபவர். பெரிய புராண நாயன்மார் அருள் வரலாற்றுக் குறுந்தகடுகளுக்கு ஆங்கில வரலாற்றுச் சுருக்க உரை எழுதி வழங்கியவர். **"ஆன்மிகப் பயணத்தில் ஆயிரத்தெட்டு லிங்கங்கள் - கம்போடியா"** என்ற நூலினையும் ஆதி சங்கர பகவத் பாதரின் **ஸ்ரீ ஸுப்ரமண்ய புஜங்கம்** என்ற அரிய துதிப்பாடலுக்கு ஒரு எளிய தமிழாக்கமும், விரிவான விளக்க உரையும் அடங்கிய **"திருச்செந்தூரின் கடலோரத்தில்..."** என்ற நூலினையும் எழுதி வழங்கியவர். இந்நூல் 2011 ஆம் ஆண்டின் சிறந்த ஆன்மிக நூல் என்பதற்கான **தமிழக அரசின் விருதி**னைப் பெற்றது. 2013ஆம் ஆண்டு **"மங்கையர்க்கரசி, எங்கள் தெய்வம்"** என்ற அவரது அடுத்த நூல் **"இலக்கியச் சிந்தனை"** அமைப்பின் 43 ஆவது ஆண்டு நிறைவு விழாவில் வெளியிடப் பெற்றது, சென்னை **சேக்கிழார் ஆராய்ச்சி மையம்** சார்பில் **சிறந்த நூலுக்கான பொற்கிழி பெற்றது**. பின்னர் 2014 ஆம் ஆண்டு இலக்கியச் சிந்தனை 44ஆவது ஆண்டு நிறைவு விழாவில் இவரது **"அபிராமி சமயம் நன்றே"** என்ற அடுத்த நூல் வெளியிடப் பெற்றது

**"விசாலாட்சி-பழனியப்பன் அறக்கட்டளை"**யின் நிறுவனர் - தலைவர். அதன் வழி சமூக நலப் பேணலும், ஆன்மிகத் தொண்டும் அறப்பணிகளும் செய்து வருகிறார்.

**செய்வன திருந்தச் செய்யும் செம்மை - இவரது இலட்சியம்.**

தொடர்புக்கு : rpal@sellvindsgroup.com
+91 98410 11220

